FAS-534

நவ நாகரீக
பெண்கள் விரும்புவது



டி.எஸ்.ஆர்.
கோகுல்
ஹேர் ஆயில்





டி.எஸ்.ஆர் & கோ.
கும்பகோணம்.

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:
சுராஜ் ஏஜன்ஸீஸ்
10, ஆரணிபாட்சா சாஹிப் தெரு, சென்னை-14

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு
சோல் ஏஜண்டுகள்,
B. பாலபட்டாபி செட்டியார்
846, வைசியாள் தெரு - கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு:
சேகர்ஸ், திருப்பத்தூர் (வ. ஆ.)

---

"கல்கி" ஆசிரியர் எழுதிய

# பார்த்திபன் கனவு

தமிழ் நாட்டுச் சரித்திரத்தின்
மகோன்னத காலத்தை அற்புத
மாக விளக்குகின்றது

விலை ரூ. 6-8-0

•

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின்
பெருமையையும் அவர் இந்தியாவுக்கு
ஆற்றி வரும் அருந் தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் வெகு அழகாக
விளக்கி யிருக்கிறார்.

•

விலை அணா எட்டு
(தபால் செலவு தனி)

•

சசி தேவி
எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபாற் செலவு தனி)

•

கிடைக்குமிடம்

## கல்கி காரியாலயம்

கீழ்ப்பாக்கம் :: சென்னை


ஸ்பாரவளி
வெளியீடு
உணர்ச்சியை
ஊட்டும்.....
உள்ளத்தை
உருக்கும்....
பக்ஷிராஜாவின்
ஏழை
படும்
பாடு
நாகய்யா..லலிதா..பத்மினி
சாமா...பாலய்யா..துரைராஜ்
சீதாராமன்.கோபாலகிருஷ்ணன்
டைரக்ஷன்: K.ராம்நாத்
NARAYANAN Co
Release


கர்ணாமிர்த கானங்கள்
நிறைந்த
மகத்தான புராணப் படம்..
பாரிஜாதம்
முற்றிலும் புதிய அம்சங்கள் நிறைந்தது
ஏராளமான பொருட்செலவில்
லேனா பிக்சர்ஸார்
தயாரித்தது
தீபாவளி அன்று
வெளி வருகிறது!



Toilet Soap

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 10 இதழ் 14 | அக்டோபர் 5 | விக்ருதி ஐப்பசி 20




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# தீபாவளி விசேஷ விற்பனை

# R. S. E.

சிறந்த வேலைப்பாடோடு கூடிய, உயர்ந்த கொள்ளை காலம் பட்டுச் சேலைகளுக்கும் பலவூர் நூல் ஜவுளி நினுசுகளுக்கும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விஜயம் செய்யுங்கள்.

தீபாவளி நெருக்கடியில் நண்பர்கள் தங்கள் தேவையைத் தேர்ந்தெடுப்பதற்கு சிரமப்படக் கூடும் என்பதற்காகவே ஏராளமான ஜவுளியை இப்போதே சேமித்து வைத்திருக்கிறோம்.

இன்றே விஜயம் செய்து தங்களுக்குத் தேவையானதை பொறுக்கி எடுத்துச் செல்லக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

★

## — ராதா —
## ஸில்க் எம்போரியம்

போன் : 84188

14, சன்னதி தெரு, மயிலாப்பூர், சென்னை

★

## ருக்மணி ஸில்க் எம்போரியம்

போன்|: 58

48-49, பெரிய தெரு, கும்பகோணம்

# FREE PRIZE



தீபாவளிக்காக மிகக் குறைந்த விலை

ஒரே பாக்கிங்கில் மூன்று கடிகார ஆர்டருக்கு ஒரு இம்பீரியல் அலாரம் டேபிள் க்ளாக் இலவசம். ஒவ்வொன்றும் 5 வருஷ உத்திரவாதம்



| சைஸ் 10½'' | | ஜுவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 801 | க்ரோம் ஸ்டீல்பாக் | 5 | 35 |
| 813 | க்ரோம் சென்டர் செகண்டு | 5 | 28 |
| 804 | க்ரோம் ஸ்டீல்பாக் | 7 | 30 |
| 805 | ரோல்டு கோல்டு | 7 | 39 |
| 807 | க்ரோம் ஸ்டீல்பாக் | 15 | 48 |
| 861 | வாட்டர் & ஷாக் ப்ரூப் | 15 | 62 |



| சைஸ் 7¾'' | | ஜுவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 879 | க்ரோம் ஸ்டீல்பாக் | 5 | 35 |
| 880 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பாக் | 5 | 39 |
| 882 | க்ரோம் ஸ்டீல்பாக் | 15 | 48 |
| 883 | ரோல்டு கோல்டு | 15 | 61 |
| 885 | 20 மைக்ரான் கோல்டு | 15 | 68 |



| சைஸ் 6¾'' | | ஜுவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 900 | க்ரோம் ஸ்டீல்பாக் | 5 | 34 |
| 903 | ரோல்டு கோல்டு | 5 | 39 |
| 905 | க்ரோம் ஸ்டீல்பாக் | 7 | 45 |
| 911 | ப்ரஸிஷன் | 15 | 50 |
| 896A\|20 | மைக்ரான் கோல்டு | 15 | 68 |



| சைஸ் 8¾'' | | ஜுவல்ஸ் | ரூ. |
|---|---|---|---|
| 839 | க்ரோம் ஸ்டீல்பாக் ரேடியம் | 7 | 30 |
| 840 | க்ரோம் ஸ்டீல்பாக் | 15 | 56 |
| 841 | ரோல்டு கோல்டு | 15 | 66 |
| 854 | வாட்டர் & ஷாக் ப்ரூப் | 5 | 44 |
| 855 | ரோல்டு கோல்டு | 5 | 48 |
| 863 | வாட்டர் ப்ரூப் | 15 | 63 |
| 865 | ரோல்டு கோல்டு ஸ்டீல்பாக் | 15 | 73 |

Packing, Postage, Sales Tax Free

## CARONA WATCH Co

POST BOX No. 6729, CALCUTTA-7

மலர் 10

# கல்கி

இதழ் 14

## என்ன சேதி ?

### வெட்டி வேலை !

சென்னை மாநகரில் சென்ற சில நாட்களாகச் சிலர் வெறும் வெட்டி வேலைகளில் ஈடுபட்டு வருகிறார்கள். வட இந்தியர்களுக்குச் சொந்தமான ஹோட்டல் வாயிலில் நின்று கொண்டு மறியல் செய்கிறார்கள். இம்மாதிரியே ஒரு வட இந்தியரின் ஜவுளிக்கடை முன்னால் நின்றும் மறியல் செய்கிறார்கள். இது போலீஸாருக்கு அநாவசியமான வேலை கொடுக்கும் வெட்டி வேலையைத் தவிர வேறொன்றும் இல்லை. இதனால் பலன் ஒன்றும் விளையப் போவதில்லை. அதாவது அவர்கள் கோரும் பலன் கூட விளையப் போவதில்லை. ஆனால் அவர்கள் கோராத, எதிர்பாராத விபரீத பலன்கள் சில ஏற்படுதல் கூடும்.

இந்தியப் பிரஜை எவரும் இந்தியாவில் உள்ள எந்த இடத்திலும் சட்ட பூர்வமான எத்தகைய வியாபாரத்திலும் தொழிலிலும் யாதொரு ஆட்சேபணையுமின்றி ஈடுபடலாம். இது இந்தியரின் ஜீவாதார உரிமைகளில் ஒன்று என்று குடியரசு இந்தியா அரசியல் திட்டம் எள்ளளவும் சந்தேகத்துக்கு இடமின்றிக் கூறுகிறது. எனவே இவ்விதம் வட இந்தியர் கடைகளை மறியல் செய்வது அரசியல் திட்டத்துக்கு முற்றிலும் மாறான சட்டவிரோதமான காரியம்.

இந்தியா முழுவதும் ஒரே நாடு. இதில் வட இந்தியா வட இந்தியருக்கும் தென்னிந்தியா தென்னிந்தியருக்கும் மாத்திரம் தான் சொந்தம் என்று கூறுவது நியாயமும் இல்லை; அறிவுடைமையும் இல்லை. இந்தியர் எல்லோரும் இந்த நாட்டு மன்னர். இந்தியர் யாவருக்கும் இந்தியா சொந்தமானது. இந்த உண்மையை, இந்த ஜீவாதார உரிமையை மறுப்பது நியாயமற்ற நெறி தவறிய செய்கை; அரசியல் சாஸனத்துக்கு விரோதம்.

சில நண்பர்கள் தமிழ் நாட்டுக்குத் தனியரசு வேண்டும் என்று கோருகிறார்கள். இவர்களுடைய கோரிக்கையைப் பெரும்பாலான பொது மக்கள் ஒப்புக்கொண்டு அது நிறைவேறினால், அப்படி நிறுவப்படும் தனித் தமிழரசில் வட இந்தியர் வந்து இஷ்டப்பட்ட தொழில்களையோ வியாபாரங்களையோ நடத்தும் உரிமை இருக்கும்; இருக்க வேண்டும். அப்படிப் பட்ட உரிமை கொடுக்கப் போவதில்லையென்றால் தனித்தமிழ் அரசு ஒரு நாளும் வரப்போவதில்லை என்று நாம் ஐயமறச் சொல்ல முடியும்.

இந்தியா தேசம் சுதந்திரம் பெற்று விட்டது. ஆயினும் இங்கே எந்த ஆங்கிலேயரும் ஸ்காட்லாந்தியரும் வந்து வர்த்தகமோ, தொழிலோ நடத்தலாம். தடுப்பார் யாருமில்லை. ஜனங்களும் தடுக்கவில்லை; சர்க்காரும் தடுக்கவில்லை. இம்மாதிரி உரிமை இந்தியர்களுக்கு இங்கிலாந்திலும் ஸ்காட்லாந்திலும் உண்டு. அந்நாடுகளில் போய் நாம் தொழில் நடத்துவதை யாரும் தடுப்பதில்லை. இது தான் நாகரிகத்திற்கும் உயர்ந்த பண்பாட்டுக்கும் அழகு. இதற்கு எதிரான காரியங்கள் அநாகரிகமானவை; அவகேடானவை; பண்பாடு இல்லாத மக்கள் செய்யக் கூடியவை.

இந்தியாவில் தொழில் துறைகள் அபிவிருத்தியடைய வேண்டும் என்பதற்காக வெளிநாட்டினரின் மூலதனத்தை இந்திய சர்க்கார் வரவேற்கிறார்கள். ஆனால் இந்தியாவின் பொதுச் சட்ட திட்டங்களுக்கு உட்பட வேண்டும் என்றும் தனிப்பட்ட சலுகைகளும் உரிமைகளும் கேட்கக் கூடாது என்று மட்டுமே சொல்கின்றனர். அப்படியிருக்க, இந்தியாவின் ஒரு பகுதியைச் சேர்ந்தவர்கள் மற்றொரு பகுதியில் தொழில் செய்யக் கூடாது எனில் அது பிசகான கூற்று அல்லவா?

### விபரீத பலன்—1

மேற்படி வட இந்தியக் கடைகளின் மறியல் வெறும் வெட்டிவேலை யென்று நாம் அலட்சியம் செய்துவிடலாம். தமிழ்ப் பெரு மக்களின் ஆதரவைப் பெறப்போவதில்லை யென்றும் உறுதி கொண்டிருக்கலாம். ஆனால், அதனால் வேறு விதத்தில் விளையக்கூடிய விபரீத பலன்களை யோசிக்கும்போது இந்த அர்த்தமற்ற—பயனற்ற மறியலை—அழுத்தமாகக் கண்டிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

# தீபாவளி வேடிக்கை



பட்டாசு வெடிச் சத்தத்தைக் கேட்டு
பாபு ராஜேந்திரப் பிரசாத் ஏதோ சங்கீதக்
கச்சேரி நடக்கிறது
என்று திகைக்கலாம்.
குழந்தைகளுக்குப் பட்டாசு
வெடிகள் வாங்கிக்
கொடுக்கப் பண்டித நேரு
முயற்சிக்கலாம்.
அடடா! வெடிகள்
எல்லாம் தீர்ந்து
விட்டனவே
...எண்ணெய் ஸ்நானம் செய்து
கொள்ளும்படி சர்தார் படேல்
மாஜி மன்னர்கள் தாஜா செய்யலாம்...

சாஸ்திரி


பாரத நாரீமணிகள் உணவு மந்திரி முன்ஷிக்கு விதவிதமான பட்சண வகைகளைச் செய்து கொடுத்து அவற்றைச் சாப்பிட்டுத் தீர வேண்டும் என்று வற்புறுத்தலாம்.
வெடிக்காத பட்டாசு வெடிகளை வெடிக்க வைக்க ஆச்சாரிய கிருபளானி ஆசைப்படலாம்.
காங்கிரஸ் அக்ராசனர் புருஷோத்தம தாஸ் தாண்டன் சுத்தமான உடலையும் உள்ளத்தையும் பரிசுத்தம் செய்வதற் காகப் புனித கங்கா நதியில் வழக்கத்தை விட அதிக நேரம் ஸ்நானம் செய்யலாம்.
SHASTRY

தென்னிந்தியாவிலிருந்து சென்றிருக்கும் ஆயிரக் கணக்கானவர்கள் பம்பாயிலும் டில்லியிலும் கல்கத்தாவிலும் நாகபுரியிலும் ஜெம்ஷெட்பூர் முதலிய இடங்களிலும் பலவகை உத்தியோகங்களிலும் தொழில் துறைகளிலும் இருக்கிறார்கள். இப்போது வடநாட்டில் பத்து லட்சக் கணக்கில் அகதிகள் வேலையின்றி, ஜீவனோபாயமில்லாத் திண்டாடுகிறார்கள் என்பதையும் நாம் மனதில் வைத்துக் கொள்ளலாம். இந்த நிலையில் அகதிகளின் பரிதாப நிலையை முன்னிட்டுத் தென்னிந்தியர்கள் வடநாட்டில் எந்தவித உத்தியோகமும் தொழிலும் பார்க்கக் கூடாது என்று வட இந்தியர்கள் தீர்மானித்தால் லட்சக் கணக்கில் உள்ள நம் சகோதரர்களின் கதி என்ன ஆகிறது? வட இந்தியர்கள் மறியல் செய்வது, மற்ற வகைகளில் கிளர்ச்சி செய்வது என்று முடிவு செய்தால், நம்மவர்கள் என்ன செய்ய முடியும்? அகதிகளின் பரிதாப நிலைமை காரணமாக வட இந்தியாவில் பெரும் வெறி தோன்றிப் பரவக்கூடிய சூழ்நிலை இருக்கிறது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. சென்னையில் உள்ள வட இந்தியர்களின் வர்த்தகத் தொழில்களை நாம் மறியல் செய்தால் வட இந்தியர்களிடையே வெறி பரவாமலிருக்கும் என்று யார் உத்தரவாதம் கொடுக்க முடியும்?

### விபரீத பலன்—2

இலங்கை, பர்மா, மலேயா, இந்தோனேஷியா, பீஜி, தென்னாப்பிரிக்கா, மோரிஷியஸ் முதலிய வெளி நாடுகளில் நாற்பது லட்சம் இந்தியர்களுக்குமேல் வசித்து வருகிறார்கள். அந்த நாடுகளிலே சிலவற்றில் இந்தியர்களுடைய உரிமைகளுக்கும் உடைமைகளுக்கும் அங்குள்ள சர்க்கார்களால் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. அந்த ஆபத்துக்குப் பரிகாரம் தேடுவதற்காக இந்திய சர்க்காரும் நம் மாகாண சர்க்கார்களும் எத்தனையோ பாடுபட்டு வருகிறார்கள். அந்தந்த நாடுகளில் உள்ள இந்தியர்களும் பெருங் கிளர்ச்சி செய்து தாய் நாட்டிலுள்ள நம்மவர்களின் ஆதரவையும் கோருகிறார்கள்.

அப்படியிருக்க, இந்தியாவின் ஒரு பகுதியில் மற்றொரு பகுதியைச் சேர்ந்தவர்களுக்கு இடம் இல்லை என்று சொல்லும் சட்ட விரோத, நியாய விரோத, அறிவுக்கு விரோதக் கிளர்ச்சியைப் பிரமாதப் படுத்தி, மேற்படி நாடுகளில் உள்ள சர்க்கார்கள் தங்களுடைய விபரீதமான சட்ட திட்டங்களுக்கு ஆதாரமாகக் கட்டிக் காட்டலாம் அல்லவா? எனவே, சென்னையில் நடக்கும் சிறு தவறான காரியம் வெளி நாடுகளில் வாழும் பல லட்சம் இந்திய சகோதரர்களின் உரிமைகளுக்கும் உடைமைகளுக்கும் உலை வைப்பதாக முடியும் என்பதைச் சிந்திக்கவேண்டும். அத்தகைய பெரும் விபரீதத்துக்கு இடம் கொடுக்காமல் இருக்க வேண்டுமாயின் வடநாட்டுக் கடை மறியல் வேலைக்கு உடனே முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்.

தமிழ் நாட்டில் தமிழர்களின் ஆட்சியும் தமிழர் தொழில் நலமும் தமிழர் செல்வாக்கும் தமிழ் மொழியின் ஆக்கமும் தலைசிறந்து விளங்கவேண்டும் என்னும் ஆர்வமுடையவர்கள் நாம். இத்தகைய இலட்சியத்தை நாம் பலமாக ஆதரித்திருக்கிறோம். இனியும் பலமாக ஆதரிப்போம். ஆனால் இந்த இலட்சியம் கைகூடுவதற்கு மறியல்காரர்கள் கையாளும் முறை முற்றும் தவறானது என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. அதனால் மேற்படி இலட்சியம் கைகூடாது; இலட்சியத்துக்குப் பாதகம் விளையும்; வேறு பல விபரீத பலன்களும் ஏற்பட்டு விடும்.

வடநாட்டுக் கடை மறியலை உடனே நிறுத்தியாக வேண்டும். அவர்களாக நிறுத்தாவிட்டால், காங்கிரஸ் சர்க்கார் தலையிட்டு நிறுத்த வேண்டும். இல்லாவிட்டால் தமிழ் நாட்டின் பெயர் உலகமெங்கும் சிரிப்பாய்ச் சிரிக்கும்.



○●○

## குமாரி எஸ். சீதா

சுகாதார மந்திரியின் காரியதரிசி ஸ்ரீ வி. சுப்பிரமணியத்தின் மருமான் குமாரி எஸ். சீதா சென்ற மாதம் 24-ந் தேதி காலையிலும் மாலையிலும் திருச்சி வானொலி நிலையத்தில் பாடினார். அவர் பாடியது அரை மணி நேரந்தான் என்றாலும் கச்சேரி தரமாய் அமைந்திருந்தது.

○●○

# உலகத்தின் சிகரத்திலே...

இன்றைய உலகப் பொருளாதார நிலைமையையும் சுமார் இருபது வருஷங்களுக்கு முன் இருந்த நிலைமையையும் சிறிது ஒப்பிட்டுப் பார்ப்போம்.

இன்று உலக ஜனங்களுக்குத் தேவையான அளவுக்குப் பண்டங்கள் உற்பத்தியாகவில்லையே என்று எல்லோரும் நினைக்கிறார்கள்.

ஆனால், அன்று ஜனங்களின் தேவையைக் காட்டிலும் அபரிமிதமாக உற்பத்தியான பண்டங்களை என்ன செய்வது என்று திண்டாடினார்கள்.

இன்று விலைவாசிகளின் உயர்வினால் உலக மக்கள் அல்லல் படுகிறார்கள்.

அன்று விலைவாசிகளின் படு வீழ்ச்சியில் மனித வர்க்கம் படாதபாடுபட்டது.

அம்மியும் குழவியும் ஆலாய்ப்பறந்த ஆடிக் காற்றிலே இலவம் பஞ்சின் கதி என்னவென்று கேட்க வேண்டுமா?

சுபிட்சமாக இருந்த அமெரிக்கா தேசமே உலகம் கண்டிராத மேற்படி நெருக்கடியினால் உய்ய வழியின்றித் தவியாய்த் தவித்தது எனில், மற்ற நாடுகளின் கதியைக் குறித்துச் சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

உற்பத்தி அபரிமிதமாகப் பெருகியது. பண்டசாலைகள் வாயால் வழிந்தன. ஆனால் அவசியத் தேவையான பண்டங்களை வாங்குவதற்குக் கூட ஜனங்களிடம் காசு இல்லை.

அதாவது இன்று பணப் புழக்கம் அதிகமாக இருக்கிறது; பண்டங்கள் இல்லை. ஆனால் அன்று பண்டங்கள் அதிகமாக இருந்தன; பணம் இல்லை.

உற்பத்தியான பண்டங்கள் தேங்கிக் கிடந்தபடியால் மேற்கொண்டு உற்பத்தி செய்ய வேண்டிய அவசியமின்றித் தொழிற்சாலைகள் மூடப்பட்டன.

அதன் விளைவாக அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் மாத்திரம் மூன்று கோடி பேருக்குமேல் வேலையில்லாமல் திண்டாட நேர்ந்தது.

இந்தியா, சீனா உள்பட ஆசியாவில் வேலையின்றித் திண்டாடியவர்களின் தொகை எத்தனை கோடி இருக்குமோ!

இவ்வாறாக, உலக நாடுகள் எல்லாம் வர்த்தக மந்தத்தினாலும் பணக் கஷ்டத்தினாலும் பரிதவித்து வருகையில், ஒரே ஒரு நாடு மாத்திரம் மேற்படி துன்பங்களுக்கு இலக்காகாமல் தப்பியது என்றால் ஆச்சரியம் அல்லவா? அத்தகைய அபூர்வமான பாக்கியத்தைப் பெற்ற நாடு எது என்று வியப்புடன் கேட்கத் தோன்றுகிறது அல்லவா?

அந்த நாடுதான் "உலகத்தின் சிகரம்" என்று பிரசித்திபெற்ற திபேத்!

* * *

நாலரை லட்சம் சதுர மைல் விஸ்தீரணம் உள்ள திபேத் நாட்டைச் சுற்றி ஹிமயமலை மாபெரும் சுவரைப் போல் காட்சியளிக்கிறது.

திபேத் எல்லையில்தான் உலகத்திலேயே உன்னதமான எவரஸ்ட் போன்ற சிகரங்கள் இருக்கின்றன. எனவே, இந்த அகில உலகிலும் உயரத்திலே திபேத்தைப் போன்ற உயர்ந்த நாடு வேறு எதுவும் இல்லை!

அந்த நாட்டில் பௌத்த சந்நியாசிகள் ஆட்சி புரிகின்றனர். இது உலகத்தில் வேறு எங்கும் காண முடியாத புதுமையாகும்.

உலகத்திலே உயரத்திலும் அகலத்திலும் நீளத்திலும் காம்பீர்யத்திலும் இணையில்லாத ஹிமயமலையின் உச்சியில் இருக்கும் திபேத்தை, அன்று உலகத்தைப் பீடித்த துன்பங்களால் எட்டிப் பிடிக்க முடியவில்லை போலும்!

திபேத்தில் உள்ள பள்ளத்தாக்கு உலகத்திலுள்ள மலைகளைக் காட்டிலும் அதிக உயரமானது. எனவே, திபேத்துக்கு உலகத்தின் சிகரம் என்ற பெயர் எவ்வளவு பொருத்தமானது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

அவ்வாறு மனிதராலும் மனிதரை ஆட்டி வைத்த தொல்லைகளாலும் நெருங்க முடியாத திபேத்தைக் கூட இப்போது ஒரு ஆபத்து நெருங்கி ஆட்கொண்டு விட்டது.

ஆசியா நாடுகள் பலவற்றையும் பதறவும் கதறவும் செய்து வரும் போர் வெறி மாபெரும் மலையுச்சியில் இருக்கும் திபேத்திலும் இப்போது பிரவேசித்து விட்டது!

பல ஆண்டுகள் வரையில் திபேத் சீனாவின் ஆதிக்கத்தில் இருந்து வந்தது. பின்னர் திபேத் மக்கள் சீனர்களை விரட்டி விட்டுச் சுயாட்சி ஏற்படுத்திக் கொண்டார்கள். எனினும் 1930-ம் வருஷம் வரையில் சீனாவுக்கும்

திபெத்துக்கும் அடிக்கடி சண்டைகளும் சமாதான ஒப்பந்தங்களும் ஏற்படுவது சகஜமாக இருந்து வந்தது.

அதன் பின் சீனவுக்கு உள்நாட்டுக் கொந்தளிப்புகளையும் ஜப்பானின் படையெடுப்பையும் சமாளிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதால், திபெத்-சீன சச்சரவு பல வருஷங்களாக ஓய்ந்திருந்தது.

ஆனல், பல வருஷங்களாக யுத்தத்தினுலும் அந்நிய தேசத்தின் படையெடுப்பாலும் சொல்லொணுக் கஷ்டநஷ்டங்களுக்கும் துன்பத்துக்கும் இலக்காகித் துடிதுடித்த சீன, அதையெல்லாம் மறந்து இப்போது திபெத் மீது படையெடுக்க முற்பட்டது பெரும் அக்கிரமம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

* * *

சீனத் தகராறு இன்னும் முற்றிலும் முடிந்தபாடில்லை.

ஐக்கிய நாடுகள் சபை என்ற சர்வதேச மகாசபையில் சீனவில் படுதோல்வியடைந்த சர்க்கார் பிரதிநிதி விடாப்பிடியாக வீற்றிருக்கிறர். சீன தேசம் முழுவதையும் ஆட்சிபுரியும் கம்யூனிஸ்டு சீன சர்க்காருக்கு அந்தச் சபையில் இடம் இல்லையென்று மேற்கத்தி வல்லரசுகள் விதண்டாவாதம் செய்து வருகின்றன.

இந்நிலையில் சட்ட பூர்வமான சீன சர்க்காருக்கு மேற்படி சபையில் இடம் கொடுக்க வேண்டும் என்று இந்தியா வற்புறுத்தி வருகிறது.

அரசியலில் சுயநலனை மறந்து நீதியையும் நேர்மையையும் கடைப்பிடித்து வரும் பாரத நாடு, அரசியல் செல்வாக்கும் ஆயுத வலிமையும் உள்ள பெரிய வல்லரசுகளின் விரோதத்தைக் கூட லட்சியம் செய்யாமல் சீன சர்க்காரை ஆதரித்தது.

இந்தியாவின் அபிப்பிராயத்தை முதலில் பல நாடுகளும் ஒத்துக்கொள்ளவில்லையென்ருலும், இப்போது உலக நாடுகளின் அபிப்பிராயம் சிறிது சிறிதாக இந்தியாவுக்குச் சாதகமாய் உருவாக ஆரம்பித்திருக்கிறது.

சீன சர்க்கார் ருஷ்யாவின் கைப்பொம்மை அல்லவென்றும், அவர்கள் ஆக்கிரம புத்தி படைத்தவர்கள் அல்லவென்றும் அபிப்பிராயம் உருவாகி வரும் இந்தச் சமயத்திலே, சீன திபெத் மீது படையெடுத்தது அக்கிரமமான, ராஜதந்திர சூன்யமான காரியம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

சீனத் துருப்புகள் நேரடியாகத் திபெத் மீது படையெடுக்கவில்லை என்ற கூற்றைக் கேட்டு யாரும் ஏமாந்துவிட மாட்டார்கள்.

காஷ்மீர் முதல் கொரியா வரையில் ஆக்கிரமிப்பு வெறி பிடித்தவர்கள் எந்தவைய தந்திரத்தை அனுஷ்டித்தார்களோ, அதே தந்திரத்தையே சீனவும் அனுஷ்டிக்க முற்பட்டிருக்கிறது.

சீனவின் படையெடுப்பினுல், ஐ. நா. சபையில் சீனவுக்குச் சாதகமாக உருவாகி வரும் அபிப்பிராயம் சிதைந்து எதிர்ப்பு ஏற்படலாம்.

சீனவை அடுத்துள்ள கொரியா நாட்டில் போர் இன்னும் முடியவில்லை.

சீனவைச் சேர்ந்த பார்மோஸாவின் எதிர்கால விதி என்ன என்பது இன்னும் நிர்ணயமாகவில்லை.

சீன எல்லையை அடுத்துள்ள இந்தோசீனவில் புதிய போர் மூண்டிருக்கிறது.

சீன சர்க்காரை அமெரிக்கா உள்பட பல நாடுகள் இன்னும் அங்கீகரிக்க முன் வரவில்லை.

இவ்வாறு நாலாபுறத்திலும் சீறிக்கொண்டு நிற்கும் பல்வேறு பிரச்னைகளால் சூழப்பட்டுள்ள சீன, திபெத் மீது படையெடுத்ததன் மூலம் உலக நாடுகளுக்கு விரோதமாக ஒரு புதிய பிரச்னையைச் சிருஷ்டித்துக் கொண்டிருக்கிறது.

அதிலும் திபெத்-சீனப் பிரச்னையைச் சமரசமாகத் தீர்த்துக் கொள்வதற்காகத் திபெத் தூது கோஷ்டியினர் சீனவின் தலை நகருக்குப் புறப்பட்டுச் சென்றுள்ள இச் சமயத்தில் சீன திபெத்மீது படையெடுத்ததற்குப் போர் வெறியையும் ஆதிக்க ஆணவத்தையும் தவிர, வேறு யாதொரு காரணமும் இருப்பதாகத் தெரியவில்லை.

திபெத் மீது படையெடுப்பதில்லை என்று சீன சர்க்கார் இந்திய சர்க்காருக்குப் பல தடவைகளிலும் கூறிய உறுதி மொழிகள் பொய்யாகி விட்டன; நம்பிக்கை மோசடியான வார்த்தைகள் ஆகிவிட்டன.

திபெத் பிரச்னையைச் சமரசமாகத் தீர்த்துக் கொள்ளவேண்டும் என்று அடுத்துள்ள இந்தியா வற்புறுத்தி வருவதற்குச் செவி சாய்க்காமல் சீன படையெடுப்பில் ஈடுபட்டதன் மூலம் உலக நாடுகளின் நம்பிக்கையையும் இந்தியாவின் நல்லுறவையும் இழப்பதற்கு அடிகோலியிருக்கிறது எனலாம்.

# ராமகிருஷ்ண உபநிஷதம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## 34. ஒரு பாட்டிக்கு உபதேசம்

“பேரண்டத்தைப் படைத்தாய், உன் பெருமை சிந்தைக்கு எட்டாது. நீ இதையெல்லாம் செய்தாய், அதையெல்லாம் செய்தாய் என்றெல்லாம் ஆண்டவனைத் தியானிப்பதில் என்ன பயன்?” என்று ஒரு தடவை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பிரம்ம சமாஜத்துத் தலைவரைப் பார்த்துச் சொன்னார்.

“பெற்ற தகப்பன் எதிரில் உட்கார்ந்து மகன், ‘ஆஹா! என் தகப்பனுக்கு இவ்வளவு சேவகர்கள், இவ்வளவு குதிரைகள், வண்டிகள், தோட்டங்கள் இருக்கின்றன!’ என்று இவ்வாறு கணக்கிடுகிறானா? இல்லை. அன்புள்ள மகன் தகப்பனுடைய செல்வத்தை மதிப்புப் போட்டுக் கொண்டிருக்க மாட்டான். தகப்பனுடைய அன்பைக்கூட மகன் அது ஒரு விசேஷம் என்று நினைக்க மாட்டான்.

“நாம் ஆண்டவனுடைய மக்கள். அவன் அன்பு ஒரு இயற்கை நியதி. அதைப் பற்றி வியக்கவும் பேசவும் எண்ணவும் வேண்டியதில்லை. ஆனபடியால் இவற்றைப் பற்றியெல்லாம் பேசிப் பொழுது போக்காமல் நேராக ஆண்டவனை அடையுங்கள். மனைவி புருஷனிடம் செல்வது போல் அவனிடம் செல்லுங்கள். குழந்தை தாயிடம் செல்வது போல் நெருங்குங்கள். இதைச் செய், அதைச் செய் என்று பயப்படாமல் குழந்தையோ மனைவியோ கேட்பது போல் கேளுங்கள். ஆண்டவனை வெகு தூரத்தில் நிறுத்தித் துதித்தால் அவனை எப்படிக் கட்டி அணைப்பீர்கள்? ஐயோ, அவனை எப்படி நான் நெருங்குவேன் என்று பயந்து போவீர்கள். ஆண்டவன் உங்களுக்கு மிகச் சொந்தம், மிக நெருங்கி அளவளாவக் கூடிய பந்து என்று எண்ணுங்கள்.”

இது பக்தி மார்க்கத்தின் ரகசிய சூத்திரம். பக்தியில் பயமில்லை, வியப்பில்லை, வணக்கமுமில்லை. தைரியம், அன்பு, நிச்சயம், நம்பிக்கை இவையே பக்தியின் லக்ஷணங்கள். ஆரம்பத்தில் தயக்கமும் அச்சமும் இருக்கும். பக்தி முதிர்ந்ததும் அவை தீர்ந்து போய் தைரியம் ஏற்படும். பக்தன் ஆண்டவனை ரொம்பவும் உரிமையோடு நெருங்குவான்.

* * *

தம் சீடருக்குள் ஒருவருடைய தாயார் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்து “எனக்கு வயதாயிற்று. நான் குடும்பக் கவலைகளை விட்டு விட்டு ஸ்ரீ பிருந்தாவனம் சென்று என் பாட்டுக்கு ராதையின் சந்நிதியில் துறவு நிலையில் இருக்க விரும்புகிறேன்” என்று சொன்னாள்.

பரமஹம்ஸர் கண்டு கொண்டார், ‘அந்தக் கிழவியம்மாள் நிலை இதற்கு இடம் தராது, இது வெறும் மனக் கோட்டையான விரக்தி. குடும்பத்தில் இவளுக்கு உள்ள பற்று நீங்கவில்லை’ என்று.

“அம்மா! உனக்கு உன் பேத்தியிடம் உள்ள அன்பு எனக்குத் தெரியும். நீ பிருந்தாவனம் அல்லது காசி அல்லது வேறு எங்கே போனாலும் பேத்தியின் நினைவு கூடவே இருந்து கொண்டே யிருக்கும். அந்தக் குழந்தையின் உடம்பு எப்படி யிருக்கிறதோ, அவளைச் சரியாய்ப் பார்த்துக் கொள்கிறார்களோ இல்லையோ, என்றெல்லாம் யோசித்துக் கொண்டே யிருப்பாய். உன் உடல் பிருந்தாவனத்தி லிருந்தாலும் உன் உள்ளம் பேத்தியின் பக்கத்தில்தான் இருக்கும். ஆனபடியால் ஒன்று செய்: உன் பேத்தியே தேவி என்று நினைத்துக் கொண்டு அந்தக் குழந்தையை அன்பு செய். குடும்பத்தில் இருந்து கொண்டு பேத்தியைக் கவனித்துக் கொண்டே இரு. ஆனால் அவள் ஸ்ரீ ராதை என்று உள்ளத்தைப் பக்குவப்படுத்திக் கொள். குழந்தையிடமுள்ள அன்பெல்லாம் தேவியிடமுள்ள பக்தியாக முடியும். குழந்தையை எடுத்துச் சீராட்டும்போதும் உணவு ஊட்டும் போதும் முகத்தில் சாந்து இடும்போதும் ஸ்ரீ தேவிக்கே இதையெல்லாம் செய்வதாக வைத்துக் கொண்டு செய். அப்போது வீட்டிலேயே குடியிருந்து கொண்டிருந்தாலும் பிருந்தாவனம் போய்க் கண்ணனைத் தியானித்துக் கொண்டு துறவு நிலையிலிருந்த பயனை அடைவாய்” என்று உபதேசித்தார்.

* * *

யார் மீது பிரியம் கொண்டு அன்பு செய்தாலும் அந்தக் குழந்தையோ, காதலியோ, தாயோ, தகப்பனோ, நண்பனோ ஆண்டவன் அல்லது தேவியின் சொரூபம் என்று தியானித்துப் பழகிக் கொள்வது ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசித்த முறை. மிகவும் பயன் தரக்கூடிய சுலபமான முறை. அனைவரும் அனுசரிக்கக் கூடிய வழி. வாழ்க்கை புனிதமாகும் வழி.

# ஏ.வி.எம்.

"இவர் யார் அப்பா, அட்டைப் படத்திலே அமோகமாக ஜொலிக்கிறவர்?" என்று கேட்கும் நேயர்களுக்கு, "வேறு யாரும் இல்லை, நமது ஏ. வி. மெய்யப்பா அவர்கள்தான்!" என்று தெரிவித்துக் கொள்கிறோம். ஸ்ரீ ஏ. வி. எம். அவர்கள் தமது ஸ்டூடியோவில் பலரைப் படம் பிடித்து வெள்ளித் திரையில் விளங்கச் செய்திருக்கிறார். ஆனால் தமது சொந்தப் படத்தைப் பிடித்ததுமில்லை; வெளியிட்டதுமில்லை. எனவே, நம் அட்டைப் படத்தில் அவரைப் பிடித்துப் போட்டதுடன், ஸ்டூடியோ விளக்கையும் அவர் மீது திருப்பி விட்டிருக்கிறோம்.

* * *

சென்ற வருஷத்தில் வெளியான தமிழ்ப் படங்களில் "வாழ்க்கை" என்னும் படமே தலை சிறந்தது என்று சென்னை ரஸிகர்கள் பெரும் பான்மை 'வோட்டு' மூலம் நிர்மாணித்தார்கள். இதிலிருந்து சென்னை ரஸிகர்களின் ரஸிகத் தன்மையில் நம்முடைய நம்பிக்கை உறுதிப் பட்டது. இது மட்டுமல்ல; தமிழ்ப் பொது மக்களின் தீர்ப்பும் ரஸிகர்களின் தீர்ப்பையே உறுதிப்படுத்துகின்றது. "வாழ்க்கை"ப் படம் தமிழ் நாட்டில் அடைந்த அமோகமான வெற்றியைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. ஏறக் குறைய ஓராண்டு காலம் தமிழ்நாடு முழுதும் "அடாடாடா!" என்று அதிசயித்துக் கொண்டிருந்தது. "தமிழில் இவ்வளவு நன்றாகவும் உயர்தரமாகவும் ஜனரஞ்சகமாகவும் ஒரு படத்தைக் கொண்டுவர முடிந்ததே!" என்று தமிழ்நாட்டு ரஸிகர்கள் வியந்து கொண்டிருந்தார்கள். அந்த அதிசயமும் வியப்பும் இன்னும் தீர்ந்தபாடில்லை. அதற்குள்ளே நமது மெய்யப்பா அவர்கள் தமிழ் "வாழ்க்கை"யைத் தெலுங்கு "ஜீவிதம்" ஆக்கி வெளியிட்டிருக்கிறார். "ஜீவிதம்" ஆந்திர தேசத்தையே ஒரு ஆட்டு ஆட்டி வைத்து விட்டுச் சென்னை நகருக்கு வந்திருக்கிறது. தீபாவளியின்போது சென்னையில் "ஜீவிதம்" வெகு சோபிதமாக விளங்கும்.

ஸ்ரீ ஏ. வி. மெய்யப்பன் அவர்களுடைய வாழ்க்கையில் இந்த "வாழ்க்கை"ப் படமும் "ஜீவித"மும் இரண்டு உயர் சிகரங்கள் ஆகும். தமிழ் நாட்டிலும் சரி, ஆந்திர தேசத்திலும் சரி, இந்தப் படங்கள் இதற்கு முன் வெளியான எந்தப் பிரமாதமான படத்தைக் காட்டிலும் இன்னும் கொஞ்சம் பிரமாதமான வெற்றியை அளித்திருப்பதாக அறிகிறோம்.

இத்தகைய அமோகமான வெற்றி ஸ்ரீ ஏ. வி. எம். அவர்களின் மடியில் ஏதோ அதிர்ஷ்டத்தினால் 'திடுதிப்' பென்று வந்து விழுந்து விடவில்லை. ஏறக் குறையப் பதினைந்து வருஷ காலமாக இடைவிடா முயற்சியுடன் ஏகாக்கிர சித்தத்துடன் உழைத்த உழைப்பின் பலன் இதுவாகும். இந்தப் பதினைந்து வருஷகாலம் ஸ்ரீ ஏ. வி எம். அவர்கள் 'பணவசூல்' மட்டும் பிரதானம் என்று கருதாமல், உயர்தரமான படங்களையே கொண்டு வர வேண்டும் என்று பாடுபட்டு வந்திருக்கிறார். அவர் எடுத்த படங்களில் விரஸமான கட்டங்களையோ ஆபாசக் காட்சிகளையோ காண முடியாது. உயர்தரமான படங்களைத் தூய்மையாகவும் ஜனரஞ்சகமாகவும் எடுத்து வெற்றி காண வேண்டும் என்ற இலட்சியத்துடன் பதினைந்து வருஷம் பாடுபட்ட பிறகு 'வாழ்க்கை'ப் படத்தில் அவருடைய 'ஜீவித' இலட்சியம் நிறைவேறியிருக்கிறது.

● ● ●

ஸ்ரீ ஏ. வி. எம். தமது சொந்த வாழ்க்கையில் பல அரிய குண நலன்களைப் படைத்தவர்; இனிய சுபாவம் உடையவர்; உண்மை நட்பு என்னும் பண்புக்குச் சிறந்த உதாரண புருஷர்.

பாரதியாரின் பாடல் உரிமைகளைப் பல்லாயிரம் ரூபாய் கொடுத்து ஸ்ரீ ஏ. வி. எம். வாங்கியபோது பலர் அவரைப் பார்த்துப் பரிதாபப் பட்டார்கள். பிறகு அவர்களே அந்தப் பாடல்களினால் 'மேனு' பணத்தை வாரிக் கட்டிக்கொண்டு விடுகிறார் என்று புகார் செய்தார்கள்.

பெருந் தொகை கொடுத்து விலைக்கு வாங்கிய பாரதி பாடல் உரிமையை 'மேனு' எவ்வித நிபந்தனையுமின்றிப் பொதுஜன சர்க்காருக்கு உரிமை யாக்கிய போது, எதிரிகளும் அவருடைய அரிய செயலைப் பாராட்ட வேண்டியதாயிற்று.

பாரதி மண்டப கைங்கரியம் முதலிய பொதுக் காரியங்களுக்கு ஸ்ரீ ஏ. வி. எம். அவ்வப்போது அளித்துள்ள உதவிகளைப் பற்றிக் "கல்கி" நேயர்கள் அறிந்து மகிழ்ந்திருக்கிறார்கள்.

கோடம்பாக்கத்தில் தமது சொந்த நன்கொடையைக்கொண்டு பிரசவ விடுதிச் சாலை ஒன்றை ஏற்படுத்த அவர் முன் வந்திருப்பதை அறிந்து பாராட்டுவார்கள்.

ஸ்ரீ ஏ. வி. எம். மேலும் மேலும் படத் தொழிலில் வெற்றி அடைந்து அகில இந்தியாவிலும் ஏ. வி. எம். புகழை நிலை நாட்டுவார் என்று நம்புகிறோம்.

# அக்கப்போர்

"காந்திஜியின் உபதேசங்களைப் பின்பற்றுங்கள்!" —ஒரு பிரசங்கி

காந்திஜியின் உபதேசங்கள் நம்மை விட்டு ஓடும் வேகத்தைப் பார்த்தால் அவைகளைப் பின் பற்றுவது சற்றுக் கஷ்டம்தான் என்று தோன்றும்!

★

"சென்னையில் கடல் கொந்தளிப்பு. சமுத்திர தேவிக்குக் கலெக்டர் பூஜை." —செய்தித் தலைப்புகள்

சமுத்திரத்துக்குப் பூஜை போடுவதா! 144 தடை உத்தரவு போட்டுப் பார்ப்பதுதானே!

★

"இயந்திர மனிதன் ஒன்றை விஞ்ஞானிகள் சிருஷ்டிக்கப் போகிறார்களாம். இந்த 'மனிதன்' கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுவானாம். யோசனைகள் செய்து திட்டங்கள் வகுப்பானாம்." —செய்தி

இந்த 'மனிதன்' வாயைத் திறந்து, "பசிக்கிறது, ஆகாரம் கொண்டு வாருங்கள்" என்று கேட்காத வரை பயமில்லை!

★

"இதுவரை பல குற்றங்களுக்காக 12 தடவை சிறை சென்றவனும், இரு முறை கசையடி பட்டவனுமான ஒரு கைதி இப்பொழுது சித்திரம் வரைய ஆரம்பித்திருக்கிறான். கூடிய சீக்கிரம் சிறந்த சைத்ரிகனாக அவன் மாறலாமாம்." —செய்தி

சமூகத்தின்மீது சரியான வழியில் பழி தீர்க்கும் மார்க்கத்தை அவன் கண்டு பிடித்து விட்டான் என்று தோன்றுகிறது!

★

"ரோட்டில் எழுதிய சிலர் கைது செய்யப்பட்டனர்." —செய்தி

ரோட்டில் எழுதுவதைக் கண்டித்து "ரோட்டி"லிருந்து அறிக்கை ஒன்றும் வரவில்லையா!

"திருநின்றவூரில் ஐக்கிய நாடுகள் சபை தினம் கொண்டாடப்பட்டது." —செய்தி

ஐக்கிய நாடுகளின் சமாதானக் கொள்கையை நிலை நிறுத்த வேண்டுமென்று திருநின்றவூர்ப் பிரசங்கிகள் ஒற்றைக்காலில் நின்று பேசி இருப்பார்கள்!

★

"ஆறு குழந்தைகளுக்கு மேல் பெறக்கூடாது என்று ஜனங்களைக் கட்டுப்படுத்தும் பிரஜா உற்பத்திக் கட்டுப்பாடு மசோதா ஒன்று தயாரிக்கப்பட்டுள்ளது." —சென்னைச் செய்தி

இந்த மசோதாவின் நகல் ஒன்று பிரம்ம லோகத்திற்கு அனுப்பப்படுமென்று எதிர்பார்க்கிறோம்.

★

"அணு சக்தியைக் கட்டுப்படுத்த வேண்டும். மேற்கு நாடுகள் கிழக்கு நாடுகளை மிரட்டுவதைக் கைவிட வேண்டும் என்று மேற்கண்டபடி விஷின்ஸ்கி கூறினார்." —ஒரு செய்தி

விஷின்ஸ்கி இப்படியெல்லாம் கண்டபடி பேசுவது நன்றாக இல்லை!

★

"நெல்லை ரேஷன் ஆலோசனைக் கமிட்டி ரேஷனை எடுக்க வேண்டுமெனத் தீர்மானித்திருக்கிறது." —திருநெல்வேலிச் செய்தி

நாடு முழுமைக்கும் தேவையான நெல்லைத் திருநெல்வேலி உற்பத்தி செய்தால் ரேஷன் எடுபட்டுப் போகிறது!

★

திபேத்துக்குள் சீனா புகுந்தது உள்நாட்டு நடவடிக்கை என்று சீனா சொல்லுகிறது.

உள் நாட்டு நடவடிக்கையோ அல்லது வெளி நாட்டு நடவடிக்கையோ நாம் அறியோம். ஆனால் இது சமாதானத்தை நிலை நாட்டு நடவடிக்கை யல்ல என்பது மாத்திரம் நிச்சயம்.



● "கவியரசி சரோஜினி தேவிக்கு ஹிந்தி மீரா படம் ஒரு அற்புதமாக விளங்குகிறது" என்று வடநாட்டார் பலர் மகிழ்ச்சியுடன் கூறுகிறார்கள். ஸ்ரீமதி சரோஜினி மீரா படத்தின் ஆரம்பத்தில் தோன்றிப் பேசுகிறார். ஹிந்தி மீரா படத்தைப் புது டில்லியிலும் கல்கத்தாவிலும் பம்பாயிலும் திரையிட்டபோது கண்ட சில காட்சிகளை இந்தப் பக்கங்களில் காணலாம். பண்டித ஜவஹர்லால் நேருவும், லார்ட் மவுண்ட் பேட்டனும், லேடி மவுண்ட் பேட்டனும், ராஜாஜியும், கவியரசியும், பம்பாய்ப் பிரதமரும் மற்றும் பல பிரமுகர்களும் கண்டு களித்துப் பாராட்டிய படம் இப்போது சென்னை வெலிங்டன் தியேட்டரில் ஓடுகிறது.







● மூன்றாம் அத்தியாயம் ●

## விண்ணகரக் கோயில்



சில சமயம் சிறிய நிகழ்ச்சியி லிருந்து பெரிய சம்பவங்கள் விளைகின்றன. வந்தியத் தேவன் வாழ்க்கையில் அத்தகைய ஒரு சிறிய நிகழ்ச்சி இப்போது நேர்ந்தது.

சாலை யோரத்திலே நின்று பழுவேட்டரையான் பரிவாரங்கள் போவதை வந்தியத்தேவன் பார்த்துக்கொண் டிருந்தான் அல்லவா? அவன் நின்ற இடத்துக்குச் சற்று தூரத்திலேயே அவனுடைய குதிரை நின்றுகொண்டிருந்தது.

பழுவேட்டரையரின் ஆட்களிலே கடைசியாகச் சென்ற சிலரின் பார்வை அக்குதிரையின் மீது சென்றது.

"அடே! இந்தக் குருதையைப் பாரடா!" என்றான் ஒருவன்.

"குருதை என்று சொல்லாதேடா! குதிரை என்று சொல்!" என்றான் இன்னொருவன்.

"உங்கள் இலக்கோண ஆராய்ச்சி இருக்கட்டும்; முதலில் அது குருதையா அல்லது கழுதையா என்று தெரிந்து கொள்ளுங்கள்!" என்றான், இன்னொரு வேடிக்கைப் பிரியன்.

"அதையும் பார்த்து விடலாமடா!" என்று சொல்லிக் கொண்டு, அந்த ஆட்களில் ஒருவன் குதிரையை அணுகி வந்தான். அதன் மேல் தாவி ஏற முயன்றான். ஏறப் பார்க்கிறவன் தன் எஜமானன் அல்ல என்பதை அந்த அறிவுக்கூர்மையுள்ள குதிரை தெரிந்து கொண்டது. அந்த வேற்று மனிதனை ஏற்றிக்கொள்ள மாட்டேன் என்று முரண்டு பிடித்தது!

# பொன்னியின் செல்வன்

"இது பொல்லாத குதிரையடா! இதன்பேரில் நான் ஏறக்கூடாதாம்! பரம்பரையான அரச குலத்தவன் தான் இதன்மேல் ஏறலாமாம். அப்படியென்றால், தஞ்சாவூர் முத்தரையன் திரும்பி வந்துதான் இதன்மேல் ஏற வேண்டும்!" என்று அவன் சமத்காரமாய்ப் பேசியதைக் கேட்டு மற்ற வீரர்கள் நகைத்தார்கள்.

ஏனென்றால், தஞ்சாவூர் முத்தரையர் குலம் நசித்துப் போய் நூறு ஆண்டுகள் ஆகிவிட்டன. இப்போது சோழர்களின் புலிக்கொடி தஞ்சாவூரில் பறந்து கொண்டிருந்தது.

"குதிரையின் எண்ணம் அவ்விதம் இருக்கலாம். ஆனால் என்னைக் கேட்டால், செத்துப் போன தஞ்சாவூர் முத்தரையனைக் காட்டிலும் உயிரோடிருக்கும் தாண்டவராயனே மேல் என்பேன்!" என்றான் மற்றொரு வீரன்.

"தாண்டவராயா! உன்னை ஏற்றிக் கொள்ள மறுக்கும் குதிரை நிஜக் குதிரைதானா என்று பார்த்துவிடு! ஒருவேளை, பெருமாளின் திருகாணுக்கு



வந்த பொய்க்கால் குதிரையா யிருந்தாலும் இருக்கலாம்!" என்றான் மற்றொரு பரிகாசப் பிரியன்.

"அதையும் சோதித்துப் பார்த்து விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டு குதிரைமீது ஏறப் போன தாண்டவராயன் அதனுடைய வாலை முறுக்கினான். ரோஸமுள்ள அக் குதிரை உடனே பின்னங் கால்களை நாலு தடவை விசிறி உதைத்து விட்டு ஓட்டம் பிடித்தது.

"குருதை ஓடுகிறதடா! நிஜக் குருதை தானடா!" என்று அவ் வீரர்கள் கூச்சலிட்டு, "உய்! உய்!" என்று கோஷித்து ஓடுகிற குதிரையை மேலும் விரட்டினார்கள்!

குதிரை திருநாள் கூட்டத்துக் கிடையே புகுந்து ஓடிற்று. ஜனங்கள் அதன் காலடியில் மிதிபடாமலிருப்பதற்காகப் பரபரப்புடன் அங்கு மிங்கும் நகர்ந்து கொண்டார்கள். அப்படியும் அவர்களில் சிலர் உதைபட்டு விழுந்தார்கள். குதிரை நெறி கெட்டு வெறிகொண்டு ஓடியது.

இவ்வளவும் வந்தியத் தேவன் கண்ணெதிரே அதி சீக்கிரத்தில் நடந்து விட்டது. அவனுடைய முகத் தோற்றத்திலிருந்து குதிரை அவனுடைய குதிரை என்பதை ஆழ்வார்க்கடியான் கண்டு கொண்டான்.

"பார்த்தாயா, தம்பி, அக்கப் பழுவூர்த் தடியர்கள் செய்த வேலையை! என்னிடம் நீ காட்ட வந்த வீரத்தை அவர்களிடம் காட்டுவதுதானே?" என்று குத்திக் காட்டினான்.

வந்தியத் தேவனுக்கு ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது. எனினும் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுமையைக் கடைப் பிடித்தான். பழுவூர் வீரர்கள் பெருங் கூட்டமாயிருந்தனர். அவ்வளவு பேருடன் ஒரே சமயத்தில் சண்டைக்குப் போவதில் பொருள் இல்லை. அவர்கள் இவனுடன் சண்டை போடுவதற்காகக் காத்திருக்கவும் இல்லை. குதிரை ஓடியதைப் பார்த்துச் சிரித்துவிட்டு, அவர்களும் விரைந்து மேலே நடந்தார்கள்.

குதிரை போன திசையை நோக்கி வந்தியத் தேவன் நடந்தான். அது கொஞ்ச தூரம் ஓடிவிட்டுத் தானாகவே நின்றுவிடும் என்று அவனுக்குத் தெரியும். ஆகையால் அதைப்பற்றி அவன் கவலைப் படவில்லை. பழுவேட்டரையரின் அகம்பாவம் பிடித்த ஆட்களுக்கு என்றைக்காவது ஒருநாள் நன்றாகப் புத்தி கற்பிக்க வேண்டும் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் அழுத்தமாகப் பதிந்தது.

**பு**ளியந்தோப்புக்கு அப்பால், ஜன சஞ்சாரமில்லாத இடத்தில் குதிரை சோகமே வடிவாக நின்று கொண்டிருந்தது. வந்தியத்தேவன் அதன் அருகில் சென்றதும் குதிரை கனைத்தது. 'ஏன் என்னைவிட்டுப் பிரிந்து சென்று, இந்தச் சங்கடத்துக்கு உள்ளாக்கினாய்?'' என்று அந்த வாயில்லாப் பிராணி குறை கூறுவதுபோல் அதன் கனைப்புத் தொனித்தது. வந்தியத் தேவன் அதன் முதுகைத் தட்டிச் சாந்தப்படுத்தினான். பிறகு அதைத் திருப்பி அழைத்துக்கொண்டு சாலைப் பக்கம் நோக்கி வந்தான். திருவிழாக் கூட்டத்தில் இருந்தவர்கள் பலரும் அவனைப் பார்த்து, "இந்த முரட்டுக் குதிரையை ஏன் கூட்டத்தில் கொண்டு வந்தாய், தம்பி! எத்தனை பேரை அது உதைத்துத் தள்ளிவிட்டது?'' என்றார்கள்.

"இந்தப் பிள்ளை என்ன செய்வான்? குதிரைதான் என்ன செய்யும்? அந்தப் பழுவேட்டரையரின் முரட்டு ஆட்கள் அல்லவா இப்படிச் செய்து விட்டார்கள்?" என்று இரண்டொருவர் சமாதானமாய் சொன்னார்கள்.

ஆழ்வார்க்கடியான் இன்னமும் சாலையில் காத்துக்கொண்டு நின்றான்.

"இதேதடா சனியன்? இவன் நம்மை விடமாட்டான் போலிருக்கிறதே!'' என்று எண்ணி வந்தியத் தேவன் முகத்தைச் சுளுக்கினான்.

"தம்பி! நீ எந்தப் பக்கம் போகப் போகிறாய்?'' என்று ஆழ்வார்க் கடியான் கேட்டான்.

"நானா? கொஞ்சம் மேற்குப் பக்கம் சென்று, பிறகு தெற்குப் பக்கம் திரும்பி, சிறிது கிழக்குப் பக்கம் வளைத்துக் கொண்டுபோய், அப்புறம் தென்மேற்குப் பக்கம் போவேன்!'' என்றான் வந்தியத்தேவன்.

"அதையெல்லாம் நான் கேட்கவில்லை. இன்று ராத்திரி எங்கே தங்குவாய் என்று கேட்டேன்.''

"நீ எதற்காக அதைக் கேட்கிறாய்?''

"ஒருவேளை கடம்பூர்ச் சம்புவரையர் அரண்மனையில் நீ தங்குவதாயிருந்தால், எனக்கு அங்கே ஒரு வேலை இருக்கிறது..."

"உனக்கு மந்திரதந்திரம் தெரியுமா, என்ன? நான் கடம்பூர் அரண்மனைக்குப் போகிறேன் என்பதை எப்படி அறிந்தாய்?''

"இதில் என்ன அதிசயம்? இன்றைக்குப் பல ஊர்களிலிருந்தும் பல விருந்தாளிகள் அங்கே வருகிறார்கள். பழுவேட்டரையரும் அவர் பரிவாரமும் அங்கே தான் போகிறார்கள்.''

"மெய்யாகவா?'' என்று வந்தியத் தேவன் தன் வியப்பை வெளியிட்டான்.

"மெய்யாகத்தான்! அது உனக்குத் தெரியாதா, என்ன? யானை, குதிரை, பல்லக்கு, பரிவட்டம் எல்லாம் கடம்பூர் அரண்மனையைச் சேர்ந்தவை தான். பழுவேட்டரையரை எதிர் கொண்டு அழைத்துப் போகின்றன. பழுவேட்டரையர் எங்கே போனாலும் இந்த மரியாதையெல்லாம் அவருக்கு நடைபெற்றே யாகவேண்டும்.''

**வ**ந்தியத் தேவன் மௌன யோசனையில் ஆழ்ந்தான். பழுவேட்டரையர் தங்குமிடத்தில் தானும் தங்குவதென்பது எளிதில் கிடைக்கக் கூடிய வாய்ப்பு அல்ல. அந்த மாபெரும் வீரருடன் பழக்கம் செய்து கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைத்தாலும் கிடைக்கலாம். ஆனால் அவருடைய முரட்டுப் பரிவாரங்களுடன் ஏற்பட்ட அது

பயம் இன்னும் அவனுக்குக் கசந்து கொண்டிருந்தது.

"தம்பி! எனக்கு ஒரு உதவி செய்வாயா?" என்று ஆழ்வார்க்கடியான் இரக்கமான குரலில் கேட்டான்.

"உனக்கு நான் செய்யக் கூடிய உதவி என்ன இருக்க முடியும்? இந்தப் பக்கத்துக்கே நான் புதியவன்."

"உன்னால் முடியக் கூடிய காரியத்தையே சொல்வேன். இன்றிரவு என்னைக் கடம்பூர் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போ!"

"எதற்காக? அங்கே யாராவது வீர சைவர் வருகிறாரா? 'சிவன் பெரிய தெய்வமா? திருமால் பெரிய தெய்வமா?' என்று விவாதித்து முடிவு கட்டப் போகிறீர்களா?"

"இல்லை, இல்லை. சண்டை பிடிப்பதே என் வேலை என்று நினைக்க வேண்டாம். இன்றிரவு கடம்பூர் மாளிகையில் பெரிய விருந்து நடைபெறும். விருந்துக்குப் பிறகு களியாட்டம், சாமியாட்டம், குரவைக் கூத்து—எல்லாம் நடைபெறும். குரவைக் கூத்துப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசை!"

"அப்படியிருந்தாலும், நான் உன்னை எப்படி அழைத்துப் போக முடியும்?"

"என்னை உன் பணியாள் என்று சொன்னால் போகிறது."

வந்தியத்தேவனுக்கு முன்னால் ஏற்பட்ட சந்தேகம் வலுப்பட்டது.

"அந்த மாதிரி ஏமாற்று மோசடிக் கெல்லாம் நீ வேறு யாரையாவது பார்க்க வேண்டும். உன்னைப் போன்ற பணியாளன் எனக்குத் தேவையில்லை. சொன்னால் நம்பவும் மாட்டார்கள். மேலும், நீ சொன்னதையெல்லாம் யோசித்துப் பார்த்தால் என்னையே இன்று கோட்டைக்குள் விடுவார்களோ, என்ற சந்தேகம் உண்டாகிறது."

"அப்படியானால், நீ கடம்பூருக்கு அழைப்புப் பெற்றுப் போகவில்லையென்று சொல்லு."

"ஒரு வகையில் அழைப்பு இருக்கிறது. சம்புவரையர் மகன் கந்தன் மாறவேள் என்னுடைய உற்ற நண்பன். இந்தப் பக்கம் வந்தால் அவர்களுடைய அரண்மனைக்கு அவசியம் வரவேணுமென்று என்னைப் பல முறை அழைத்திருக்கிறான்."

"இவ்வளவுதானா? அப்படியானால் உன் பாடே இன்றைக்குக் கொஞ்சம் திண்டாட்டமாகத்தான் இருக்கும்!"

இருவரும் சிறிது நேரம் மௌனமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

"ஏன் என்னை இன்னும் தொடர்ந்து வருகிறாய்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"அந்தக் கேள்வியையே நானும் திருப்பிக் கேட்கலாம். நீ ஏன் என்னைத் தொடர்கிறாய்? உன் வழியே போவதுதானே?"

"வழி தெரியாத குற்றத்தினால்தான். நம்பி! நீ எங்கே போகிறாய்? ஒரு வேளை கடம்பூருக்குத்தானா?"

"இல்லை; நீ தான் என்னை அங்கு அழைத்துப் போக முடியாது என்று சொல்லி விட்டாயே? நான் விண்ணகரக் கோயிலுக்குப் போகிறேன்."

"வீர நாராயணப் பெருமாள் சந்நிதிக்குத்தானே?"

"ஆம்."

"நானும் அந்த ஆலயத்துக்கு வந்து பெருமாளைச் சேவிப்பதற்கு விரும்புகிறேன்."

"ஒரு வேளை விஷ்ணு ஆலயத்துக்கு நீ வரமாட்டாயோ என்று பார்த்தேன். பார்க்கவேண்டிய கோயில்; தரிசிக்க வேண்டிய சந்நிதி. இங்கே ஈசுவர முனிகள் என்ற பட்டர், பெருமாளுக்குக் கைங்கரியம் செய்து வருகிறார். அவர் பெரிய மகான்."

"நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரே கூட்டமாயிருக்கிறதே! கோயிலில் ஏதாவது விசேஷ உற்சவம் உண்டோ?"

"ஆம்; இன்று ஆண்டாள் திருநட்சத்திரம். ஆடிப் பதினெட்டாம் பெருக்கோடு ஆண்டாளின் திருநட்சத்திரமும் சேர்ந்து கொண்டது. அதனால் தான் இவ்வளவு கோலாகலம். தம்பி! ஆண்டாள் பாசுரம் ஏதாவது நீ கேட்டிருக்கிறாயா?"

"கேட்டதில்லை."

"கேட்காதே! அதைக் காதினாலேயே கேட்காதே!"

"ஏன் அவ்வளவு வைஷம்யம்?"

"வைஷம்யம் இல்லை; விரோதமும் இல்லை. உன்னுடைய நன்மைக்குச் சொன்னேன். ஆண்டாளின் இனிய பாசுரத்தைக் கேட்டு விட்டாயானால் அப்புறம் வாளையும் வேலையும் விட்

டெறிந்துவிட்டு என்னைப்போல் நீயும் கண்ணன்மேல் காதல் கொண்டு விண்ணகர யாத்திரை கிளம்பி விடுவாய்!''

"உனக்கு ஆண்டாள் பாசுரங்கள் தெரியுமா? பாடுவாயா?''

"சில தெரியும்; வேதம் தமிழ் செய்த நம்மாழ்வார் பாசுரங்களில் சில தெரியும். பெருமான் சந்நிதியில் பாடப் போகிறேன். வேணுமானல் கேட்டுக்கொள்! இதோ கோயிலும் வந்து விட்டது!''

இதற்குள் உண்மையிலேயே வீர நாராயணப் பெருமாள் கோவிலை அவர்கள் நெருங்கி வந்து விட்டார்கள்.

* * *

விஜயாலய சோழனின் பேரனை முதற் பராந்தக சோழன் 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப் பரகேசரி' என்ற பட்டம் பெற்றவன். சோழப் பேரரசுக்கு அஸ்திவாரம் அமைத்தவன் அவனே. தில்லைச் சிற்றம்பலத்துக்கு அவன் பொன் கூரை வேய்ந்து சரித்திரப் புகழ் பெற்றவன். சோழ சிகாமணி, சூரசிகாமணி முதலிய பல விருதுப் பெயர்களோடு வீர நாராயணன் என்னும் சிறப்புப் பெயரையும் அவன் கொண்டிருந்தான்.

பராந்தகனுடைய காலத்தில் வடக்கே இரட்டை மண்டலத்து ராஷ்டிரகூட மன்னர்கள் வலிமை பெற்று விளங்கினர்கள். மானிய கேடத்திலிருந்து அவர்கள் படையெடுத்து வரக்கூடுமென்று பராந்தகன் எதிர்பார்த்தான். எனவே, தனது முதற் புதல்வனகிய இளவரசன் இராஜாதித்தனை ஒரு பெரிய சைன்யத்துடன் திருமுனைப்பாடி நாட்டில் இருக்கச் செய்தான். அந்தச் சைன்யத்தைச் சேர்ந்த லட்சக்கணக்கான வீரர்கள் வேலையின்றிச் சும்மா இருக்க நேர்ந்த காலத்தில் இராஜாதித்தன் ஒரு யோசனை செய்தான். குடி மக்களுக்கு உபயோகமான ஒரு பெரும் பணியை அவர்களைக் கொண்டு செய்விக்க எண்ணினன். வடகாவேரி என்று பக்தர்களாலும் கொள்ளிடம் என்று மற்றவர்களாலும் அழைக்கப்பட்ட பெரு நதியின் வழியாக அளவில்லாத வெள்ள நீர் ஓடி வீணே கடலில் கலந்து கொண்டிருந்தது. அதில் ஒரு பகுதியைப் பயன்படுத்த எண்ணித் தன் வசமிருந்த வீரர்களைக் கொண்டு கடல்போன்ற விசாலமான ஏரி ஒன்றை அமைத்தான். அதைத் தன் அருமைத் தந்தையின் பெயரால் வீர நாராயண ஏரி என்று அழைத்தான். அதன் கரையில் வீர நாராயணபுரத்தை ஏற்படுத்தி அதில் ஒரு விண்ணகரையும் எடுத்தான். விஷ்ணுக்கிருஹம் என்பது அந்நாளில் விண்ணகரம் என்று தமிழாக்கப்பட்டு வழங்கிற்று. ஸ்ரீமந் நாராயண மூர்த்தி நீரில் பள்ளி கொண்டு நீர்மயமாக இருப்பவர் அல்லவா? எனவே, ஏரிகளைக் காத்தருளுவதற்காக ஏரிக் கரையை யொட்டி ஸ்ரீ நாராயண மூர்த்திக்குக் கோயில் எடுப்பது அக்காலத்து வழக்கம். அதன்படி வீர நாராயண புர விண்ணகரத்தில் வீர நாராயணப் பெருமானைக் கோயில் கொண்டு எழுந்தருளச் செய்தான்.

அத்தகைய பெருமாளின் கோயிலுக்குத்தான் இப்போது வந்தியத் தேவனும் ஆழ்வார்க்கடியானும் சென்றார்கள். சந்நிதிக்கு வந்து நின்றதும் ஆழ்வார்க்கடியான் பாட ஆரம்பித்தான். ஆண்டாளின் பாசுரங்கள் சிலவற்றைப் பாடிய பிறகு நம்மாழ்வாரின் தமிழ் வேதத்திலிருந்து சில பாசுரங்களைப் பாடினன்:—

"பொலிக பொலிக பொலிக
போயிற்று வல்லுயிர்ச்சாபம்
நலியும் நரகமும் நைந்த
நமனுக் கிங்கியா தொன்றுமில்லை
கலியும் கெடும் கண்டு கொண்மின்
கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து இசைபாடி
ஆடி உழி தரக் கண்டோம்!
கண்டோம் கண்டோம் கண்டோம்
கண்ணுக் கினியன கண்டோம்
தொண்டீர் எல்லீரும் வாரீர்!
தொழுது தொழுது நின்றார்த்தும்!
வண்டார் தண்ணந் துழாயான்
மாதவன் பூதங்கள் மண்மேல்
பண்டான் பாடி நின்றாடிப்
பரந்து திரிகின்றனவே!"

இவ்விதம் பாடி வந்தபோது ஆழ்வார்க்கடியானுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகித் தாரை தாரையாய் அவன் கன்னத்தின் வழியாக வழிந்

தோடியது. வந்தியத்தேவன் அப் பாடல்களைக் கவனமாகவே கேட்டு வந்தான். அவனுக்குக் கண்ணீர் வரா விட்டாலும் உள்ளம் கசிந்துருகியது. ஆழ்வார்க்கடியானைப் பற்றி அவன் முன்னர் கொண்டிருந்த கருத்தும் மாறியது. "இவன் பரம பக்தன்!" என்று எண்ணிக் கொண்டான்.

வந்தியத்தேவனைப் போலவே கவனமாக அப்பாசுரங்களை இன்னும் சிலரும் கேட்டார்கள். கோவில் முதலிமார்கள் கேட்டார்கள். அர்ச்சகர் ஈசுவரபட்டரும் கண்ணில் நீர் மல்கி நின்று கேட்டார். அவருக்கு அருகில் நின்று கொண்டு அவருடைய இளம் புதல்வன்—பால்மணம் மாறாப் பாலகன் ஒருவன்—கேட்டிருந்தான்.

ஆழ்வார்க்கடியான் பத்துப் பாசுரங்களைப் பாடி விட்டு,

"கலி வயல் தென்னன் குருகூர்க்
காரி மாறன் சடகோபன்
ஒலி புகழ் ஆயிரத்து இப்பத்து
உள்ளத்தை மாசறுக்குமே!"

என்று பாசுரத்தை முடித்தான்.

கேட்டிருந்த பட்டரின் குமாரனாகிய பாலகன் தன் தந்தையிடம் ஏதோ கூறினான். அவர் மல்கிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "ஐயா! குருகூர்ச் சடகோபர் என்னும் நம்மாழ்வார் மொத்தம் ஆயிரம் பாடல்கள் பாடியிருப்பதாகத் தெரிகிறதே? அவ்வளவும் உமக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"அடியேன் அவ்வளவு பாக்கியம் செய்யவில்லை. சில பத்துக்கள்தான் எனக்குத் தெரியும்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"தெரிந்தவரையில் இந்தப் பிள்ளைக்குச் சொல்லிக் கொடுக்க வேணும்" என்றார் ஈசுவரமுனிகள்.

* * *

பின்னால், இந்த ஊர் பல பெருமைகளை அடையப் போகிறது. பால் வடியும் முகத்தில் தேஜஸ் பொலிய நின்று நம்மாழ்வார் பாசுரங்களைக் கேட்ட பாலகன் வளர்ந்து நாதமுனிகள் என்ற திருநாமத்துடன் வைஷ்ணவ ஆச்சாரிய பரம்பரையில் முதல் ஆச்சாரியார் ஆகப் போகிறார். குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரிக்குச் சென்று 'வேதம் தமிழ் செய்த நம்மாழ்வாரின்' ஆயிரம் பாசுரங்களையும் தேடிச் சேகரித்துவரப் போகிறார். அப் பாசுரங்களை அவருடைய சீடர்கள் இசையுடன் பாடி நாடெங்கும் பரப்பப் போகிறார்கள்.

நாதமுனிகளின் பேரராக அவதரிக்கப்போகும் ஆளவந்தார் பல அற்புதங்களைச் செய்தருளப் போகிறார்.

இந்த இருவரும் அவதரித்த க்ஷேத்திரத்தைத் தரிசிக்க, உடையவராகிய ஸ்ரீ ராமாநுஜரே ஒரு நாள் வரப் போகிறார். வரும்போது வீர நாராயண ஏரியையும் அதன் எழுபத்து நான்கு கணவாய்களையும் பார்த்து அதிசயிக்கப் போகிறார். ஏரித் தண்ணீர் எழுபத்து நாலு கணவாய்களின் வழியாகப் பாய்ந்து மக்களை வாழ வைப்பது போலவே, நாராயணனுடைய கருணை வெள்ளத்தை ஜீவ கோடிகளுக்குப் பாயச் செய்வதற்காக எழுபத்து நாலு ஆசார்ய பீடங்களை ஏற்படுத்த வேண்டும் என்று அம் மகானின் உள்ளத்தில் உதயமாகிறது. அதன்படியே எழுபத்துநான்கு 'சிம்மாசனாதிபதிகள்' என்ற பட்டத்துடன் வைஷ்ணவ ஆச்சாரிய புருஷர்கள் ஏற்படப் போகிறார்கள்.

இந்த மகத்தான நிகழ்ச்சிகளையெல்லாம் வைஷ்ணவ குரு பரம்பரைச் சரித்திரம் விவரமாகச் சொல்லட்டும் என்று விட்டு விட்டு, மறுபடியும் நாம் வந்தியத் தேவனைக் கவனிப்போம்.

பெருமாளைச் சேவித்து விட்டு ஆலயத்துக்கு வெளியில் வந்ததும் வந்தியத்தேவன் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "நம்பிகளே! தாங்கள் இத்தகைய பரம பக்தர் என்றும், பண்டித சிகாமணி என்றும் எனக்குத் தெரியாமல் போயிற்று. ஏதாவது அபசாரமாக நான் பேசியிருந்தால் மன்னிக்க வேண்டும்" என்றான்.

"மன்னித்து விடுகிறேன், தம்பி! ஆனால் இப்போது எனக்கு ஒரு உதவி செய்வாயா? சொல்லு!"

"தாங்கள் கேட்கும் உதவி என்னால் முடியாது என்றுதான் சொன்னேனே? நீங்களும் ஒப்புக் கொண்டீர்களே?"

"இது வேறு விஷயம். ஒரு சிறிய சீட்டுக் கொடுக்கிறேன். கடம்பூர் அரண்மனையில் நீ தங்கினால் தக்க சமயம் பார்த்து ஒருவரிடம் அதைக் கொடுக்க வேண்டும்."



"யாரிடம்?"

"பழுவேட்டரையரின் யானைக்குப் பின்னால் மூடு பல்லக்கில் சென்றாளே, அந்தப் பெண்மணியிடம்!"

"நம்பிகளே! என்னை யார் என்று நினைத்தீர்கள்? இம்மாதிரி வேலைக்கெல்லாம் நான்தானா அகப்பட்டேன்? தங்களைத் தவிர வேறு யாராவது இத்தகைய வார்த்தையை என்னிடம் சொல்லி யிருந்தால்......"

"தம்பி! படபடப்பு வேண்டாம்! உன்னால் முடியாது என்றால், மகாராஜனாய்ப் போய் வா! ஆனால் எனக்கு மட்டும் இந்த உதவி நீ செய்திருந்தால், ஏதாவது ஒரு சமயத்தில் உனக்கும் என் உதவி பயன்பட்டிருக்கும். பாதகமில்லை; போய் வா!"

வந்தியத்தேவன் பிறகு அங்கே ஒரு கணங்கூட நிற்கவில்லை. குதிரை மீது தாவி ஏறி விரைவாக விட்டுக்கொண்டு கடம்பூரை நோக்கிச் சென்றான்.

## நாலாம் அத்தியாயம்

# கடம்பூர் மாளிகை

இத்தனை நேரம் இளைப்பாறியிருந்த வல்லவரையனுடைய குதிரை இப்போது நல்ல சுறுசுறுப்பைப் பெற்றிருந்தது; ஒரு நாழிகை நேரத்தில் கடம்பூர்ச் சம்புவரையர் மாளிகை வாசலை அடைந்து விட்டது. அந்தக் காலத்துச் சோழநாட்டுப் பெருங்குடித் தலைவர்களில் செங்கண்ணர் சம்புவரையர் ஒருவர். அவருடைய மாளிகையின் வாசல் ஒரு பெரிய நகரத்தின் கோட்டை வாசலைப் போல் இருந்தது. வாசலுக்கு இருபுறத்திலும் எழுந்த நெடுஞ் சுவர்கள் கோட்டைச் சுவர்களைப் போலவே வளைந்து சென்றன.

கோட்டை வாசலில் யானைகளும், குதிரைகளும், ரிஷபங்களும், அந்த மிருகங்களை யெல்லாம் பிடித்துக் கட்டுவோரும், தீனி வைப்போரும், தண்ணீர் காட்டுவோரும், ஆங்காங்கு தீவர்த்தி தூக்கிப் பிடித்து வெளிச்சம் போடுவோரும், தீவர்த்திகளுக்கு எண்ணெய் விடுவோருமாக, ஒரே கோலா



கலமா யிருந்தது. இதை யெல்லாம் பார்த்த வல்லவரையனின் உள்ளத்தில் சிறிது தயக்கமும் துணுக்கமும் ஏற்பட்டன. 'ஏதோ இங்கே பெரிய விசேஷம் ஒன்று நடைபெறுகிறது, இந்தச் சமயத்தில் நாம் வந்து சேர்ந்தோமே' என்று எண்ணினான். நடக்கும் விசேஷம் என்னவென்பதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளும் ஆவலும் ஒரு பக்கம் பொங்கிக்கொண்டிருந்தது. கோட்டை வாசற் கதவு திறந்துதா னிருந்தது. ஆனால் திறந்திருந்த வாசலில் வேல் பிடித்த வீரர்கள் சிலர் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்தால் யமகிங்கரர்களைப் போலிருந்தது.

தயங்கி நின்றால் தன்னை அவர்கள் நிறுத்தி விடுவார்கள் என்றும், தைரியமாகக் குதிரையை விட்டுக்கொண்டு உள்ளே போவதுதான் உசிதம் என்றும் அந்த வீர வாலிபன் எண்ணினான். அந்த எண்ணத்தை உடனே காரியத்தில் நிறைவேற்றினான். ஆனால் என்ன ஏமாற்றம்? குதிரை கோட்டை வாசலை அணுகியதும் வேல் பிடித்த வீரர்கள் இருவர் தங்கள் வேல்களைக் குறுக்கே நிறுத்தி வழி மறித்தார்கள்.

இன்னும் நாலு பேர் வந்து குதிரையின் தலைக் கயிற்றைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்களில் ஒருவன் வந்தியத்தேவனை உற்றுப் பார்த்தான். இன்னொருவன் தீவர்த்தி கொண்டுவந்து உயரத் தூக்கி முகத்துக்கு நேரே பிடித்தான்.

வல்லவரையன் முகத்தில் கோபம் கொதிக்க, "இதுதான் உங்கள் ஊர் வழக்கமா? வந்த விருந்தாளிகளை வாசலிலேயே தடுத்து நிறுத்துவது...?" என்றான்.

"நீ யார் தம்பி இவ்வளவு துடுக்காகப் பேசுகிறாய்? எந்த ஊர்?" என்றான் வாசற் காவலன்.

"என் ஊரும் பேருமா கேட்கிறாய்? வாணகப்பாடி நாட்டுத் திருவல்லம் என் ஊர். என்னுடைய குலத்து முன்னோர்களின் பெயர்களை ஒரு காலத்தில் உங்கள் நாட்டு வீரர்கள் தங்கள் மார்பில் எழுதிக் கொண்டு பெருமையடைந்தார்கள்! என் பெயர் வல்லவரையன் வந்தியத்தேவன்! தெரிந்ததா?" என்றான்.

"இவ்வளவையும் சொல்வதற்கு ஒரு கட்டியக்காரனையும் கூட அழைத்து வருவதுதானே?" என்றான் காவலர்களில் ஒருவன். இதைக் கேட்ட மற்றவர்கள் சிரித்தார்கள்.

"நீ யாராயிருந்தாலும் இனி உள்ளே போகமுடியாது! இன்றைக்கு வர வேண்டிய விருந்தாளிகள் எல்லாம் வந்தாகி விட்டது. இனிமேல் யாரையும் விடவேண்டாம் என்று எஜமானரின் கட்டளை!" என்றான் காவலர் தலைவன்.

ஏதோ வாக்குவாதம் நடக்கிறதைப் பார்த்துக் கோட்டைக்குள்ளே சற்றுத் தூரத்தில் நின்ற சில வீரர்கள் அருகில் வந்தார்கள். அவர்களில் ஒருவன், "அடே! நாம் அங்கே திருவிழாக் கூட்டத்தில் விரட்டியடித்தோமே, அந்தக் குருதை போல இருக்கிறதடா!" என்றான்.

இன்னொருவன் "கழுதை என்று சொல்லடா" என்றான்.

"கழுதை மேல் உட்கார்ந்திருக்கிறவன் என்ன விறைப்பாக உட்கார்ந்திருக்கிறான் பாரடா!" என்றான் மற்றொருவன்.

வல்லவரையன் காதில் இந்தச் சொற்கள் விழுந்தன. அவன் மனதிற்குள், "என்னத்திற்கு வீண் வம்பு? பேசாமல் திரும்பிப் போய்விடலாமா? அல்லது இளவரசர் ஆதித்த கரிகாலரின் முத்திரை பதித்த இலச்சினையை இவர்களிடம் காட்டி விட்டு உள்ளே போகலாமா?" என்ற யோசனை தோன்றியிருந்தது. வடதிசைப் படையின் மாதண்ட நாயகராகிய இளவரசரின் இலச்சினையைப் பார்த்து விட்டுத் தன்னைத் தடுக்கக் கூடியவர்கள் வடபெண்ணையிலிருந்து குமரிமுனை வரையில் யாரும் கிடையாது அல்லவா?

இப்படி அவன் மனதிற்குள் விவாதித்துக் கொண்டிருந்த போதுதான் பழுவேட்டரையர் ஆட்களின் கேலிப் பேச்சு அவன் காதில் விழுந்தது. உடனே என்ன செய்யவேண்டும் என்பதை முடிவு செய்துகொண்டான்.

"குதிரையை விடுங்கள்; திரும்பிப் போகிறேன்!" என்றான்.

தடுத்த வீரர்கள் குதிரையின் மூக்குக் கயிற்றை விட்டார்கள்.

குதிரையின் அடிவயிற்றில் வந்தியத்தேவன் தன் இரு கால்களினாலும் ஒரு அழுத்து அழுத்தினான். அதே நேரத்தில் உடைவாளை உறையிலிருந்து உருவி எடுத்தான். மின்னல் ஒளியுடன் கண்ணைப் பறித்த அந்த வாள் சுழன்ற வேகத்தினால் அவனுடைய கையில் திருமாலின் சக்கராயுதத்தை வைத்துக் கொண்டு சுழற்றுவதுபோல் தோன்றியது. குதிரை முன்னேறிக் கோட்டைக்குள்ளே பாய்ந்து சென்றது. வழியிலிருந்த வீரர்கள் திடீர் திடீரென்று கீழே விழுந்தார்கள். வேல்கள் சடசட வென்று அடித்துக் கொண்டு விழுந்தன. வம்பு பேசிய பழுவூர் வீரர்களின் பேரில் குதிரை பாய்ந்தது. இந்த மின்னல் தாக்குதலைச் சிறிதும் எதிர்பாராத வீரர்கள் நாற்புறமும் சிதறிச் சென்றார்கள்.

இதற்குள் வேறு பல காரியங்கள் நிகழ்ந்து விட்டன. கோட்டைக் கதவுகள் தடால் தடால் என்று சாத்தப்பட்டன. "பிடி! பிடி!" என்ற கூக்குரல்கள் எழுந்தன. வேல்களும் வாள்களும் உராய்ந்து 'கிளாங்' 'கிளாங்' என்று ஒலித்தன. திடீரென்று அபாயம் அறிவிக்கும் முரசு 'டடம்!' 'டடம்!' என்று முழங்கிற்று.

வந்தியத்தேவன் குதிரையைச் சுற்றிலும் வீரர்கள் வந்து சூழ்ந்து கொண்டார்கள். இருபது, முப்பது, ஐம்பது பேருக்கு மேலேயே இருக்கும். குதிரையின் மேலிருந்து வந்தியத்தேவன் பாய்ந்து தரையில் குதித்தான். கையிலிருந்த வாளைச் சுழற்றிக் கொண்டே, "கந்த மாறா! கந்த மாறா! உன் ஆட்கள் என்னைக் கொல்லுகிறார்கள்!" என்று கத்தினான்.

இதைக் கேட்டதும் அவனைச் சூழ்ந்திருந்த வீரர்கள் திடுக்கிட்டுச் சிறிது தயங்கி விலகி நின்றார்கள்.

அச்சமயம் மாளிகையின் மேல் மாட முகப்பிலிருந்து, "அங்கே என்ன கூச்சல்? நிறுத்துங்கள்!" என்ற ஒரு இடி முழக்கக் குரல் கேட்டது. அந்தக் குரல் கேட்ட இடத்தில் ஏழெட்டுப் பேர் நின்று கீழே நடப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

"எஜமான்! யாரோ ஒரு ஆள் காவலை மீறிப் புகுந்து விட்டான். சின்ன எஜமான் பெயரைச் சொல்லிக் கூவுகிறான்!" என்று கீழே யிருந்த ஒருவன் சொன்னான்.

"கந்த மாறா! நீ போய்க் கலவரம் என்னவென்று பார்!"—இவ்விதம் மேல் மாடத்திலிருந்து அதே இடி முழக்கக் குரல் சொல்லிற்று. அந்தக் குரலுக்கு உடையவர்தான் செங்கண்ணர் சம்புவரையர் போலும் என்று வந்தியத்தேவன் எண்ணினான்.

அவனும் அவனைச் சுற்றி நின்ற வீரர்களும் சிறிது நேரம் அப்படியே நின்று கொண்டிருந்தார்கள்.

"இங்கே என்ன ஆர்ப்பாட்டம்?" என்ற ஒரு இளங் குரல் கேட்டது. அந்தக் குரல் கேட்ட இடத்தில் நின்றவர்கள் விலகிக் கொண்டு வழி ஏற்படுத்தினார்கள். வாலிபன் ஒருவன் அந்த வழியாக விரைந்து வந்தான். கையில் பிடித்த கத்தியை இலேசாகச் சுழற்றிக் கொண்டு சூர சம்ஹாரம் செய்த சுப்பிரமணியரைப் போல் நின்ற வந்தியத்தேவனை ஒரு கணம் வியப்புடன் நோக்கினான்.

"வல்லவா! உண்மையாகவே நீதானா?" என்று உணர்ச்சி ததும்பக் கூவிக் கொண்டு ஓடிச் சென்று வல்ல

வரையனை அந்த இளைஞன் கட்டித் தழுவிக் கொண்டான்.

"கந்த மாறா! நீ படித்துப் படித்துப் பல தடவை சொன்னாயே என்று உன் வீட்டுக்கு வந்தேன். வந்த இடத்தில் எனக்கு இத்தகைய வீர வரவேற்புக் கிடைத்தது" என்று வந்தியத்தேவன் தன்னைச் சுற்றி நின்றவர்களைச் சுட்டிக் காட்டினான்.

அவர்களைப் பார்த்து "ஓ! முட்டாள்களே! போங்களடா! உங்கள் அறிவு உலக்கைக் கொழுந்துதான்!" என்றான் கந்தன் மாறவேள்.

* * *

கந்தன் மாறவேள் வந்தியத்தேவனின் கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக்கொண்டு போனான். அவனுடைய கால்கள் தரையில் நில்லாமல் குதித்துக் கொண்டேயிருந்தன. அவனுடைய உள்ளமும் துள்ளிக் குதித்தது. யௌவனப் பிராயத்தில் உண்மையாக உள்ளம் ஒன்றுபட்ட ஒரு நண்பன் கிடைத்தால் அதைக் காட்டிலும் ஒருவனைப் பரவசப்படுத்தக் கூடியது வேறு என்ன உண்டு? ஆம்; காதல் என்பது ஒன்று இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் காதலில் இன்பமும் குதூகலமும் எத்தனை உண்டோ அதைவிட அதிகமான துன்பமும் வேதனையும் உண்டு. யௌவனத்துச் சிநேக குதூகலத்திலோ துன்பத்தின் நிழல் கூட விழுவதில்லை. ஒரே ஆனந்த மயமான இதய பரவசந்தான்!

போகிற போக்கில், வல்லவரையன், "கந்த மாறா! இன்றைக்கு என்ன இங்கே ஏகதடபுடலாயிருக்கிறது? இவ்வளவு கட்டுக்காவல் எல்லாம் எதற்காக?" என்றான்.

"இன்றைக்கு இங்கே என்ன விசேஷம் என்பதைப் பற்றி அப்புறம் விவரமாகச் சொல்கிறேன். நீயும் நானும் பெண்ணையாற்றங் கரைப் பாசறையில் தங்கியிருந்த போது, 'பழுவேட்டரையரைப் பார்க்க வேண்டும்; மழுவரையரைப் பார்க்கவேண்டும்; அவரைப் பார்க்க வேண்டும்; இவரைப் பார்க்க வேண்டும்' என்று சொல்வாயே? அந்த அவர், இவர், உவர், — எல்லாரையும் இன்றைக்கு இங்கேயே நீ பார்த்து விடலாம்!" என்றான் கந்தன் மாறவேள்.

பிறகு, விருந்தாளிகள் அமர்ந்திருந்த மாளிகை மேல் மாடத்துக்கு வல்லவரையனைக் கந்தமாறன் அழைத்துச்

சென்றான். முதலில் தன் தந்தையாகிய சம்புவரையரிடம் கொண்டு போய் நிறுத்தி, "அப்பா! என் தோழன் வாணகுலத்து வந்தியத் தேவனைப் பற்றி அடிக்கடி தங்களிடம் சொல்லிக் கொண்டிருப்பேனே? அவன் இவன் தான்!" என்றான். வந்தியத் தேவன் பெரியவரைக் கும்பிட்டு வணங்கினான். அதைக் குறித்துச் சம்புவரையர் அவ்வளவாக மகிழ்ச்சியடைந்ததாகத் தோன்றவில்லை.

"அப்படியா? இந்த அரண்மனை வாசலில் அவ்வளவு கலவரம் செய்தவன் இவன்தானா?" என்று கேட்டார்.

"கலவரத்துக்குக் காரணம் என் தோழன் அல்ல; வாசல் காப்பதற்கு நாம் அமர்த்தியிருக்கும் மூடர்கள்!" என்றான் கந்தன் மாறவேள்.

"இருந்தாலும் இன்றைய தினம் பார்த்து, அதுவும் இருட்டி அரை ஜாமத்திற்குப் பிறகு, இவன் இவ்வளவு ஆர்ப்பாட்டத்துடன் வந்திருக்க வேண்டியதில்லை!" என்றார் சம்புவரையர்.

கந்தன் மாறவேளின் முகம் சுருங்கிற்று. மேலும் தந்தையுடன் வாதமிட அவன் விரும்பவில்லை. வந்தியத் தேவனை அப்பால் அழைத்துச் சென்றான். வந்திருந்த விருந்தாளிகளுக்கு மத்தியில் நடுநாயகமாக ஓர் உயர்ந்த பீடத்தில் அமர்ந்திருந்த பழுவேட்டரையரிடம் அழைத்துப் போய், "மாமா! இவன் என் ஆருயிர் நண்பன் வந்தியத்தேவன். வாணப் பேரரசர் குலத்தவன். இவனும் நானும் வடபெண்ணைக்கரைப் பாசறையில் எல்லைக் காவல் புரிந்து கொண்டிருந்தோம். அப்பொழுதெல்லாம் 'வீராதி வீரர் பெரிய பழுவேட்டரையரைப் பார்க்க வேண்டும்' என்று ஓயாது சொல்லிக் கொண்டிருப்பான். 'பழுவேட்டரையர் திருமேனியில் அறுபத்து நாலு போர்க் காயங்கள் இருப்பது உண்மைதானா?' என்று கேட்டுக் கொண்டிருப்பான். 'ஒரு நாள் நீயே எண்ணிப் பார்த்துக் கொள்' என்று நான் சொல்லுவேன்" என்றான்.

பழுவேட்டரையர் சுருங்கிய முகத்துடன், "அப்படியா, தம்பி! நீயே எண்ணிப் பார்த்தால் ஒழிய நம்ப மாட்டாயோ? அவ்வளவு அவநம்பிக்கையா உனக்கு? 'வாண குலத்தைக் காட்டிலும் வேறு குலத்தில் வீரம் இருக்க முடியுமா?' என்ற சந்தேகமோ?" என்றார்.

தோழர்கள் இருவருமே திடுக்கிட்டுப் போனார்கள். தோத்திரமாகச் சொன்னதை இப்படி அவர் குதர்க்கமாக எடுத்துக் கொள்வார் என்று எதிர்பார்க்கவில்லை.

வந்தியத்தேவனுடைய மனதில் எரிச்சல் குமுறியது. ஆயினும் வெளியில் காட்டிக் கொள்ளாமல், "ஐயா! பழுவேட்டரையர் குலத்தின் வீரப் புகழ் குமரி முனையிலிருந்து இமயம் வரையில் பரவியிருக்கிறது. அதைப் பற்றிச் சந்தேகிப்பதற்கு நான் யார்?" என்று பணிவுடன் சொன்னான்.

"நல்ல மறுமொழி; கெட்டிக்காரப் பிள்ளை!" என்றார் பழுவேட்டரையர்.

இந்த மட்டில் பிழைத்தோம் என்று வாலிபர்கள் இருவரும் அங்கிருந்து வெளியேறினார்கள். அப்போது சம்புவரையர் தமது மகனை அழைத்துக் காதோடு, "உன் தோழனுக்குச் சீக்கிரம் உணவு அளித்து எங்கேயாவது ஒரு தனி இடத்தில் படுக்கச் சொல்லு! நீண்ட பிரயாணம் செய்து களைத்துப் போயிருக்கிறான்" என்றார். மாறவேள் கோபத்துடன் தலையை அசைத்து விட்டுப் போனான்.

பிறகு வந்தியத்தேவனை மாறவேள் அந்தப்புரத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கே பெண்கள் பலர் இருந்தார்கள். மாறவேளின் அன்னைக்கு வந்தியத்தேவன் நமஸ்காரம் செய்தான். அவளுக்குப் பின்னால் கூச்சத்துடன் மறைந்திருக்கும் பெண்தான் கந்தமாறனின் சகோதரியாயிருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான்.

'தங்கச்சியை'ப் பற்றி மாறவேள் பல தடவை சொன்னதில் ஏதேதோ கற்பனை செய்து கொண்டிருந்தான் வந்தியத்தேவன். இப்போது ஒருவாறு ஏமாற்றமே யடைந்தான்.

அந்தப் பெண்களின் கூட்டத்திலே பழுவேட்டரையருடன் பல்லக்கில் வந்த மாது யாராக இருக்கலாம் என்பதை அறிய வந்தியத் தேவனுடைய கண்கள் தேடி அலைந்தன. (தொடரும்)

# ஊரும் பேரும்

"தேனீ"

உலகத்திலுள்ள புகழ்பெற்ற சர்வ கலாசாலைகளில், பிரிட்டனில் உள்ள கேம்பிரிட்ஜ் சர்வ கலாசாலையும் ஒன்று. கலைமகள் வாழும் திருக்கோயில் என்று அதைக் கூறலாம். எத்தனை எத்தனையோ கலைஞர்களும் கவி வாணர்களும் அறிவாளிகளும் அதில் கல்வி பயின்றுள்ளார்கள். அத்தகைய பிரபல சர்வ கலாசாலைக்கு பீல்ட் மார்ஷல் ஸ்மட்ஸ் இது வரை உப அத்தியட்சகராக இருந்து வந்தார். அவர் காலமாகி விட்டதால் அந்தப் பதவிக்கு வேறொருவரை நியமிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. நம்முடைய பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவை அப்பதவிக்கு நியமிக்கவேண்டும் என்று பிரிட்டனில் நூறு பேர் கையொப்பமிட்டுச் சிபார்சு செய்திருக்கிறார்களாம். நேருஜி கேம்பிரிட்ஜில் படித்தவர். பழைய மாணவர் என்ற முறையில் அவருடைய பெயரை அத்தியட்சகர் பதவிக்குப் பிரேரேபிப்பது மிக்க பொருத்தமானதுதான்.

கேம்பிரிட்ஜ் கல்லூரி மாணவராக இருந்தபோது நேருஜி மிக்க சங்கோஜியாக இருப்பார். கூட்டத்தில் பேசுவதென்றால் ரொம்பக் கூச்சப்படுவார்.



காலேஜ் மாணவர் சங்கத்தில் ஒவ்வொரு மாணவனும் மாதத்துக்கு ஒரு முறையாவது பேச வேண்டும். இல்லாவிட்டால் குறிப்பிட்ட ஒரு தொகையை அபராதமாகக் கொடுத்து விட வேண்டும் என்ற ஒரு நிபந்தனை உண்டு. ஜவாஹர் பேச மாட்டார்; அபராதத்தை மாத்திரம் செலுத்தி விடுவார்.

1915-ம் வருஷத்தில்தான் அவர் முதல் முதலாக ஒரு பொதுக் கூட்டத்தில் பேசினார். அப்போது இந்திய சர்க்கார் அச்சுக் கூடங்களுக்கும் பத்திரிகைகளுக்கும் வாய்ப் பூட்டுப் போட்டிருந்தது. அதை ஆட்சேபிக்கும் பொருட்டு அலஹாபாத்தில் ஒரு பொதுக் கூட்டம் கூட்டப்பட்டது. ஜவாஹரை அதில் பேசும்படி சொன்னார்கள். அவருக்கு நடுக்கம் உண்டாகிவிட்டது. ஆனால் எப்படியோ ஒரு வகையாகச் சமாளித்துக் கொண்டு, சுருக்கமாய்ப் பேசி முடித்தார். அவர் பேச்சை முடித்ததும், புகழ்பெற்ற மிதவாதியும் பிரபல வக்கீலுமான ஸர் தேஜ்பகதூர் சாப்ரு மேடைக்கு ஓடோடிச் சென்று, ஜவாஹரைக் கட்டித் தழுவிக்கொண்டு அவருக்கு ஒரு முத்தம் கொடுத்தாராம்.

பண்டித நேருஜி இப்போது செய்து வரும் உணர்ச்சி மிக்க பிரசங்கங்களையும் நீண்ட அறிக்கைகளையும் கேட்டவர்களுக்கும் படித்தவர்களுக்கும் அவர் ஒரு காலத்தில் சங்கோஜியாக இருந்தார் என்பதை நம்புவதே கஷ்டம் அல்லவா?

★

பிரிட்டிஷ் நிதி மந்திரி ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் உடம்பு அசௌக்கியத்தின் காரணமாகத் தமது பதவியை ராஜிநாமாச் செய்து விட்டார்.

ஸர் ஸ்டாபோர்ட் புலால் உண்பதே கிடையாது. காய்கறிகள், உலர்ந்த கொட்டைகள், பழங்கள் இவைதான் அவருடைய உணவு. மதுபானத்தைத் தொடவேமாட்டார்.



குளிர்ந்த ஜல ஸ்நானம் முதலியவற்றில் அவருக்கு அதிக நம்பிக்கை உண்டு. தேகாரோக்கிய விதிகளைத் தவறாமல் பின்பற்றி வரக் கூடியவர். அத்தகையவர் அடிக்கடி நோய்வாய்ப்பட்டது—முடிவில், நோயின் காரணமாகத் தம் பதவியை ராஜிநாமாச் செய்ய வேண்டியதாக ஏற்பட்டது—எளிய உணவுப் பிரசாரகர்களுக்கு மிக்க ஏமாற்றத்தையே விளைவித்திருக்கும்.

ஒரு தடவை சர்ச்சிலுக்கும் ஸர் கிரிப்ஸுக்கும் உணவைப் பற்றி வாக்குவாதம் ஏற்பட்டதாம். அப்போது ஸர் கிரிப்ஸ், "நான் புலால் உண்பது கிடையாது. மதுவும் அருந்துவதில்லை. அதனால்தான் என்னால் இவ்வளவு வேலைசெய்ய முடிகிறது!" என்றாராம். உடனே சர்ச்சில், "அதுதான் நீர் இப்படி இருக்கிறீர். என்னைப் பாரும்! நான் நிறையச் சாப்பிடுகிறேன்; மது அருந்துகிறேன்; சுருட்டை ஊதி ஊதித் தள்ளுகிறேன். ஆனால் 'உம்மைவிட நான் அதிகமாகவே வேலை செய்கிறேன்'" என்றாராம்.

★

புதுடில்லியில் ஸர் ஸாப்ரூ ஞாபகார்த்த மாளிகையின் அஸ்திவாரக்கல் நாட்டு விழாவை ஆரம்பித்து வைத்து நேருஜி பேசுகையில், "ஸர் தேஜ்பகதூர் ஸாப்ரூ ஹிந்து—முஸ்லிம் கூட்டுக் கலாசாரத்தின் சின்னமாக விளங்கி"யதாகக் கூறியுள்ளார். அது முற்றிலும் உண்மை.

ஸர் ஸாப்ரூ உருதுவில் மகா வித்வான். அரபி—பார்ஸி மொழிகளில் அவருக்குப் பெரும் புலமை உண்டு. ஒரு முறை அவர் சென்னையில் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசிக்கொண்டிருந்தபோது, ஒரு

முஸ்லிம் இளைஞர் அவரை இடை மறித்து ஏதோ கேட்டார். உடனே ஸாப்ரு மண்டையில் அடித்தாற்போல அவருக்குப் பதில் கூறியதாவது: "நண்பரே, வெகு தூரத்துக்கு அப்பால் உள்ள இந்தச் சென்னையில் வாழும் உம்மைவிட நான் இஸ்லாமிய கலாசாரத்தின் சிறந்த பிரதிநிதியாக விளங்க முடியும். நீர் இதைத் தெரிந்துகொள்ளும்."

ஸர் ஸாப்ருவுக்கு அரபி—பார்ஸி மொழிகளில் உள்ள பாண்டித்யத்தைப் பற்றி வேறொரு ரசமான வரலாறும் கூறப்படுவதுண்டு. ஒரு முறை ஸர் ஸாப்ரு ஹைதராபாத் கோர்ட்டில் ஒரு வழக்குக்காக ஆஜராகி யிருந்தார். எதிர்த் தரப்பில் ஜனாப் ஜின்னா ஆஜராகி யிருந்தார். அப்போது நீதிபதிகள் மேற்படி வழக்கில் சம்பந்தப்பட்டதும் பார்ஸி மொழியில் எழுதப்பட்டிருந்ததுமான ஒரு தஸ்தவேஜை ஜனாப் ஜின்னாவிடம் கொடுத்து அதன் பொருளை மொழிபெயர்த்துக் கூறுமாறு கேட்டுக் கொண்டார்கள். ஜனாப் ஜின்னா முஸ்லிம் பிரமுகராக இருந்ததால் அவருக்கு பார்ஸி கட்டாயம் தெரிந்திருக்க வேண்டு மென்று நினைத்துத்தான் நீதிபதிகள் அவ்விதம் கேட்டார்கள். ஆனால் ஜனாப் ஜின்னாவுக்கோ பார்ஸியில் ஓர் எழுத்துக் கூடத் தெரியாது. நீதிபதிகளின் வேண்டுகோளைக் கேட்டு அவர் தயங்கினார். உடனே அருகில் இருந்த ஸர் ஸாப்ரு மேற்படி தஸ்தவேஜை வாங்கிக் கடகடவென்று அதன் பொருளை வாசித்துக் கூறினார். கோர்ட்டில் இருந்த அனைவரும் பிரமித்துப் போனார்கள். மறு நாள் இந்தச் சம்பவத்தை வெளியிட்ட ஹைதராபாத் பத்திரிகை அதற்குக் கீழ்க் கண்ட தலைப்புக் கொடுத்திருந்தது: "பண்டித ஜின்னாவுக்காக மௌலானா சாப்ரு மொழி பெயர்க்கும் விந்தை!"

★

ஐக்கிய தேச மகாசபையின் தலைமைக் காரியதரிசியாக யாரை நியமிப்பது என்பது பற்றி அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்குமிடையே இன்னும் ஒற்றுமை ஏற்படக் காணோம்.

"டிரிக்வே லியைத்தான் நாங்கள் தலைமைக் காரியதரிசியாக்குவோம்" என்று கச்சை கட்டுகிறது அமெரிக்கா.

"அவரைத் தவிர வேறு யாரை வேண்டுமானாலும் காரியதரிசியாக்க நாங்கள் தயாரா யிருக்கிறோம்" என்கிறது ருஷ்யா. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் 1946-ம் வருஷம் மேற்படி காரியதரிசி பதவிக்கு நார்வே தேசத் தலைவரான ஸ்ரீ டிரிக்வே லியின் பெயரைச் சிபாரிசு செய்தது ருஷ்யாதான்.

இரண்டு பெண்டாட்டிக்காரனின் நிலைமையைப் போன்றிருக்கிறது ஸ்ரீ டிரிக்வே லியின் நிலைமை இப்போது. அமெரிக்காவையும் அவர் திருப்தி செய்தாக வேண்டும். ருஷ்யாவையும் அவர் திருப்தி செய்தாக வேண்டும். ஆனால் ஒருவரைத் திருப்தி செய்வது இன்னொருவருக்குப் பிடிக்காது. ஸ்ரீ லீ மாஸ்கோவுக்குத் தூது சென்றது அமெரிக்காவுக்குப் பிடிக்கவே இல்லை. கொரியா விஷயத்தில் அவர் உறுதியான நடவடிக்கை எடுத்துக் கொண்டது ருஷ்யாவுக்குப் பிடிக்கவில்லை.

ஐக்கிய தேச மகாசபை நிர்வாகிகளில் பொதுக் காரியதரிசிப் பதவிதான் மிக்க உயர்ந்தது. ஸ்ரீ லிக்குக் கீழ் 4000 பேர் வேலை செய்கிறார்கள். உலகத்தின் அமைதிக்குப் பங்கம் நேரக்கூடிய எந்த விஷயத்தையும் பந்தோபஸ்துக் கௌன்ஸிலின் கவனத்துக்குக் கொண்டுவரக் கூடிய அதிகாரம் அவருக்கு உண்டு.

ஸ்ரீ டிரிக்வே லிக்கு வருஷச் சம்பளம் மாத்திரம் இருபதினாயிரம் டாலர். இதைத் தவிர இதர செலவுகளுக்காக இன்னொரு இருபதினாயிரம் டாலரும் வீட்டு வாடகைக்காக மற்றொரு பதினையாயிரம் டாலரும் கொடுக்கப்படுகிறது.

★

கிழக்கு வங்க அகதிகளைக் குடியேற்றுவது சம்பந்தமாக சமீபத்தில் ஹைதராபாத்துக்கு வந்திருந்த மேற்கு வங்கப் பிரதம மந்திரி டாக்டர் பி. ஸி. ராய் சென்ற வாரம் சென்னைக்கும் வந்து சில தினங்கள் தங்கிவிட்டுச் சென்றார்.

டாக்டர் ராய் இந்தியாவில் உள்ள மிகப் பெரிய டாக்டர்களில் ஒருவர்.



வைத்தியத் தொழிலில் மாதம் ஒன்றுக்கு முப்பதினாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதித்து வந்தாராம். நோயாளியைப் பார்த்துப் பரிசீலனை செய்து வெறும் ஆலோசனை சொல்வதற்கு மாத்திரம் அவருடைய சார்ஜ் 125 ரூபாயாம்.

டாக்டர் ராய் காந்தி — வைத்தியர். காந்திஜிக்கு நோய் கண்டபோதெல்லாம் பெரும்பாலும் டாக்டர் ராய்தான் அவருக்குச் சிகிச்சை செய்வார். ஒரு முறை மகாத்மாஜி டாக்டர் ராயை நோக்கி, "நீர் எனக்குச் சிகிச்சை செய்வது போலவே 35 கோடி மக்களுக்கும் சிகிச்சை செய்வீரா?" என்று கேட்டாராம். அதற்கு டாக்டர் ராய் "35 கோடி மக்களுக்காக வாழும் தங்களுக்குச் செய்தால், அவர்களுக்கெல்லாம் சிகிச்சை செய்தது போலத்தானே!" என்றாராம்.

# நடந்த நாடகம்

வசு

சங்கரன் ஆபீஸுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். அவன் தாயார் தங்கம்மாள் அவனைப்பார்த்து, "உன் அத்தை பத்மாவிடமிருந்து கடிதம் வந்து பத்து நாளைக்கு மேல் ஆகப்போகிறதே; அவள் கேட்டிருக்கும் விஷயத்தைப்பற்றி உன் அபிப்பிராயம் என்ன என்பதை எழுதவேண்டாமா?" என்றாள்.

அதற்கு சங்கரன், "அம்மா, இதில் என் அபிப்பிராயத்தை நான் இதோடு ஆயிரம் தடவை சொல்லியாகி விட்டது. உன்னுடைய நாத்தனார் பெண் நாகலக்ஷ்மியைக் கலியாணம் செய்து கொள்வதில் எனக்குக் கொஞ்சம்கூட இஷ்டமில்லை. இதை நீயே அவளுக்கு எழுதித் தெரிவித்து விடு. உனக்கு எழுத சங்கோசமாயிருந்தால் அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டு சாயங்காலம் ஆபீஸிலிருந்து வந்ததும் பதில் போட்டு விட்டு மறுவேலை பார்க்கிறேன்" என்றான்.

"நீ சொல்வது இருக்கட்டும். காரணம் ஒன்றும் தெரிவிக்காமல் 'இஷ்டமில்லை' என்று பொறுப்பில்லாமல் எழுதுவது நன்றாக இருக்குமா?" என்று கேட்டாள் தங்கம்மாள்.

"காரணத்துக்கா அம்மா, பஞ்சம்? பந்துக்களுக்குள் சம்பந்தம் செய்து கொள்வது என்னைக்குமே இரண்டாம் பக்ஷம்தான். அது ஏற்கெனவே இருக்கிற நல்ல உறவையும் சௌஜன்யத்தையும் கெடுத்து விடலாம். போதாக் குறைக்கு சம்பந்திகளுக்குள் மனஸ்தாபம் வந்து விட்டாலோ கேட்க வேண்டியதே இல்லை. இதெல்லாம் உனக்குத் தெரியாதா, என்ன?" என்றான் சங்கரன்.

சங்கரன் வாசலில் வைத்திருந்த சைக்கிளை நோக்கிப் புறப்படவே தங்கம்மாள், "சரி, சாயங்காலம் நீ வந்ததும் மறுபடியும் யோசனை செய்து கொள்ளலாம்!" என்றாள்.

சங்கரனுடைய தகப்பனார் குப்புசாமி அய்யர் அவருடைய பெற்றோர்களுக்கு ஒரே பிள்ளை. அதே மாதிரியாக சங்கரனுடைய அத்தை பத்மா குப்புசாமி அய்யருக்கு ஒரே தங்கை. குப்புசாமி அய்யர் படிப்பு முடிந்து உத்யோகத்தில் அமர்ந்ததும் தங்கம்மாள் அவருக்கு மனைவியானாள். தங்கம்மாள் வீட்டிற்கு வந்து இரண்டு வருஷம் கழித்து பத்மாவுக்கு ஒரு நல்ல இடத்தில் கலியாணமாயிற்று. இடம் பசையுள்ளதாக இருந்ததால் நிறைய வரதக்ஷிணை கொடுக்க வேண்டியிருந்தது. அதற்காகக் கிராமத்தில் பிதிரார்ஜிதமாயிருந்த வீட்டையும் நிலத்தையும் குப்புசாமி அய்யரின் தகப்பனார் விற்பதற்குத் தயங்கிக் கொண்டிருந்த சமயம், குப்புசாமி அய்யர் "அப்பா, இதில் யோசனை செய்வதற்கு ஒன்றுமில்லை. இன்றைக்கு நான் ஏதோ சொற்பச் சம்பளத்தில் இருந்தாலும் நாளடைவில் முன்னுக்கு வந்து விடுவேன். குடும்ப சொத்தை விற்றுப் பத்மாவுக்குக் கல்யாணம் செய்து விடுங்கள். அவள் நல்ல இடத்தில் போய்ச் சேர்ந்தால் ஒரு ஆபத்துக் காலத்தில் நம்மைக் கை விட்டு விடவா போகிறாள்?" என்று குப்புசாமி அய்யர் தைரிய மூட்டினார். அவருடைய தகப்பனாரும் பிள்ளையின் குணத்தை நினைத்துப் பூரிப்படைந்து போனார்.



பத்மாவின் புருஷன் மதுரையில் ஒரு சிறிய மோட்டார் ரிப்பேர் ஷாப் வைத்திருந்தார். நாளடைவில் அது விருத்தியாகி மோட்டார் விற்கும் ஸ்தாபனமாக மாறிற்று. பத்மாவும் பணச் செருக்கால் குணத்தில் மாறுதலடைந்தாள். முன்பெல்லாம் இரண்டு மாதத்

'க்கு ஒரு தடவை பிறந்தகத்துக்கு வந்து பாய்க் கொண்டிருந்தவள் பிறகு வருஷத் 'திற்கு ஒரு தடவை வந்து போவதுகூட பூர்வமாகி விட்டது. தவிரவும், தனக் ாகத் தயக்கமில்லாமல் ரொம்ப சொத்து ாலையும் மனமுவந்து தியாகம் செய்த சாந்த அண்ணன் குப்புசாமி அய்யர் ரு சிறிய உத்தியோகத்தி லிருக்கி ன்ற காரணத்தால் அவரைப் பற்றிக் கவலையாகவும் நினைக்கத் தொடங்கினாள். ்மாவின் போக்கினால் ஏமாற்ற மடைந்த பற்றோர்கள் மனமுடைந்து ஒருவர் பின் ருவராகக் காலஞ் சென்றார்கள். அவர்க ளுடைய அந்திமக் கிரியைகளுக்காகக் கடன் ாங்கி அதனால் துன்பமடைந்திருந்த குப்பு ாமி அய்யரின் நிலைமையை நேரில் பார்த்தும் ட பத்மா சும்மா இருந்து விட்டாள். பக்க வாக்கில் அண்ணாவிடம் '' அண்ணா ன் சக்திக்கு மீறி ஏன் செலவு செய்கிறாய்? தை யெல்லாம் முன் யோசனை செய்து கொஞ்சம் பணம் சேர்த்து வைத்திருந்தால் ப்பொழுது கடன் வாங்கும் நிர்ப்பந்தம் ற்பட்டிருக்காதல்லவா ?'' என்று புத்திமதி 'வது சொல்லி விட்டுப் போனாள். குப்பு ாமி அய்யருக்கு அப்பொழுதுதான் பத்மா ின் மனப் போக்குத் தெரிந்தது. இருந் ாலும் காலப் போக்கில் பத்மாவின் குணம் [illegible] சரியாகப் போய்விடும் என்று 'திர்பார்த்தார். ஆனால் அவருடைய தங்கை ன்னுடைய போக்கைத் திருத்திக் 'காள்ளுவதற்கு முன்னமேயே அவருடைய ாழ்க்கை முடிவடைந்து விட்டது.

குப்புசாமி அய்யருடைய மனைவி தங்கம் ாள் தன் ஒரே பிள்ளையான சங்கரனுடன் ஷ்ட ஜீவனம் நடத்திக் கொண்டிருக் ாள். பத்மா அவர்களுடைய நிலைமையை ணர்ந்து அவர்களுக்கு உதவி செய்ய முன் ரவில்லை. தங்கம்மாளும் தன்னுடைய ாத்தனார் பத்மாவிடமிருந்து எவ்வித உதவி ம் நாடவில்லை. நாளடைவில் சங்கரன் !. ஏ., பாஸ் செய்து சென்னையில் ஒரு ல்ல உத்தியோகத்தில் அமர்ந்தான். )ந்த சமயத்தில் தான் பத்மாவின் பெண் ாகலக்ஷ்மி கலியாண வயதை அடைந்தாள். வளை ஒரு நல்ல வரனாகப் பார்த்துக் லியாணம் செய்து கொடுப்பதற்குள் ாகவே பத்மாவின் கணவர் திடீரென்று ன்று நாள் காய்ச்சலில் இறந்து போய் ிட்டார். இந்தத் தகவல் தெரிந்ததும் தங்கம் ாள் தன் பிள்ளை சங்கரனுடன் மதுரைக் ப் போய் பத்மாவைக் கண்டு அவளுக்கு றுதல் சொல்லிவிட்டு வந்தாள்.



புருஷன் இறந்ததும் பத்மாவினுடைய புக்ககத்து தாயாதிக்காரர்கள் அவளை அலட்சியம் செய்ய ஆரம்பித்தனர். போதாக் குறைக்கு அவள் புருஷன் சுயார்ஜிதமாகச் சம்பாதித்து, அந்தப் பணத்திலிருந்து முதல் போட்டு நடத்திக் கொண்டிருந்த மோட்டார் தொழிலில் பங்கு கோரவும் ஆரம்பித்தனர். அப்போதுதான் பத்மாவுக்குத் தன்னுடைய அனாதையான நிலைமை விளங்கியது. அவள் தன்னுடைய மன்னி தங்கம்மாளுக்குத் தன் கஷ்ட தசையை எடுத்துச் சொல்லிப் பழைய மனஸ்தாபங்களை மறந்து விடும்படியும், தன்னுடைய பெண் நாகலக்ஷ்மியை மாட்டுப் பெண்ணாக ஏற்றுக் கொள்ளும்படியும் கடிதம் எழுதியிருந்தாள். அந்த கடிதத்தில் தான் சங்கரனிடத்தில் அதுவரை அசிரத்தையாக இருந்து விட்டதற்காக மன்னிப்பும் கோரியிருந்தாள்.

தங்கம்மாள் தன் பெயருக்குத் தகுந்தாற் போல் தங்கமான குணத்தைப் படைத்திருந்தாள். நாத்தனார் பத்மாவின் கடிதத்தைப் பார்த்ததும் அவளுக்கு அவள் மேல் அனுதாபம் உண்டாயிற்று. ஆகவே நாகலக்ஷ்மியைச் சங்கரனுக்குக் கலியாணம் செய்து வைத்து விடலாம் என்ற முடிவுக்கு வந்தாள். தன்னுடைய பேச்சைச் சங்கரன் தட்டமாட்டான் என்று கருதி தைரியமாக அந்த விஷயத்தைச் சங்கரனிடம் பிரஸ்தாபித்தாள். ஆனால் அவள் எதிர்பார்த்ததற்கு மாறாகச் சங்கரன் ஒரு காலத்தில் தன் குடும்ப விஷயத்தில் அத்தை பத்மா அலட்

நிதமாகிக்கொண்டு வந்தது. ஒரு சமயம் ன் கோவிலுக்குப் போய்விட்டுத் திரும்பி ந்து கொண்டிருந்தபோது என் மாமனும்—ன் தாத்தா—நான் வீட்டுக்குத் திரும்பி ருக்கமாட்டேன் என்ற நினைப்பில் மாமி யாரிடம், "நான் என்ன பண்ணுவது? ந்தத் தங்கத்தைத் தள்ளி வைத்து விட்டு ன் பிள்ளைக்கு வேறு கலியாணம் செய்து வைத்துவிடலாம் என்று ஒன்றிரண்டு பண் ஜாதகங்களைக்கூடப் பொருத்தம் சர்த்து வைத்திருக்கிறேன். இந்தப் பச்சை ஜாடை மாடையாக எடுத்தால்கூட ன் பிள்ளைக்கு வேப்பங்காய் கசக்கிறது" ன்று சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டதும் எனக்கு ஏற்பட்டிருந்த பச்சை திகைத்துக் கதிகலங்கிப்போனேன். ன்றிரவு இதைப் பற்றி உன் அப்பாவிடம் சால்லி நான் அழுதபோது, அவர் 'நீ பயப் படாதே, அப்படி ஒன்றும் நடக்காது' என்று ான் சமாதானம் சொன்னார். என்ன ருந்தாலும் சாது பெரியவர்கள் அவரை ற்புறுத்தி அவர் மனதைக் கலைத்து ரண்டாம் தடவை கலியாணம் செய்து காள்ளச் சம்மதிக்க வைத்துவிட்டால் ன்ன செய்வது என்ற பயம் என்னைச் ழ்ந்துகொண்டது. அன்று இரவு பூராவும் யாசனை செய்ததின் பயனாக ஒரு முடிவுக்கு ந்தேன்.

"அந்தக் காலத்தில் உன்னுடைய அத்தை த்மா என்னிடம் உயிரையே வைத் திருந்தாள் என்று கூடச் சொல்லலாம். அவள் கலியாணமாகிப் புருஷன் வீட்டுக்குப் போகும்வரை 'மன்னி, மன்னி!' என்று என்னைச் சுற்றிக்கொண்டே இருப்பாள். எனக்கும் அவளிடம் ரொம்பப் பிரியம். அவள் கலியாணமாகிப் புக்ககம் போன சில வருஷங்கள்வரை ஒவ்வொரு மாதமும் எனக் குத் தவறாமல் கடிதம் போட்டுக் கொண் டிருந்தாள். ஒவ்வொரு கடிதத்திலும் எனக் காக அவள் எவ்வித உதவியும் செய்யத் தயாராக இருப்பதாக எழுதுவாள்.

"இப்படிப்பட்ட ஒரு நாத்தனார் இருக்கும் போது அவளுடைய யோசனையையும் தெரிந்து கொள்ளலாமென்று நினைத்து முடித்த நான் என்னுடைய ஆபத்தான நிலைமையைப் பற்றி அவளுக்கு எழுதினேன். அவளிடமிருந்து பதில் ஒன்றும் வரவில்லை. எனக்குத் திகைப்பாயிருந்தது.

"அடுத்த வாரம் உங்கப்பா ஏதோ அலுவ லாக வெளியூர் போயிருந்தார். அப்பொழுது ஒரு நாள் உன் அத்தை பத்மா, திடீரென்று துரையிலிருந்து புறப்பட்டுச் சென்னை வந்து சேர்ந்தாள். நான் அவளை வரவேற் றதைக் கவனியாமலேயே வேகமாக உள்ளே போய்விட்டாள். உள்ளே போய் கூடத்தி லிருந்த என் மாமியாரிடம், 'அம்மா, உன் மாப்பிள்ளை என்னை இங்கே அனுப்பி விட்டார்!' என்றாள் விசித்துக்கொண்டே.

"என் மாமனார் அவளிடம் 'உனக்கும் உன் புருஷனுக்கும் ஏதாவது மனஸ் தாபமா?' என்று கேட்டார்.

"அதற்குப் பத்மா 'அப்பா, அதை ஏன் கேட்கிறீர்கள்? கொஞ்ச நாளாகவே அவர் என்னிடம் சகஜமாகப் பேசுவதில்லை; பழகுவதில்லை. எனக்கு இன்னும் குழந்தை இல்லையே என்ற மனக்குறை அவருக்கு இருப்பதாகத் தெரிந்தது. யாரோ பகட் பார் பேச்சைக் கேட்டுக்கொண்டு இரண் டாம் கலியாணம் செய்துகொள்ள ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார் என்றும் கேள்விப்

---

## ஆசிரியர் அலறல்!



பட்டேன். ஆகவே, அவருடன் இனி அரை விநாடிகூட இருக்க முடியாது என்று எனக்குத் தோன்றியது. என்னை இங்கே வைத்துச் சித்திரவதை செய்வதைவிட இப்பொழுதே பிறந்த வீட்டுக்கு அனுப்பி விடுங்கள்!' என்று அவரிடம் சொன்னேன். அவரும் 'விட்டது சனியன்!' என்று நினைத்துக்கொண்டு உடனே என்னை ரயிலேற்றி இங்கு அனுப்பி விட்டார்' என்று சொல்லி விட்டு விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள்.

"பத்மாவின் நிலைமையும் என்னுடைய நிலைமையைப் போல் ஆனதை நினைத்ததும் எனக்குத் துக்கம் தாங்கவில்லை. இருந்தாலும் நான் என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே என் மாமனார் ரௌத்ராகாரமாய், 'இதென்ன அநியாயத்தனமாயிருக்கிறது? ஒவ்வொரு பெண்ணுக்குக் கலியாணமாகிப் பத்துப் பன்னிரண்டு வருஷம் கழித்துக் கூடக் குழந்தை பிறப்பதுண்டு. இதற்காக முன்பின் யோசனையில்லாமல் உன் புருஷன் உன்னை இங்கே அனுப்பிவிட்டானு? நேற்றைக்குப் பிறந்தவன் இவன்! இவனுக்கு என்ன உலக அனுபவம் தெரியும்? அடுத்த ரயிலில் போய் நேரில் அவனைக்கண்டு என்ன செய்கிறேன் பார்!' என்றார் படபடப்பாக.

"இதற்குள் என் மாமியார் அவரைச் சமாதானப்படுத்தி 'நீங்கள் இப்படியெல்லாம் சண்டைக்கு முஸ்தீபு செய்துகொண்டு போனால் காரியம் கெட்டுப் போய்விடும். நீங்கள் பத்மாவையும் கூடவே கூட்டிக் கொண்டு போய் மாப்பிள்ளையிடம் 'இன்னும் சில வருஷங்கள் பொறுத்துப் பாருங்கள். அப்புறமும் பத்மாவுக்குக் குழந்தை பிறக்கவில்லை என்றால் அவளை விலக்கி வைத்து விட்டு உங்கள் இஷ்டம்போல் வேறு கலியாணம் செய்து கொள்ளலாம் என்று சொல்லிச் சமாதானப்படுத்தி விட்டு வாருங்கள்' என்றாள்.

"அதற்கு என் மாமனார், 'ஆமாம், நீ சொல்வதும் ஒரு நல்ல யோசனைதான்! மாப்பிள்ளையிடம் நயமாகப் பேசித்தான் அவனை நம்முடைய வழிக்குத் திருப்ப வேண்டும். எதற்கும் நாம் இரண்டு பேரும் பத்மாவுடன் போய்க் காரியத்தை முடித்து விட்டு வருவோம்' என்றார். அன்றிரவே எனக்கு வேலைக்காரியைத் துணையாக வைத்துவிட்டு மூவரும் மதுரைக்குப் போனார்கள். போகும்பொழுது பத்மா என்னிடம் அதிகம் பேசவில்லை. இரண்டு நாள் கழித்துத்தான் என் மாமியாரும் மாமனாரும் திரும்பி ஊருக்கு வந்தார்கள். அவர்கள் மதுரைக்குப் போயிருந்த பொழுது பத்மாவிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் 'நான் இரண்டு நாட்களுக்கு முன் அங்கு வந்துதங்கி பெற்றோரை ஒரு கலக்குக் கலக்கி விட்டுப் போனேன் அல்லவா? அது வெறும் நடிப்பு. உண்மையில் என் அப்பா — அம்மாவுக்கு நம்பிக்கையும் அனுதாபமும் ஏற்படவேண்டும் என்பதற்காக நானும் என் கணவரும் சேர்ந்து யோசனை செய்து ஒரு திட்டம் போட்டு அதைக் காரியத்திலும் நிறைவேற்றினோமே ஒழிய வேறு ஒன்றும் இல்லை. உண்மையில் என் கணவர் என்னிடம் மிகவும் பிரியமாகத்தான் இருக்கிறார். இந்தச் சமாசாரம் மூன்றாம் மனிதர்கள் யாருக்கும் தெரிய வேண்டாம்' என்று எழுதியிருந்தாள்.

"இந்தச் சம்பவம் நடந்த இரண்டு வருஷங்களுக்குப் பிறகுதான் நீ பிறந்தாய். நீ பிறந்து ஐந்து வருஷங்களுக்குப் பின்தான் பத்மாவும் நாகலக்ஷ்மியைப் பெற்றாள். உன் அத்தை பிற்காலத்தில் நம்மிடம் ஒரு மாதிரியாக நடந்து கொண்டாலும் ஒரு காலத்தில் அவள் எனக்குச் செய்த உதவியை நினைத்தாவது நான் அவளுடைய பெண் நாகலக்ஷ்மியை மாட்டுப் பெண்ணாக ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். பிறகு உன் இஷ்டம்" என்று சொல்லி முடித்தாள் தங்கம்மாள்.

தங்கம்மாள் சொன்ன வரலாற்றைச் சிரத்தையுடன் கேட்ட சங்கரன், "அம்மா இதை முன்னமேயே சொல்லியிருந்தால் நான் நாகலக்ஷ்மியைக் கலியாணம் செய்து கொள்ளச் சம்மதித்திருப்பேனே! இப்பொழுதும் ஒன்றும் தவறிப் போய் விடவில்லை. இதோ அப்படியே பத்மா அத்தைக்குப் பதில் எழுதிவிடுகிறேன்" என்று சொல்லிக் கடிதம் எழுதலானான்.

தங்கம்மாளுக்கு முதலில் சந்தோஷம் பிடிபடவில்லை. மறுபடியும் நினைத்துப் பார்த்தபோது சங்கரனிடம் ஒரு கற்பனைக் கதையைச் சொல்லி அவனை அந்தக் கலியாணத்திற்குச் சம்மதிக்கச் செய்த காரியம் அவள் மனதை உறுத்தியது. உண்மையை வெளியிட்டால்தான் மனதுக்கு நிம்மதி ஏற்படும் போலிருந்தது. சங்கரன் கடிதத்தைத் தபாலில் சேர்த்து வருவதற்காக எழுந்தான். அதைப் பார்த்த தங்கம்மாள் "ஆமாம், கடிதத்தை அனுப்பிவிடப் போகிறாயா?" என்றாள்.

“ஆமாம், ஏன்?” என்றான் சங்கரன்.

“ஒன்றுமில்லை” என்று தயங்கினாள் தங்கம்மாள்.

“என்ன அம்மா! மறுபடியும் யோசனை?”

‘சங்கரா, நான் கொஞ்ச நேரத்திற்கு முன் சொன்னதையெல்லாம் உண்மையென்று நம்பினாயா?’

“பின்னே?”

“ஒன்றுமில்லை. பத்மாவுக்குக் கஷ்டமான சமயத்தில் உதவி செய்யவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. நாகலக்ஷ்மியை எப்படியும் உனக்குக் கலியாணம் செய்து வைத்துவிட வேண்டுமென்ற ஆசையில் இந்த மாத ‘அஞ்சுகம்’ பத்திரிகையில் வந்த கதை ஒன்றையே உன்னிடம் இப்படி மாற்றிச் சொன்னேன்” என்றாள் தங்கம்மாள். அதைச் சொல்லும்பொழுது தங்கம்மாளின் குரல் கரகரத்தது.

தங்கம்மாள் தன்னுடைய நாத்தனார் பத்மாவிடம் காட்டிய பரிவையும், பழைய சம்பவங்களை மறந்து நாத்தனாருக்கு உதவவேண்டும் என்று பெருந்தன்மையுடன் எண்ணியதையும் நினைத்து நினைத்துச் சங்கரன் வியந்தான். பிறகு “அம்மா, உன் இஷ்டத்திற்கு விரோதமாகப் போக எனக்கு மனம் வரவில்லை. நான் செய்த தீர்மானத்தை மாற்றப் போவதில்லை. நாகலக்ஷ்மியே உனக்கு மாட்டுப் பெண்ணாக வரட்டும். இதில் இன்னொரு வேடிக்கை கேட்டாயா? நீ சொன்னது அவ்வளவும் கதையென்று எனக்கு முதலிலேயே தெரியும்!” என்றான்.

“அப்படியா!” என்றாள் தங்கம்மாள்.

“ஆமாம், நீ ‘அஞ்சுகம்’ பத்திரிகையில் வாசித்த ‘நாத்தியும் அண்ணியும்’ என்ற கதையை ‘பசுபதி’ என்ற புனை பெயரில் நான் தான் எழுதியிருக்கிறேன். அந்தக் கதை இந்த மாத இதழில் பிரசுரமாயிருந்ததை உன்னிடம் சொல்ல மறந்தே போய்விட்டேன். ஆனால் அதுவும் ஒரு விதத்தில் நல்லதாகப் போயிற்று. இல்லாவிட்டால் நான் எழுதியிருந்த கதையையே என்னிடம் சொல்லி என் மனதை உன்னால் மாற்றியிருக்க முடியாதல்லவா?” என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே சங்கரன் கடிதத்தைத் தபாலில் சேர்ப்பதற்காகக் கிளம்பினான்.

ஆனந்தமும் ஆச்சர்யமும் ததும்பும் கண்களோடு மகன் போகும் திக்கைப் பார்த்துக் கொண்டே நின்றாள் தங்கம்மாள்.

## அம்பலத்தரசே!





# யந்திரக் குதிரை

**ரா. நா.**

## 4. வாலிப வைத்தியன்

குதிரைக் காரனுக்கு மரண தண்டனை விதித்த பிறகு காஷ்மீர் சுல்தான் இளவரசியை அழைத்துக் கொண்டு அரண்மனைக்கு வந்து சேர்ந்தான்.

அரண்மனையில் மிக அழகிய ஒரு பகுதியைக் காலிசெய்து அங்கு இளவரசியை வசிக்கச் செய்தான். அவளுக்குப் பணிவிடை செய்ய ஏராளமான பெண்கள் அமர்த்தப் பட்டனர். மாயக் குதிரைக்காரனிடமிருந்து விடுபட்டு சௌக்கியமாக இருக்க வசதி கிடைத்தது கண்டு இளவரசி மகிழ்ச்சி அடைந்தாள். ஆனால் இந்த சந்தோஷம் அற்ப சந்தோஷமாக முடிந்தது. ஏனெனில் சுல்தான் அவளுடைய அழகையும் புத்திசாலித் தனமான பேச்சையும் கண்டு அவளைத் தன் மனைவியாகக் கொள்ள விரும்பினான். இளவரசி மறுபடியும் பாரசீகத்திற்குச் செல்ல விரும்பியதை சுல்தான் லட்சியம் செய்யவே இல்லை. அவள் சம்மதத்தைக் கேட்காமலே அவளைக் கலியாணம் செய்து கொள்ள ஏற்பாடு செய்தான்.

ஒரு நாள் எங்கும் ஓரே பாண்டு வாத்திய முழக்கமும் பாட்டுமாக இருந்தது. அதைக் கேட்டு இளவரசி ஆச்சரியமடைந்தாள். காஷ்மீரில் ஏதாவது திருவிழாவாக இருக்கலாம் என்று எண்ணினாள். இவ்வளவு உற்சாகத்திற்குக் காரணம் என்னவென்று விசாரித்ததில் சுல்தானின் வஞ்சகம் அவளுக்குத் தெரிந்தது.

உண்மை நிலையறிந்து இளவரசி கவலைப் பட்டுக் கொண்டிருக்கையில் சுல்தானே அவள் இருக்குமிடத்திற்கு வந்தான். அவனையே கேட்கலாமென எண்ணி, "என்ன எங்கு பார்த்தாலும் கொட்டும் முழக்கமுமா யிருக்கிறது. இன்று உங்கள் நாட்டில் என்ன விசேஷம்?" என்று கேட்டாள்.

சுல்தான் பதிலுரைத்தான்: "தெரியாதா உனக்கு? நீ எனது நாட்டு ராணியாகப் போகிறாய் இன்று!

அதற்காகத்தான் நமது நாடெங்கும் திருவிழா.''

கல்தான் அப்படிச் சொன்னதைக் கேட்டதும் இளவரசி திகைப்படைந்து மூர்ச்சித்து விழுந்துவிட்டாள். அதைக் கண்டு கல்தானுக்குக் கவலை ஏற்பட்டது. மணப்பெண்ணின் தேக அசௌக்கியத்தினால் திருமணம் தடைப்பட்டு விடுமோ எனப் பயந்தான். இளவரசியின் வேலையாட்கள் அவளை மூர்ச்சை தெளிய வைத்தனர். நினைவு வந்தவுடன், இந்தக் கலியாணத்திலிருந்து தப்புவதற்கு ஏதாவது ஒரு வழிசெய்ய வேண்டுமென இளவரசி யோசித்தாள். திடீரென்று பைத்தியம் பிடித்தவள் மாதிரிக் கூக்குரலிட்டுக் கண்டபடி ஏசி கல்தானைக் கொன்று விடுபவள் போல அவனை நெருங்கினாள்.

தலைவிரி கோலமாக மணப்பெண் இவ்வாறு கோபாவேசத்துடன் தன்னை நோக்கி வருவது கண்டு கல்தான் நடுங்கிப் போய்விட்டான். நிமிஷத்திற்கு நிமிஷம் இளவரசியின் நிலைமை மோசமாகி வரவே கலியாணத்தை ஒத்தி போடுவதைத் தவிர வேறு வழியில்லாமல் போய்விட்டது. கலியாணம் தள்ளிப் போடப்பட்டது கேட்டு இளவரசி ஓரளவு அமைதி அடைந்தாள். ஆனால் கல்தானைக் கண்டால் மட்டும் அவள் தன் பைத்திய சொரூபத்தைப் பூரணமாகக் காட்டிவந்தாள்.

எப்படியாவது இளவரசியின் பைத்தியத்தைத் தெளிய வைத்து அவளை மணந்து கொள்ளவேண்டும் என்னும் ஆசையால் கல்தான் தனது ராஜ்யத்தில் புகழ்பெற்ற வைத்தியர்கள், மந்திரவாதிகள் முதலியோரை வரவழைத்து அவளுக்குச் சிகிச்சை செய்ய ஏற்பாடு செய்தான். ஆனால் எந்த வைத்தியனும் மந்திரவாதியும் இளவரசியை அணுக முடியவே இல்லை. யாராவது அவளுடைய அறைக்குள் நுழைந்தால் உடனே அவள் பயங்கரமாகக் கதறிக்கொண்டும், கூக்குரலிட்டுக்கொண்டும் அவர்களைக் கிழித்து விடுவது மாதிரி அவர்களை நோக்கி ஓடுவாள். அவர்களும் உயிர் பிழைத்தால் போதும் என்று இளவரசியின் அறையிலிருந்து ஓட்டம் எடுப்பார்கள். இவ்வாறாக யாரும் இளவரசியை அணுகுவதற்கு அஞ்சி ஓடினர். அழகில் சிறந்தவளாயிருந்தாலும் பைத்தியக்காரப் பெண்ணை மணந்து கொள்ளக் கல்தான் பிரியப்படவில்லை. கலியாண ஆசையை விட்டு விடத்தான் வேண்டும் என்கிற முடிவுக்கு கல்தான் வந்து கொண்டிருக்கையில் எங்கிருந்தோ அந்நாட்டிற்கு ஒரு துறவி வந்து சேர்ந்தான். அவன் தான் தங்கியிருந்த சத்திரத்திற்கு வரும் ஜனங்களிடம் அந்நாட்டைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தான்.

இந்தத் துறவி வேறு யாரும் இல்லை; பாரசீக நாட்டு இளவரசன் பிரோஸ் ஷா தான். துறவி வேஷம் போட்டுக் கொண்டு ஒவ்வொரு நாடாகத் தனது காதலியான வங்க நாட்டு இளவரசியைப்பற்றி விசாரித்துக்கொண்டு வருகையில் காஷ்மீர் தேசத்திற்கு வந்து சேர்ந்தான். சத்திரத்திலுள்ள ஜனங்களுடன் பேசியதில் ஒரு இளவரசி காஷ்மீர் கல்தானை மணந்துகொள்ள வேண்டிய தினத்தன்று பைத்தியம் பிடித்துப் பயங்கரமான நிலையிலிருப்பதாகக் கேள்விப்பட்டான். இது ஒருவேளை தனது காதலியாயிருக்குமா எனச் சந்தேகித்து காஷ்மீரின் தலைநகரை நோக்கிச் சென்றான் பிரோஸ்.

இளவரசியைக் குதிரைக்காரனிடமிருந்து கல்தான விடுவித்தது.



## சபாஷ் வெடி!



அவளைச் சுல்தான் கலியாணம் செய்து கொள்ள முயற்சி செய்தது. பின்னர் இளவரசி பயங்கரப் பைத்தியக்காரியாக நடித்தது, அவளுடைய பைத்தியத்தைத் தெளிய வைக்கச் சுல்தான் முயற்சித்தது முதலிய எல்லா விவரங்களையும் காஷ்மீர் மக்களிடமிருந்து பிரோஸ் அறிந்து கொண்டான். குதிரைக்காரன் சுல்தானுல் கொலை செய்யப்பட்டான் என்பதைக் கேட்டு பிரோஸ் சந்தோஷமடைந்தான்.

இனி தன் காதலியை எப்படி அடைவது, அவளை எப்படி விடுவிப்பது என்பது பற்றிப் பாரசீக இளவரசன் யோசித்தான். கடைசியில் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. உடனே சத்திரத்தை விட்டு வெளியே கிளம்பி ஒரு வைத்தியனுடைய உடை தயார் செய்தான். அதை அணிந்து கொண்டு சுல்தானின் அரண்மனையை நோக்கிச் சென்ருன். அரண்மனைக் காவலாளிகளை அணுகி, பைத்தியக்கார இளவரசியைக் குணப்படுத்த, தான் வந்திருப்பதாகவும், இந்த விஷயத்தைச் சுல்தானிடம் தெரிவிக்கும்படியும் கேட்டுக் கொண்டான். நாட்டிலுள்ள வைத்தியர்களும், மாந்திரீகர்களும் கைவிட்ட பிறகு இவன் எப்படி இளவரசியைக் குணப்படுத்தப் போகிருன் என்று வேலையாட்கள் சந்தேகப்பட்டார்கள்.

வேலையாட்கள் தயங்கியது கண்டு பிரோஸ் கூறினுன்: "எவ்விதமான பைத்தியமாயிருந்தாலும் தீர்ப்பதற்கு வழி தெரியும். அதை நான் ஒருவரிடமும் கூறுவதற்கில்லை. ஆனுல் நிச்சயம் இளவரசியின் பைத்தியத்தைத் தெளிய வைக்கிறேன். நீங்கள் தைரியமாக உங்கள் சுல்தானிடம் சொல்லுங்கள்."

இந்தச் சந்தோஷ சமாசாரத்தைக் கேட்டு வேலையாட்கள் ஓடோடியும் சென்று சுல்தானிடம் தெரிவித்தனர். யாரும் குணப்படுத்த முடியாது என்று கைவிட்டதை ஒரு வைத்தியன் குணப்படுத்துவதாக முன் வந்திருப்பது கேட்டுச் சுல்தான் சந்தோஷமடைந்தான். உடனே புது வைத்தியனை வரவழைத்து அவனை இளவரசியின் வாசஸ்தலத்திற்கு அழைத்துச் சென்ருன். ஆனுல் அந்த அறைக்குள் செல்வதற்கு மாத்திரம் முடியவில்லை. உள்ளே சென்ருல் இளவரசி சீறி விழுவாளே! என்ன செய்வது? ஆகவே, இளவரசி பார்க்க முடியாத இடத்திலிருந்து அவளை வைத்தியனுக்குக் காட்டினுன் சுல்தான்.

அவள் உள்ளே பாடிக்கொண்டிருந்தாள். இவ்வளவு நாளாக, தான் தேடிக் கொண்

டிருந்த தன் ஆசைக் காதலிதான் பைத்தியக்கார வேஷம் போட்டிருக்கிறாள் என்பதை அறிந்து இளவரசன் பேரானந்த மடைந்தான்.

ஆனால் அவன் தன்னுடைய மகிழ்ச்சியை வெளிக் காட்டிக்கொள்ளவில்லை. நன்றாகக் கவனித்துப் பார்த்ததில், காஷ்மீர் சுல்தானை ஏமாற்றுவதற்காகத்தான் இளவரசி பைத்தியமாக நடிக்கிறாள் என்பதைப் பிரோஸ் அறிந்துகொண்டான்.

சிறிதுநேரம் கவனித்தபின் பிரோஸ் சுல்தானைப் பார்த்து, "சுல்தான் சாஹேப், இளவரசியின் பைத்தியத்தைப் போக்க முடியும். ஆனால் அவளைத் தனியாகப் பார்க்கத் தாங்கள் அனுமதிக்க வேண்டும். அவளுடன் பேசினால்தான் எவ்விதமான வைத்திய முறை அனுஷ்டிக்கலாம் என்பதை என்னால் தீர்மானிக்க முடியும்" என்றான்.

இதைக் கேட்டுச் சுல்தான், "ஹகீம் சாஹேப், தாராளமாகப் போய் இளவரசியைப் பாருங்கள், பேசுங்கள். எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் அவளிடம் மிகவும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். அன்னியரைக் கண்டவுடன் அவள் சீறி விழுவாள்" என்றான். (தொடரும்)

## இரண்டு விடுகதைகள்

1. குளிப்பாட்ட இரண்டு மாடு
கூட்டிக்கொண்டு போனேன்
கருப்புமாடு ஒன்று, வெள்ளைமாடு ஒன்று;
கருப்புமாடு ஆற்றோடே போய்விட்டது.
வெள்ளைமாடு வீட்டுக்கு வந்துவிட்டது.

2. பொரி பொரித்தேன்
பெட்டியில் வைத்தேன்
பொழுது விடிந்தால் காணோம்.

சென்ற வார விடுகதைகளுக்கு விடை:
1. முறம் 2. கோரைப்புல்

# அதிசய யோசனை

மூன்று புத்திசாலிகள் ஒரு காட்டு வழியே போய்க்கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களுக்குத் தாகம் உண்டாயிற்று. தண்ணீருக்காக வெகுநேரம் அலைந்து திரிந்த பிறகு ஒரு கிணறு அவர்களுக்குத் தென்பட்டது. அவர்களில் ஒருவன் கிணற்றில் இறங்கிக் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வந்தான். அப்போது பகல் பன்னிரண்டு மணி இருக்கும். வெய்யில் கடுமையாகக் காய்ந்து கொண்டிருந்தது. அதனால் கிணற்று ஜலமும் மிக்க சூடாக இருந்தது. அவர்கள் அதைக் கொஞ்சம் குடித்து விட்டுக் கீழே கொட்டி விட்டார்கள். குளிர்ந்த நீரை விரும்பினார்கள் அவர்கள். அதை எப்படி அடைவது என்று ஆலோசித்தார்கள்.

அந்த புத்திசாலிகளில் மகா புத்திசாலி ஒருவன் சொன்னான்: "நண்பர்களே, இது என்ன அவ்வளவு கஷ்டமான காரியமா? வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு ஏன் அலைய வேண்டும்? நான் ஒரு யோசனை சொல்லுகிறேன், கேளுங்கள்: வெய்யில் கிணற்றின் மீது அடிப்பதால்தானே ஜலம் சுடுகிறது? கிணற்றைச் சற்று நிழலில் தள்ளிவிட்டால் ஜலம் சுடாது அல்லவா?" என்றான்.

"ஆம், ஆம், சரியான யோசனை!" என்றார்கள் மற்றவர்கள்.

உடனே நான்கு பேரும் சேர்ந்து கிணற்றைத் தள்ளத் தொடங்கினார்கள். எத்தனை பேர் சேர்ந்து தள்ளினாலும் கிணற்றை அசைக்க முடியாது, அது இருந்த இடத்திலேயே இருக்கும் என்பது அந்த முட்டாள்களுக்குத் தெரியவில்லை. மணி நான்கு ஆயிற்று; ஐந்தும் ஆயிற்று. சூரியன் கொஞ்சம் கொஞ்சமாகக் கீழே இறங்கிவிட்டான். வெய்யிலும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்தது. கிணற்றருகே நிழல் உண்டாயிற்று.

"பேஷ், நம் வேலை முடிந்தது. கிணற்றை நிழலில் தள்ளிவிட்டோம்" என்றான் ஒருவன்.



"இனி குளிர்ந்த நீரைச் சாப்பிடலாம்!" என்றான் மற்றவன்.

சூரியன் இதைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே மலைவாயில் மறைந்தான்.

# பாதுஷாவின் காதல்

ஆசிரியர் : சுதர்சன் : : மொழிபெயர்ப்பு : ரா. வி.

## 20. கல்மாரி பொழிந்தது !

"பருன் அப்னன் தன் கையைப் பிடித்ததும் தியூனஸுக்கு ஒரே அடியாகத் தூக்கிவாரிப் போட்டது. அவன் துடியாய்த் துடித்தான். கசாப்புக் கடைக்காரனின் கத்திக்கு அடியிலே தன் கழுத்தைக் கொடுத்த பறவைகூட அவனைப்போலத் துடித்திருக்காது என்று சொல்லி விடலாம். தியூனஸுக்குக் கண்கள் எதிரே பூச்சி பறந்தது. உலகமே அதலபாதாளத்துக்கு அமுங்கிப் போவது போன்ற பிரமை ஏற்பட்டது. அவன் அப்னனின் பிடியிலிருந்து எப்படியாவது தன் கையை விடுவித்துக் கொள்ளவேண்டும் என்று எண்ணினான். ஆனால் பருன் அர்னன் அதற்கு இடம் கொடுத்தால்தானே? அவன் அவனுடைய கையை இறுகப் பிடித்துக்கொண்டு, "நீ என் மனைவி என்பது நினைவிருக்கட்டும்!" என்றான்.

ரேம்பஸ் மறுபடியும், "பருன்! இந்தச் சிம்மாசனமும் மகுடமும் எனக்கு வேண்டாம். நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள்! உங்களுக்குத் தியூனஸைப் போன்று ஆயிரக்கணக்கான அழகிகள் வாய் அசைப்பதற்கு முன் கிடைத்து விடுவார்கள். உங்களுக்கு இவள் ஒரு பிரமாதம் இல்லை. ஆனால் எனக்கு இவள்தான் உயிர்; இவள்தான் உலகம். எனக்கு உலகம் போன்றிருக்கும் இவளை—உலகத்தை விட மேலாக இருக்கும் இவளைப் பிரித்து விடாதீர்கள்; பிடுங்கிக்கொள்ளாதீர்கள். இவளை விட்டால் எனக்கு வேறு கதியில்லை. இவளையின்றி என்னால் உயிர் வாழமுடியாது. என்னையன்றி இவளாலும் உயிர் வாழ முடியாது. எனக்கு இவள்தான் ஜீவாதாரம், இவளுக்கு நான்தான் ஜீவாதாரம். நாங்கள் இருவரும் ஒருவர் இல்லாமல் ஒருவர் உயிர் வாழ்வது என்பது முடியாத காரியம். ஆகவே, எங்களிருவரையும் பிரித்து விடாதீர்கள்!" என்று கெஞ்சாத தோஷமாகக் கெஞ்சினான்.

பருன் என்ன நினைத்தானோ, தெரியவில்லை. ரேம்பஸின் கையிலிருந்து மகுடத்தை வாங்கிக்கொண்டான். அடுத்த கணம் பக்கத்திலிருந்த அரசனின் ஆசனத்தில் அமர்ந்தான். எகிப்து நாடே நினைத்தால்கூடத் தன்னை மறுபடியும் பாதுஷா ஆக்க முடியாது. ஆனால் ரேம்பஸ் ஒருவன் மனம் வைத்தால் தன்னை மட்டும் அல்ல; எவனையுமே பாதுஷாவாக ஆக்கிவிடமுடியும் என்று எண்ணினான்போலும்! ஏனெனில் ரேம்பஸ்தானே பாதுஷா? பாதுஷா எது வேண்டுமானாலும் செய்யலாம் அல்லவா? அவன் நினைப்பதும் வைப்பதும் தானே சட்டம்? அவன் விருப்பத்துக்கு விரோதமாக வாய் திறக்கப் புரோகிதனுக்குக்கூட உரிமை கிடையாதே! ஆகவே அவன் மறுபடியும் பருன் ஆகிவிட்டால், ரேம்பஸினிடமிருந்து தியூனஸைப் பிடுங்கிக்கொள்ள எவ்வளவு நேரம் ஆகிவிடப் போகிறது?—இம்மாதிரியெல்லாம் அவனுடைய உள்ளத்திலே சிந்தனை ஓடியிருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவன் மகுடத்தையும் ராஜ்யத்தையும் மறுபடியும் வாங்கிக்கொண்டிருப்பானோ?

ஆனால் அவன் அப்படி நினைத்தது மாபெரும் தவறு. ஏனெனில் ரேம்பஸ் ஒரு முறை பருன் ஆகிச் சிம்மாசனம் ஏறியிருந்தான். தியூனஸ் அவனுடைய மனைவியாக—பட்டத்து மஹிஷியாக இருந்திருக்கிறாள். ஒரு பருனுடைய மனைவியை அவன் உயிருடன் இருக்கும்பொழுது இன்னொரு பருன் அபகரித்துக் கொள்ள முடியாது. இது எகிப்து நாட்டின் அரசாங்கச் சட்டம்.

சட்ட திட்டத்தின் நுணுக்கங்களைச் சற்றுத் தீர ஆராய்ந்து பார்த்திருந்தால் பருன் அதைத் தவிர்த்திருக்கலாம். ஆனால் விதி ஒரு விதமாக வழி வகுத்திருக்கும் பொழுது அவன் மூளை சரிவர வேலை செய்யுமா?

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்னும் பழமொழி பொய்யா மொழியாயிருந்தால் சிம்மாசனத்தையும் மகுடத்தையும் பெற்றுக் கொள்ளும் பொழுது

நியூனஸும் ரேம்பஸும் எவ்வளவு மகிழ்ச்சியுடன் இருந்தார்களோ, திரும்பிக் கொடுக்கும் பொழுதும் அதே மகிழ்ச்சியுடன்தான் இருந்தார்கள் என்பதைக் கண்கூடாகக் கண்டு தெரிந்து கொண்டிருக்க முடியும். அவர்களுடைய முகத் தோற்றத்தைக் காண்பவர்கள் யாரும் 'முகம் மனித உள்ளத்தின் கண்ணாடி' என்பதை ஒப்புக்கொள்ளுவார்கள்; மறுக்க மாட்டார்கள். ரேம்பஸ் நியூனஸின் கையோடு கைகோர்த்த வண்ணம் அவளைக் 'கரகர' வென்று பிடித்து இழுத்துக் கொண்டு மாளிகையை விட்டு வெளியேறினான்.

அரண்மனைப் படிக்கட்டுகளுக்கு எதிரே, வெளியே திறந்த வெளியில் ஆயிரக்கணக்கான மக்கள் ஏகமாகக் குழுமியிருந்தனர். பருன் அம்னஸ் திரும்பி வந்து விட்டான் அல்லவா? அவன் திரும்பி வந்ததனால் என்ன என்ன அதிசயங்கள் நிகழப் போகின்றனவோ என்பதை அறிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசை மக்களின் உள்ளத்திலே கிளர்ச்சிகொண்டு எழுவது இயல்புதானே! ஆகவே, மாளிகையின் வாசலிலே கூடியிருந்த மக்கள் வைத்த கண் வாங்காமல் மாளிகைப் பக்கமே பார்த்துக் கொண்டிருந்தனர். ரேம்பஸும் நியூனஸும் முகத்தில் மகிழ்ச்சி படர, வெளியே வந்துகொண்டிருப்பதைக் கண்ட மக்களுக்கு 'பருன் அம்னஸின் வார்த்தைகளுக்குப் புரோகிதன் செவிசாய்க்கவில்லை. ஆகவேதான் இருவரும் முகத்தில் மகிழ்ச்சி பொங்க வெளியே வருகிறார்கள்' என்ற திடமான நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. அவர்கள் மகிழ்ச்சி வெறியில் வானத்தைப் பிளக்கும் பலத்த குரலில், ''வானுலகத்தில் வாழும் தெய்வங்கள் பருன் ரேம்பஸுக்கும் மகாராணி நியூனஸுக்கும் நீண்ட ஆயுளையும் சகலவித சுகபோகங்களையும் அளிக்கட்டும்!'' என்று கோஷித்தனர்.

ரேம்பஸ் அதைக் கேட்டதும் இலேசாகச் சிரித்தான். பிறகு உரத்த குரலில், ''இப்பொழுது நான் உங்களுடைய பருன் இல்லை. அதே பழைய பருன் அம்னஸ் மறுபடியும் உங்களுக்குப் பருனாகி விட்டான். தெய்வத்தின் சட்ட திட்டங்கள் என் இதய ராணி நியூனஸை என் கையிலிருந்து பிடுங்கிப் பழைய பருனின் கைகளில் ஒப்படைக்கப் பார்த்தன. ஆனால், நான் சிம்மாசனத்தையும் மகுடத்தையும் துறந்து....இல்லை, இல்லை! விற்று மகாராணியை விலைக்கு வாங்கிக்கொண்டு வந்து விட்டேன். இனி நான் பழைய மாதிரியே உங்களுடைய ஊழியன் ரேம்பஸ்தான்!'' என்றான்.

அதைக் கேட்டதுதான் தாமதம்; மக்களின் விழிகள் தீப்பொறியைக் கக்கின. மறுபடியும் அவர்களுடைய தலையெழுத்தை நிர்ணயிக்கும் உரிமை அதே பழைய கொடுங்கோலனும் குரூர மனப்பான்மை கொண்டவனும், கல்நெஞ்சனுமான பருன் அம்னஸின் கையிலேயா சிக்க வேண்டும்? இம்மாதிரி நிலையை ஏற்படுத்தியவன் யார்? இதே ரேம்பஸ் தானே? இவன் மனம் வைத்திருந்தால் எகிப்து நாட்டு மக்களை அந்தக் கொடுங்கோலனின் கொடுமைகளிலிருந்து காப்பாற்றியிருக்க முடியாதா? ஆனால் ரேம்பஸுக்கு நாட்டைப்பற்றிய — நாட்டின் நலனைப்பற்றிய சிந்தனை எழுந்தால்தானே? அவனுக்குத் தன்னலம் ஒன்றுதான் பெரிதாகத் தோன்றியது. தன்னலத்தை உத்தேசித்துத் தேசத்தை மறப்பதா? தேசத்தின் நலத்தை மறப்பதா? நாட்டின் நலத்துக்காகத் தன் காதலைத் தியாகம் செய்திருக்க வேண்டியதல்லவா அவனுடைய கடமை? காதலுக்காகத் தேசத்தின் நலத்தைக் குலைத்தவர்களோ சித்தமற்றவர்களாகத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் இப்படியெல்லாம் முன்யோசனை இல்லாமல் காரியங்கள் செய்திருப்பானா? — இதை நினைக்க நினைக்க மக்களுக்குக் கோபம் எல்லை மீறியது. அடுத்தகணம் அந்த ஜனக் கும்பலிலிருந்து பலவிதக் குரல்கள் எழுந்தன.

''நீ உன் நலம் ஒன்றையே பெரிதாகக் கருதினாய். ஆனால் எகிப்து நாட்டின் நிலைமை என்ன ஆகும் என்பதைப் பற்றிக் கடுகளவும்



யோசித்ததாகத் தெரியவில்லை. யோசித்திருந்தால் இப்படியெல்லாம் நாட்டை மறுபடியும் சீர்கெட்ட நிலைக்குக் கொண்டு வரத் துணிந்திருப்பாரா?"

"நீ தேசத் துரோகி!"

"நீ எகிப்து நாட்டின் எதிரி!"

"நீ மகா பாவி!"

"நீ கொலைகாரன்!"

"நீ எங்களை ஏமாற்றி மோசம் செய்தாய்!"

"உன்னைக் கழுவில் ஏற்றினால் கூடப் பாவமில்லை!"

"நம்பிக்கைத் துரோகி!"

ரேம்பஸூம் நியூனஸூம் ஆத்திரமும் ஆங்காரமும் கொண்ட மக்களுக்கு எதிரே கதியற்ற குற்றவாளிகளைப்போல நின்று கொண்டிருந்தனர். தீப் பிழம்பெனத் தோற்றமளிக்கும் மக்களைக் கண்டு குலை நடுக்க முற்றனர். 'என்ன நடக்குமோ?' என்று ஒன்றும் புரியாமல் மூளை குழம்பி, நின்றது நின்றபடியே நின்று கொண்டிருந்தனர். அதற்குள்ளாக மக்களின் கூட்டத்தை விலக்கிக்கொண்டு ஒருவன் முன்னேறி வந்தான். வந்ததும் வராததுமாகத் தன் தொண்டை கொண்ட மட்டும் உரத்த குரலில், "இவன் நாட்டின் சத்துரு. இவனைக் கற்களால் அடித்துக் கொன்று போடுங்கள்! கொலை செய்யுங்கள், இந்தக் கொலைகாரப் பாவியை! நாட்டு மக்களின் நலத்தைச் சிறிதும் கவனியாத இவன் இருந்தென்ன? செத்தென்ன?" என்றான்.

இன்னுமொரு மனிதன், "இவன் எந்த நியூனஸுக்காக இந்தக் காரியத்தைச் செய்யத் துணிந்தானோ, அவளையும் கொன்று போடுங்கள்! அவள் இல்லாவிட்டால் இவனுடைய மனம் ஒருவேளை இப்படிப் பேதலித்திருக்காது அல்லவா!" என்றான்.

இந்த வார்த்தைகள் மக்களின் மனத்திலே புகுந்து வேலை செய்யத் தொடங்கின. ஒரு சிறு தீப்பொறி வெடி மருந்திலே விழுந்து விட்டால் எப்படி வேலை செய்யும்? வெடி மருந்து அத்தனையும் வெடித்துத் தீர்ந்த பின்தானே அணையும்! அதேபோல, ஏற்கெனவே கோபம் மூண்டிருந்த மக்கள் இந்த வார்த்தைகளைச் செவியுற்றதும், கோபக் கடலிலேயே மிதக்கலாயினர். எல்லை மீறி ஏற்பட்டு விட்ட கோபம் அவர்களுடைய கண்களை மறைத்ததோடு மட்டுமன்றி அறிவுக்கும் திரை போட்டு விட்டது. அவர்களுக்கு என்ன செய்வதென்றே விளங்கவில்லை.



கோபம் வரம்பு மீறிவிட்டால் 'செய்யத் தகுந்தது எது, செய்யத் தகாதது எது' என்ற விவேக புத்திக்கு இடம் ஏது? மக்களாகிய தங்களுடைய பொன்னான வருங்காலத்தைத் தனியொருவன் தன் காதலுக்காக மண்ணோடு மண்ணாக்கி விட முயன்றால் அதை யார்தான் சகிப்பார்கள்? சுயநலப் பேயான அவனுக்கு என்ன தண்டனை அளித்தால் தகும் என்ற யோசனை அவர்களிடையே எழுவது இயல்புதானே? எத்தனையோ மூளையைக் குழப்பிக் கொண்டும் ஒரு சரியான முடிவுக்கு அவர்களால் வர முடியவில்லை.

இவ்வாறு திகைத்துக் கொண்டிருக்கும் பொழுது அவர்களுக்கு மேற்கூறிய வார்த்தைகள் வழிகாட்டி விட்டன. அடுத்த நிமிஷம் அவர்கள் அனைவரும் தங்கள் தங்கள் காலடிகளிலே குனிந்தனர். தரையில் புதைந்திருந்த கருங்கல் சல்லிகளைப் பெயர்க்கத் தொடங்கினர். வீரன் ரேம்பஸ் அதைக் கண்டு கதிகலங்கிப் போய் விட்டான். காற்றிலே வாழை இலை நடுங்குவதுபோல நடு நடுங்கிப் போய் விட்டான்; தன் பொருட்டு அவனுக்கு இந்தக் குலை நடுக்கம் ஏற்படவில்லை. தன் ஆருயிர்க் காதலி நியூனஸின் பொருட்டுத்தான் ஏற்பட்டது. நியூனஸ் ஏதும் அறியாக் குழந்தையைப் போலத் தாவி அவனை இறுகக் கட்டிக்கொண்டாள். 'தப்புவதற்கு ஏதாவது வழி இருக்கிறதா?' என்று ரேம்பஸ் சுற்றுமுற்றும் கண்களை ஓட்டினான். ஏதாவது புகலிடம் கிடைத்தால்தானே? நாட்டை அவமதிப்பவன் யாருக்குமே இந்தக் கதிதானோ? அரண்மனைக்குள் போகலாம் என்று திரும்பிப் பார்த்தான். அட! இது என்ன இது? அரண்மனைக் கதவும் புரோகிதனுடைய உத்தரவின் பேரில் மூடப்பட்டு விட்டதே! அவர்கள் உள்ளேயும் கூடப் போக முடியாது போலிருக்கிறதே! இனி அவர்களுக்குத் தஞ்சம் அளிக்கக்கூடிய இடமே இல்லை! எங்கு பார்த்தாலும் கதவடைப்பு!

ரேம்பஸ் ஏதோ சொல்ல வாய் திறந்தான். ஆனால் அவன் சொல்லுக்குச் செவி சாய்க்க யார் தயாரா யிருந்தார்கள்? "அடி, அடி! கொல்லு, கொல்லு!" என்ற கூக்குரலில் அவனுடைய சொற்கள் யாருடைய காதிலுமே ஏறவில்லை. கல்

மழை பொழியத் தொடங்கிவிட்டது. ரேப்பன் தன் இரு கைகளையும் நீட்டித் தியூனனின் பூவுடலைக் காப்பாற்ற முயன்றான். ஆனால் கோபாவேசம் கொண்ட அத்தனை பேருக்கெதிரே தனியொரு மனிதனான அவனால் என்ன செய்துவிட முடியும்? கண்களுக்கெதிரேயே அவனுடைய தலை, மார்பு, தோள் எல்லாம் காயமாகி விட்டது. தியூனனைக் காப்பாற்றும் முயற்சியில், அவனே படிக்கட்டுகளில் விழுந்து மூர்ச்சையுற்றுக் கீழே சாய்ந்து விட்டான். இதே படிக்கட்டுகளில்தான் கொஞ்ச நாட்களுக்கு முன்பு, மக்கள் முழங்கால்களை மண்டியிட்டுக்கொண்டு தலை வணங்கித் தலை வணங்கி, இந்த இரு தம்பதிகளின் க்ஷேமத்துக்காகவும் நலனுக்காகவும் நீல வானத்தில் வாழும் அமர தெய்வங்களை வழிபட்டு வேண்டினர். இன்று அதே படிக்கட்டுகளில்தான் அவ்விருவரும் மூர்ச்சையுற்று விழுந்து கிடந்தனர். ஆயினும் மக்களின் குருட்டுக் கோபாவேசம் கொஞ்சங்கூடக் குறைந்தபாடில்லை. மேலும் மேலும் கற்கள் வந்து விழுந்த வண்ணமே இருந்தன. கடைசியில் அவ்விருவருடைய உடல்களும்கூடக் கற்குவியலிலே மறைந்து விட்டன. கணக்கற்ற கற்கள் மேலும் மேலும் விழுந்து குவியலை உயர்த்திக் கொண்டிருந்தன.

அப்படியிருந்தும் கல் மழை பொழிவது குறையவில்லை. கற்கள் அடுத்தடுத்து வந்து விழுந்து கொண்டேயிருந்தன.

## 21. எங்கும் தீபாலங்காரம்!

இவ்வாறு ஆத்திரமும் ஆங்காரமும் கோபமும் குரோதமும் குமுறிக் கொந்தளித்துக் கொண்டிருக்கும் வேளையிலே அரண்மனையின் வாசற் கதவு திறந்தது. பருன் வெளியே வந்தான். மக்களின் ஓங்கிய கைகள் ஓங்கியபடியே நின்று விட்டன. அவர்களுடைய வாய்களிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த கடும் சொற்களும் கடும் சொற்களும் உதடுகளிலேயே ஒட்டிக் கொண்டு விட்டன. அதற்கு மேல் அவர்களால் கை ஓங்கவும் முடியவில்லை; வாய்ச் சொற்களால் வையவும் முடியவில்லை. அவன்தான் பருன் ஆயிற்றே! அவனிடம் வேண்டிய போர் வீரர்கள் இருந்தனர். அவன் தன் கண்ஜாடையைக் கொண்டு எப்படி நாட்டைத் தரையோடு தரையாக ஆக்கி விடலாம்! தலைகுப்புறப் பெயர்த்து வைத்து விடலாம். இருந்த இடம் தெரியாமல் அழித்து மண்ணோடு மண்ணாக்கி விடலாம். அவன் நினைத்தால் ஆகாத காரியம் ஒன்று உண்டா? அவனிடம் அத்தகைய அபார சக்தி அல்லவா இருந்தது! அவன் நினைத்ததெல்லாம் செய்ய முடியுமே! அப்படியிருக்கும் பொழுது அவர்கள் கதிகலங்கி நடுநடுங்காமல் என்ன செய்வார்கள்?

அவன் முன்னே சென்று தன் கைகளாலேயே கற்களை அகற்றினான். பிறகு துரதிர்ஷ்டக்காரர்களான இரு காதலர்களையும் மூர்ச்சை தெளிய வைத்து உணர்வு பெறச் செய்வதற்காகத் தன்னால் இயன்ற பிரயாசைகள் எல்லாம் எடுத்துக் கொண்டான். ஆனால் அவர்களுக்கு உணர்வு வந்தால்தானே? அதைக் கண்ணுற்ற பருன் சொல்லொணாத் துயரத்துக்கு உள்ளானான். அவனுக்குத் தன் உள்ளமே உடைந்து துகள் துகளாகி விட்டது போலத் தோன்றியது. அவன் தன் பதவியையும் பெருமையையும் மறந்து, அத்தனை பேருக்கும் மத்தியிலே விம்மி விம்மி அழலானான். அவனுக்குத் தன் அழுகையை அடக்குவதே மிகவும் சிரம சாத்தியமான காரியமாகப் பட்டது. கடைசியில் தன்னை



சிஷ்யன்:—நேற்று மருந்துக்காக உங்களைத் தேடி ஒருவர் வந்தார். அவருக்கு நீர்வாளம் கொடுத்து அனுப்பினேன்.....!

வைத்தியர்:—அட பாவி! குடியைக் கெடுத்து விட்டாயே?

சிஷ்யன்:—என்னங்க அவருக்கு ஏதாவது கெடுதல் உண்டாகி விடுமா?

வைத்தியர்:—கெடுதல் இருக்கட்டும், அப்பா! நீர்வாளம் அசாத்திய விலையாச்சே......!

எப்படியோ ஒருவாறு சமாளித்துக் கொண்டான். பிறகு கண்ணில் நீர் சுரந்து நிற்கக் கரகரத்த குரலில் உணர்ச்சி பொங்க, "எகிப்து நாட்டு வாசிகளே! உங்களைப் போல் கல் நெஞ்சம் படைத்தவர்கள், கொடூர சித்தம் உடையவர்கள், இதயம் அற்றவர்கள் இந்த உலகத்தில் யாருமே இருக்க முடியாது. உங்களைப் போன்ற மூடர்களை, பயங்கொள்ளிகளை நான் கண்டதே இல்லை. உங்களுக்காக உயிரைக் கொடுக்கத் தயாராயிருப்பவனை அடித்து இம்சிக்கிறீர்கள். உங்கள் மீது இரவு-பகல் எந்நேரமும் கொடுமைகளுக்கு மேல் கொடுமைகள் இழைக்கும் ஒருவனை மிகவும் மரியாதையுடன் போற்றுகிறீர்கள். கொடுங்கோலனின் கையைப் பிடித்து முத்தமிட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்ளுகிறீர்கள். உங்களைக் கொழுந்து விட்டெரியும் கொள்ளியிலே போட்டுப் பொசுக்கத்தான் வேண்டும். அதற்குத் தான் நீங்கள் தகுதியுள்ளவர்கள். புழு வாய்த் துடித்து நீங்கள் புலம்பும் புலம்பலைக் கேட்டுக் கை தட்டிக் 'கடகட' வென்று சிரிக்க வேண்டும் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. உங்களுடைய இந்த மகாபாவத்தை மன்னிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் ஒரு காரியம் செய்யுங்கள். மிகப் பெருங்கல்லாக ஒரு கல்லை எடுத்து என் தலையைச் சிதர்த் தேங்காய் போலச் சிதற அடியுங்கள். அப்படிச் செய்வீர்களானால், உங்கள் குற்றத்தை மன்னித்த பின்னரே மரிப்பதாக நான் சபதம் வேண்டுமானாலும் செய்கிறேன்!" என்றான்.

அதைச் சொல்லி முடித்ததும் அவன் தன் தலையைக் குனிந்து கொண்டான். ஆனால் எகிப்து நாட்டு வாசி எவனுக்குமே பரூன் மீது கை ஓங்கத் துணிவு உண்டாகவில்லை. பரூன் மீது கை ஓங்குவது என்றால் எகிப்து நாட்டில் எவனுக்குத்தான் துணிவு உண்டாக முடியும்?

பரூன் குனிந்த தலை நிமிராமல் கொஞ்ச நேரம் இருந்தான். யாருக்குத்தான் அவன் தலையில் கல்லைத் தூக்கிப் போடத் தைரியம் வரும்? நேரம் ஆக ஆக அவனுக்கு நம்பிக்கை குறையலாயிற்று. கடைசியில் அவன், தானே தன் காலடிகளில் குனிந்து மிகப் பெரிய கல் ஒன்றை எடுத்தான்.

அவன் எதற்காகக் கல்லை எடுக்க வேண்டும்? அதோ, அந்தக் கல்லைத் தூக்கி ஆகாயத்தில் வீசுகிறானே எதற்காக? அட... இதென்ன கோரம்! ஓடிப்போய் அந்தக் கல் விழும் இடத்துக்கு நேரே நின்று விட்டானே! ஐயையோ! என்ன



பயங்கரம்!—வீறிட்டுச் சத்தம் இட்டவாறே அங்கு கூடியிருந்த மக்கள் அனைவரும் கண்களைப் பொத்திக்கொண்டனர். அந்தக் கல் 'பரூன் ஆயிற்றே!' என்று பார்க்கவில்லை, தன் வேகம் கொண்ட மட்டில் வேகமாக வந்து விழுந்து அவன் தலையைப் பதம் பார்த்து விட்டது.

அவனை மகாபாவி என்று தீர்மானித்து விட்டபடியாலும், இரண்டாம் தடவை அவனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கவில்லையாதலாலும் அவனுக்கு ஈமச் சடங்குகள் எதுவும் செய்யப் படவில்லை. அவனுடைய சடலத்தை நீல நதியின் ஆழமான நீர்ப் பரப்பிலே, நீர் வாழும் பிராணிகளுக்கு உணவாக விட்டெறிந்து விட்டார்கள்.

ஆனால் வானுலகத்தில் வாழும் தெய்வங்களுக்கு வீரன் ரேம்பஸும் எழிலரசி நியூனஸும் இவ்வாறு அகால மரணம் அடைவது சற்றும் பிடிக்கவில்லை. ஆகவே இரவு மூன்றாம் யாமம் கழிந்ததும், எகிப்து நாட்டின் அரசாங்க வைத்தியர்களின் பெரு முயற்சியால், அவர்களுடைய சஞ்சீவினிக்கு ஒப்பான மருந்து-மாத்திரைகள் தங்கள் மகிமையைக் காட்டின. ரேம்பஸும் நியூனஸும் புத்துயிர் பெற்றுக் கண் திறந்து பார்த்தனர்.

ரேம்பஸும் நியூனஸும் பிழைத்து விட்டார்கள் என்னும் சந்தோஷச் செய்தியை நாடு நகரம் எங்கும் நகராக்கள் 'நக நக' என்று ஒலித்து அறிவித்தன. அந்தச் செய்தி மக்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதக்கச் செய்தது என்றால் அதில் வியப்பு இல்லை, அல்லவா?

11-ம் நாள் இரவு. பண்டைய நாகரிகம் வாய்ந்ததும் நூறு கோட்டை வாசல்கள் கொண்டதுமான தீப்ஸ் நகரத்திலே மறுபடியும் ஒரு முறை தீபாலங்காரம் செய்யப்பட்டது. ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்துக் கொண்டிருந்த தீபாலங்காரக் காட்சிகளையும் மக்கள் கொண்டாடும் ஆனந்தக் கொண்டாட்டங்களையும் கண்டு களிப்பதற்காக ரேம்பஸும் நியூனஸும் மாளிகையின் உப்பரிகையிலே வந்து நின்றனர். மக்களின் மகிழ்ச்சியைக் காண அவர்களுடைய முகங்களிலும் மகிழ்ச்சிக் கோடுகள் ஓடின. பரூன் அப்ஸன் திரும்பி வருவான் என்ற பயம் அப்பொழுது மக்களுக்குச் சிறிதளவும் ஏற்படவில்லை. ஆகவே இரண்டு மடங்கு உற்சாகமாக ரேம்பஸ் - நியூனஸ் பட்டாபிஷேகக் கொண்டாட்டம் கொண்டாடப்பட்டதில் ஆச்சரியம் இல்லை அல்லவா? (முற்றும்)

## நீங்கள் உங்கள் பற்களை

## இன்று மக்ளீன் செய்தீர்களா?




வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது.

பளபளப்பாகவும் வெள்ளைவெளேரெனவும் தோன்றும் படி பற்களை அளிக்கவல்லதும், அத்துடன் அதிகமான சுத்தமும் பாதுகாப்பும் தரத்தக்கதுமான டூத்பேஸ்ட் உங்களுக்கு வேண்டுமானால் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் டூத்பேஸ்டையே உபயோகியுங்கள்.

பிரத்யேகமானதும் பிறர் பின்பற்ற முடியாததுமான தயாரிப்பு இது. வாயில் ஊறும் உமிழ்நீர் மூலம் பல் சொத்தை பிடிப்பதையும் பல்மேல் பாசி படருவதையும் மக்ளீன்ஸ் தடுத்து உதவுகிறது. பல்லின்மீது விகாரமான கறை படிந்திருந்தால் அதை அகற்றி விடும். பற்களை வெண்மையாக்கி, பளபளக்கச் செய்து ஸ்வாசத்தை சுத்தமுடையதாக்குகிறது.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!**



# மகிழமரம் சொன்ன கதை

கிரிஜா

அன்று, ஸ்ரீமான் சடகோபாச்சாரியாரது, "ராமாயணசாரம்" என்னும் உபன்யாஸத்தைக் கேட்டுவிட்டு வந்து படுத்தபோது மனதில் ஒரே பாரமாக இருந்தது. காரணம், லக்ஷ்மணனைப் பற்றிக் குகன் பரதனிடம் சொன்ன, "அல்லையாண்டமைந்த மேனி அழகனும், அவளும் துஞ்ச, வில்லையூன்றிய கையோடும், வெய்துயிர்ப்போடும் வீரன், கங்குல் எல்லை காண்பளவும் நின்றான் இமைப்பிலன் நயனம்......" என்ற பாட்டு என் மனதில் சுழன்று சுழன்று வந்ததுதான். 'வெய்துயிர்ப்பு'—உஷ்ணமான பெருமூச்சு—லக்ஷ்மணனுடைய இந்த உஷ்ணமான பெருமூச்சுக்குக் காரணம்! இரவு முழுவதும் கண்ணை மூடாமலே விழித்திருந்த அந்த விழிப்புக்குக் காரணம்! தங்கக் கட்டிலில் துயிலவேண்டிய அவர் அருமைத் தமயனர், தர்ப்பையில் துயிலும் துக்கத்தைத் தாளமுடியாத ஒரே காரணம்தானே! "இல்லை! இல்லை!" என்று மறுத்து நின்றது என் மனம். மேலும் என் மனம் வியாக்கியானம் செய்தது. நடுநிசியிலும் துயில் இல்லாமல் பொசுங்கிக் கருகி உஷ்ணப் பெருமூச்சு விடுபவர்கள் இருவர்தான்:—தலைவனைப் பிரிந்த தலைவியும், தலைவியைப் பிரிந்த தலைவனுமே அந்த இருவர்—அப்படியானால் புது மணம் புரிந்த லக்ஷ்மணன் தம் இளம் மனைவியை நினைத்து, பிரிவுத் துன்பத்தைத் தாளமுடியாமல்தான் துயிலை மறந்தாரோ! உஷ்ணமான பெருமூச்சுக்கும் காரணம் அது தானே! ஏன் இருக்கக் கூடாது!

இப்பொழுது என் கற்பனையில் ஊர்மிளா தேவியும், லக்ஷ்மணனும் மாறி மாறி வந்து நின்று தங்கள் மனத்துயரை வெளிப்படையாகப் பிரலாபித்தனர். அந்த நினைவில் தோய்ந்து மனம் தன்னை மறந்து நிற்கும் பொழுதே என் கண்ணிமைகள் கனத்தன.

ஜிலு ஜிலுவென்ற காற்றினூடே சில்லென்று விழுந்த பனித் துளிகள் என்னை மலரச் செய்தன. என் அழகைக் கண்டு நானே பெருமிதங்கொண்டேன். சேடியர்கள் ஒருவரையொருவர் கூவி, "அடி! இந்த ரோஜாவைப் பார்! எத்தனை அழகாக மலர்ந்திருக்கிறது!" என்று சொன்னபொழுது என் கர்வம் இன்னும் அதிகரித்தது. அப்பொழுது என் பக்கத்தில் நின்ற மகிழமரம் கலகலவென்று சிரித்து விட்டுச் சொல்லிற்று. "இதோ பார், மென்மினுக்கி! உன் அழகெல்லாம் அரை நொடியில் அழிந்து விடக் கூடியது; என் மலரைப் பார்! லக்ஷ்மணன்—ஊர்மிளா தேவியின் ஆழம் காணமுடியாத அன்பைப்போல, குன்றாத மணமும், அழகும் உடையது" என்று சொல்லி நிறுத்தியது.

எனக்குக் கோபம் கோபமாக வந்தது. இருந்தாலும் மகிழமரம் போட்ட அந்தப் 'புதிரை' அவிழ்க்கச் சொல்லிக் கேட்க வேண்டும் என்ற ஆவலில் கோபத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு, "அதென்ன! 'லக்ஷ்மணன்—ஊர்மிளா தேவியின் ஆழம் காணமுடியாத அன்பு' என்று ஒரு புதிரைப் போட்டாயே! அதைக் கொஞ்சம் விரிவாகத் தான் சொல்லேன்" என்று கேட்டேன்.

மகிழமரம் மகிழ்ச்சியுடன் சொல்ல ஆரம்பித்தது:—

இந்த அரண்மனை முற்றத்தில் நீண்ட காட்களாக நிற்கும் எனக்கு எத்தனையோ விஷயங்களைப் பார்த்துப் பார்த்து அலுத்து விடும். ஆனாலும் இந்த லக்ஷ்மணன்—ஊர்மிளா தம்பதிகளைப் பார்ப்பதில் மட்டும் அலுப்பு சலிப்பே ஏற்பட்டதில்லை. கேள்; அன்று ராம பட்டாபிஷேகம் என்று கேள்விப்பட்டேன். அன்றுதான் என்ன கோலாகலம்! அயோத்தி வாசிகள் ஒரே ஆனந்த வெள்ளத்தில் மிதந்தார்கள்.

பால் போன்ற நிலவில் இந்தப் பளிங்கு மேடையில் பதுமையைப் போல் அமர்ந்திருந்தாள் ஊர்மிளாதேவி. அவள் நிறத்தைக் கொண்டுதான் தங்கத்தின் நிறத்தை நிர்ணயித்திருக்க வேண்டும். ஜனகருடைய சீமந்தப் புத்திரியான ஊர்மிளாதேவியின் அழகைப் பற்றிச் சொல்ல ஆயிரம் நாவுகொண்ட ஆதிசேஷனாலும் முடியாது! அப்படிப்பட்ட அழகும், ஆனந்தமும் பொங்கிக் களிக்க அமர்ந்திருந்த அத் தேவியிடம் சேடியர்கள் ஓடிவந்து லக்ஷ்மணனின் வருகையைச் சொன்னபோது அத் தேவியின் முகம்தான் எப்படி மலர்ந்தது!

தம்மை வணங்கி நிற்கும் அவ் வஞ்சிக் கொடியைத் தழுவித் தம் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்ட லக்ஷ்மணன், நாணத்தால் கவிழ்ந்திருக்கும் அவள் முகத்தை நிமிர்த்தி ஏதோ சொல்ல வாய் திறந்தவர், திறந்தவாய் திறந்தபடியே சிலையாக உட்கார்ந்திருந்தார். இப்படிச் சில நாழிகை கடந்தது. பிறகு ஒருவாறு தம்மைச் சமாளித்துக்கொண்டு, "ஊர்மிளா! நம் அண்ணா ராமச்சந்திரன் நாளைக்குத் திருமுடி புனையப் போகிறார் அல்லவா! அதன் பொருட்டு இன்று இரவு ஆரம்பிக்கும் விரதத்திற்கு, அண்ணாவுடன் வேண்டியதைச் செய்ய நானும் இருந்தாக வேண்டும். அதனால் ஊர்மிளா! இன்று என் பிரிவை........." லக்ஷ்மணன் குரல் தழ தழத்தது.

"இன்று விரதம்; நாளை பட்டாபிஷேகம்; உம்; அப்புறம்!......" இவ்விதம் அலுத்துக் கொண்ட ஊர்மிளா, நீண்டதொரு பெருமூச்சுடன் காம்பொடிந்த மலர் போலத் துவண்டு லக்ஷ்மணன் தோள் மீது சாய்ந்தாள்.

துவண்டு சாய்ந்த அக்கொடியைத் தாங்கி அணைத்துக் கொண்ட லக்ஷ்மணன், "தேவி! இப்பிரிவுக்கே நீ இப்படி வாடினால், அண்ணா ராஜ்யபாரம் ஏற்றதும் ராஜ்ய காரியங்களை முன்னிட்டுப் பல தினங்கள் நான் உன்னைப் பிரிந்திருக்க நேருமே! அந்தப் பிரிவை எவ்விதம் தாங்குவாய்!" என்று சொல்லிக்

கொண்டே ஊர்மிளா தேவியின் திருமுகத்தை நிமிர்த்தித் தேறுதல் பலவும் சொன்னார்.

ஊர்மிளா தேவியின் முகத்தில் என்னென்னவோ கேட்க வேண்டுமென்ற ஆவல் பொங்கியது. ஆயினும் அவளது செவ்விதழ்களை விட்டு வார்த்தைகள் வெளிவர மறுத்து விட்டன போலும்! நிமிர்ந்து கணவரது முகத்தைப் பிரேமை பொங்கப் பார்த்தவள் பார்த்தபடியே பதுமையாகி விட்டாள்.

மந்திரி சுமந்திரனது கனைப்புச் சத்தம் கேட்கவே திடுக்கிட்டு எழுந்த லக்ஷ்மணன், தேவியின் காதம் கருவிழிகளைப் பார்த்தபடியே மெதுவாக வெளியேறினார்.

இரவு முழுவதும் அனற் படுக்கையில் துவண்டு கிடந்த ஊர்மிளா, பொழுது விடிந்துங்கூடக் கண்விழிக்க மனமின்றிப் படுத்திருந்தாள். பட்டாபிஷேக வைபவத்தை முன்னிட்டுச் சேடியர்கள் வற்புறுத்தவே ஒருவாறு எழுந்து தன்னை அலங்கரித்துக் கொள்ள ஆரம்பித்தாள். அச்சமயம் பரபரப்புடன் ஓடி வந்த ஒரு பணிப் பெண், "தேவி! விஷயத்தை நான் எப்படிச் சொல்வேன்! மகாராஜா ராமச்சந்திரருக்குப் பட்டாபிஷேகம் இல்லையாம்!" என்றாள் இரைத்தபடி.

"ஆ! என்னடி சொல்கிறாய்!" என்று பல குரல்கள் ஏக காலத்தில் எழுந்தன.

பணிப்பெண், சுமந்திரர் ராமச்சந்திரனைக் கைகேயியின் அரண்மனைக்கு அழைத்துச் சென்றதையும், அங்கு கைகேயி அவருக்கு இட்ட கட்டளைகளையும், அதைக் கேட்ட லக்ஷ்மணன் அடைந்த கோபத்தையும், அவர் கோபத்தைத் தணித்த ராமச்சந்திரன் அவரையும் அழைத்துக் கொண்டு கௌசல்யா தேவியிடம் சென்றதையும் சொல்லி முடித்தாள்.

இந்த அதிசயச் செய்தியைக் கேட்ட அனைவரும் அப்படியே அசைவற்றுக் கல்லாய்ச் சமைந்து நின்று விட்டார்கள்.

நானும் என் இலேகனைக்கூட அசைக்க முடியாமல் திக்பிரமை அடைந்து நின்றேன்.

பிறகு என்ன! அயோத்தி நகரமே அல்லோலகல்லோல மாகிவிட்டது. நாழிக்கொரு பணிப் பெண் வந்து ஊர்மிளா தேவிக்கு விஷயத்தைச் சொல்லிக் கொண்டிருந்தனர்.

"சீதா தேவியிடம் விடை பெறச் சென்றவர்கள் அத்தேவியையும் அழைத்துக் கொண்டு திரும்புகின்றனர்" என்ற செய்தி கிடைத்த பொழுது இந்த அரண்மனையில் சற்றுப் பரபரப்பு ஏற்பட்டது. தேவியுள்பட யாவரும் ஆவலே வடிவாக வாயிற்புறத்தைப் பார்த்து நின்றனர். அப்பப்பா! என்ன ஏமாற்றம்! பார்த்துப் பார்த்துத் தேவியின் கண்களும் பூத்துப் போய் விட்டன. நாழி ஏற ஏற தேவியும் சோர்ந்து விட்டாள்.

அப்பொழுது ஓடி வந்த ஒரு பணிப் பெண் கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள்.

துள்ளி எழுந்த ஊர்மிளாதேவி, அப்பணிப் பெண்ணின் தோள்களைப் பற்றி உலுக்கி, "சொல்லடி சீக்கிரம்! என்ன நடந்தது!" என்று படபடத்தாள்.

விம்மல்களுக்கும் விக்கல்களுக்கும் இடையே அப்பணிப்பெண், "ஐயோ! அம்மா! எங்கள் ராஜா ராமச்சந்திரன் காட்டை நோக்கிப் போய் விட்டாரம்மா!" என்றாள்.

"ஹோ" வென்றெழுந்த அழுகுரல் அரண்மனையையே அதிரச் செய்தது. அவ்வழு குரலையும் மீறிச் சத்தமிட்டது தேவியின் மணிக்குரல்: "அடி! சொல் சீக்கிரம்; அவர் மட்டுமா போகிறார்!"

நடுங்கி நிமிர்ந்த பணிப்பெண், "இல்லை தேவி! அவரோடு சீதாதேவியும், இளையராஜா லக்ஷ்மணனும்கூடப் போகிறார்கள்" என்று அவள் முடிப்பதும், கிச், என்ற சப்தத்துடன் ஊர்மிளா தேவி கீழே சாய்வதும் ஒன்றாக இருந்தது.

திடுக்கிட்ட பணிப்பெண்கள் யாவரும் தங்கள் கண்ணீரைத் துடைக்கவும் மறந்து ஓடி வந்து தேவியைத் தாங்கிக் கட்டிலில் கிடத்தினர்.

பலவித சைத்யோபசாரங்களுக்குப் பிறகு சற்றே கண் விழித்த தேவி காம்பொடிந்த புஷ்பம் போல் துவண்டு கிடந்தாள். அவள் கண்களினின்றும், கண்ணீர் பெருகியது.





மனைவி:—இப்படி என்னை எதற்கு எடுத்தாலும் கரிச்சுக் கொட்டு கிறீர்களே? இனிமேல் என்னால் பொறுக்க முடியாது; பொறுக்கவே முடியாது!

கணவன்:—பரவாயில்லை. இன்று மட்டும் சாதத்தில் இருக்கும் கல்லைப் பொறுக்கி விடு, போதும்!

பலவிதமாகத் தேற்றும் அந்தரங்கத் தோழி சந்திரிகாவின் தோள்மீது சாய்ந்திருந்த ஊர்மிளா தேவி, "சந்திரிகா! பதினான்கு வருஷமல்லடி! ஆயுள் முழுவதுமே அவர் என்னைப் பிரிந்து விட்டார்!" என்று சொல்லி உள்ளம் வெடித்து விடுவதுபோல விம்மினாள்.

தோழி சந்திரிகா திடுக்கிட்டாள்; அவள் முகம் கலவரத்தைக் காட்டியது. "தேவி! என்ன சொல்லுகிறீர்கள்! அளவற்ற துக்கத்தால் தங்கள் சித்தம் கலங்கி விட்டதா!"

"இல்லை சந்திரிகா, இல்லை; என் சித்தம் கலங்கவில்லை. மிகத்தெளிவாகவே யிருக்கிறது" என்று சொல்லி ஒரு நீண்ட பெருமூச்சுடன் மீண்டும் கண்ணீர் பெருக்கினாள் தேவி. பிறகு மெள்ள மெள்ளத் தன் உள்ளக் குமுறலை வெளியிடத் தொடங்கினாள்.—

"சந்திரிகா, கேள்:—நான் இதுவரை அவர் உள்ளத்தை அறியாத மூடமாக இருந்து விட்டேனடி! இப்பொழுதல்லவா எல்லாம் வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது............அன்று நான் மிதிலையின் பூங்காவிலே ஆனந்தமாகப் பந்து விளையாடிக் கொண்டிருந்த அந்த நாளும் வருமா என்று இன்று ஏங்குகிறேன். ஆனால் அன்று! ஆவலாகக் கூத்து ஆடிக் கொண்டே வந்த என் தோழிகள் என்னைச் சூழ்ந்து கொண்டு, 'தேவி! உங்களைத் தசரத புத்திரர் லக்ஷ்மணனின் தேவியாக வரித்து விட்டனர்! சீக்கிரமே உங்கள் திருமணம் நடக்கப் போகிறது! நாங்களும் கண்டு மகிழப் போகிறோம்' என்று சொல்லிக் குதித்துக் கொம்மாளமிட்டனர். விஷயத்தை அறிந்த நானும் ஆனந்தமே கொண்டேன்.

"'திருமணம்' என்பதைப் பற்றி நான் அன்றைவும் சிந்தித்ததேயில்லை. தோழியர்கள் என் திருமணத்தைப் பற்றி விவரித்த அன்றுதான் முதல் முதலாக அதைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்து போனேன். திருமணத்தைப் பற்றி சிந்திக்க, சிந்திக்க என் மனம் விரிந்து எல்லை இல்லாததொரு ஆனந்தத்தால் நிரம்பியது. அந்த ஆனந்த நிறைவின் ஊடே எழுந்தது ஒரு ஆவல். 'எனக்கென்று வரிக்கப் பட்டுள்ள அந்தத் தசரத புத்திரர் எப்படியிருப்பார்!' இந்த என் ஆவலைப் பூர்த்தி செய்து கொள்ளச் சந்தர்ப்பமே ஏற்படவில்லை.

"எங்கள் திருமண வைபவத்தை முன்னிட்டு மிதிலாபுரியே திருமணக்கோலத்தில் பிரமாதமாக அலங்கரிக்கப்பட்டது.

அந்தத் திருமணத்தன்றுதான் என் ஆவலும் துடிப்பும் எல்லைமீறி நின்றன. சகோதரிகள் நால்வரும் மணக்கோலத்தில் அலங்கரிக்கப் பட்டு, தோழியர் புடைசூழ மணமண்டபத்தை அடைந்தோம். எல்லை மீறி எழுந்த என் ஆவலைக் கட்டுப்படுத்த முடியாதவளாய், என் கண்களைச் சற்றே உயர்த்தி எதிர்ப்புறம் நோக்கினேன். மணமேடையின் அப்பால் மண அலங்காரத்துடன் நின்று கொண்டிருந்த அந்தத் தசரத புத்திரர்களை என் கண்கள் எடை போடத் தொடங்கின.

"அழகும், கம்பீரமும் போட்டியிட்ட அந்த நீலமேக சியாமள வர்ணரைப் பார்த்த என் கண்கள் பரவசமடைந்தன. மனம் பக்தியால் நிறைந்தது. சகல லக்ஷணங்களும் பொருந்தி, சர்வேசுவரனைப் போலிருந்த அவரை என் உள்ளத்தால் வணங்கிப் பின் அடுத்தவரைக் கவனித்தேன். நிறத்திலும், உயரத்திலும், லக்ஷணத்திலும் முன்னவரையே ஒத்திருந்த அவர் முகத்திலே, ஆழம் காணமுடியாத அமைதியும், எல்லை காணமுடியாத அழுத்தமும் பிரதிபலித்தன. 'பக்திக்கும், வணக்கத்திற்கும் அப்பாற்பட்டவர்' என்று என் உள்ளம் உணர்ந்ததுவே, அவரை அடுத்து நிழல்போல் நின்ற அரசிளம் குமாரரை நோக்கினேன். பொன்னிற மேனியும், புன்னகை தவழும் முகமும், துரு துருவென்று அலையும் அவர் விழிகளும், என் உள்ளத்திலும், முகத்திலும் புன்னகையையே வரவழைத்தது. 'நான்கு ராஜ குமாரர்கள் என்றல்லவா சொன்னார்கள்! அப்படியானால் அவர்......!' என் கண்கள் ஆவலோடு தேடின. நான் முதன் முதலாகப் பார்த்த அந்த சியாமள வர்ணருக்குப் பின்னால் மறைந்து நின்ற அவர் மெதுவாகவே என் பார்வையில் சிக்கினார். அடக்கத்துள் அடங்கி நின்ற அவர் கம்பீரமும், அழகெல்லாம் திரண்டு நின்ற அவர் சிவந்த மேனியும், தாமரையை நிகர்த்த அவர் மதிமுகமும் என் சிந்தையைக் கொள்ளை கொண்டு விட்டன. வைத்த விழி வாங்காது நின்ற என் உள்ளத்திலே எல்லையில்லாத ஆனந்தம் நிரம்பவே மார்பு விம்மித் தணிந்தது. ஆயிரம் பதினாயிரம் வருஷங்களுக்கு முன்பிருந்தே அவர் என்னுடன் நெருங்கிப் பழகியவர் என்றதோர் எண்ணம் என் உள்ளத்தில் எழுந்ததால், உள்ளம் குளிர்ந்தது; உவகை யடைந்தது. 'அவர் மட்டும் எனக்கு வரிக்கப்பட்ட ராஜகுமாரராக இருந்து விட்டால்!' இவ் வெண்ணம் எழுந்தவுடன் என் சிரம் தானாகவே கவிழ்ந்தது.

"கல் கலவென்று சிரித்துக் கை கொட்டி ஆர்ப்பரித்த தோழியர்கள், "அடி! அதோ நம் தேவியின் பார்வையில் சிக்குண்ட அவர் தானடி இளைய ராஜா லக்ஷ்மணர்!" என் றுருத்தி சொல்ல அதை ஏற்க மறுத்த

மற்றொருத்தி. "இல்லையடி! அதோ ஒரே நிறமாக இருக்கிறார்களே இருவர், அவர்களில் ஒருவர்தானடி அந்த லக்ஷ்மணர்!" என்றாள் இட்டமாக. திடுக்கிட்ட என் மனம் பட பட வென்று அடித்துக் கொண்டது. பலமான குழப்பத்தால் உள்ளம் தவித்தது. அங்கு நின்ற அந்த ஒரு விநாடி காலமும், எனக்குப் பல ஆயிரம் யுகங்களாகத் தோன்றியது. கடைசியில் அந்நாலவரும் வந்து மணமேடையில் அமரவே, வசிஷ்டர், விசுவாமித்திரர் முதலான மகரிஷிகளின் பார்வை நாங்கள் இருந்த பக்கம் திரும்பின. குழப்பமும், கூச்சமும் பின் தொடரத் தோழியர்கள் அணைப்புடன் நடந்தேன், மணமேடையை நோக்கி.

"வேத கோஷங்கள் முழங்க, வாத்ய கோஷங்கள் வானைப் பிளக்க என் கரத்தையும், அவர் கரத்தையும் சேர்த்தார் என் தந்தை. அவர் கண்களினின்றும் பொங்கி வழிந்த ஆனந்த பாஷ்பம் எங்கள் இருவர் கரத்தையும் மஞ்சனமாட்டியது. பட படக்கும் மனதுடன் நிமிர்ந்தேன். அடி! சந்திரிகா! எப்படி என் ஆனந்தத்தை விவரிப்பேன்! என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அக் கள்வரே என் கைப்பற்றிய மணாளர்! என் உள்ளம் லோசாகி, ஆகாசத்திலே மிதப்பதுபோல் இருந்தது. அந்த விநாடி, 'எனக்கு நிகர் நானே' என்று பெருமிதம் கொண்டேன் ஆனால்..." சற்றே நிறுத்திய தேவி உள்ளம் வெடிக்கும் ஒரு பெருமூச்சுடன் மீண்டும் தொடர்ந்தாள்:—"ஆனால், அடி சந்திரிகா! அந்தோ! அவருள்ளம் என்னை விரும்பித்தான் ஏற்றதா? இதை அறிய வேண்டுமென்ற ஆவலே அன்றளவும் எனக்கு ஏற்பட வில்லையடி! இன்றல்லவா அந்த உண்மை எனக்குப் புலப்படுகிறது! அடி தோழி! அவர் என்னை விரும்பவில்லை! ஆம்; விரும்பவேயில்லை! 'விட்டது தொல்லை' என்று எண்ணி, சொல்லிக்கொள்ளாமலே காட்டுக்குப் போய்விட்டார்.

"ஐயோ! சந்திரிகா! இன்று வரை அவர் செய்கை ஒவ்வொன்றையும் எப்படியெல்லாம் அர்த்தம் செய்து கொள்வேன்! பல சமயங்களில் அவர், ஏதோ சொல்ல வருவார். ஆனால் என் முகத்தைப் பார்த்ததும் அப்படியே நிறுத்திவிடுவார். 'என் முக அழகில் லயித்து அப்படி நிறுத்தி விட்டார்' என்று எண்ணி ஏமாந்தேன். என் பேதமையை என்னவென்பது! அவர் சொல்ல வந்த விஷயங்களைச் சொல்ல வொட்டாமல் தடுத்தது வேறொரு மதிமுகம் என்பது இன்றல்லவா விளங்குகிறது! அவர் யாரைக் கண்டு மயங்கினாரோ! எவளை மணக்க விரும்பினாரோ! அவர் இன்ப வாழ்வுக்குத் துன்பமாக நான் புகுந்தேன். அதன் காரணமாகத்தான் இன்று அவர் என் நினைவு இன்றியே காட்டுக்குப் போய் விட்டார்!" என்று முடித்த ஊர்மிளா தேவி தன் கைகளில் கண் மலரைப் புதைத்துக் "கோ" வென்று கதறித் துடித்தாள்.

தேவியின் துக்கத்தைக் கண்டு அவ்வரண்மனையே துக்கித்துத் துடித்தது. பாவம், லக்ஷ்மணன் சொல்லிக் கொள்ளாமல் போனது தேவியின் மனதிலே எத்தகைய விபரீதத்தை விளைவித்து விட்டது! திருமணம் நடந்த பின்னர் அவர்கள் ஒருவரையொருவர் அறிந்து கொள்ள அவகாசம் எங்கே இருந்தது! அதற்குள்தான் இந்த விபரீதமெல்லாம் நேர்ந்து விட்டதே! 'ஊர்மிளா தேவியின் உள்ளத்திலே எழுந்த அந்தச் சந்தேகம் உண்மையாகவே இருக்குமோ!' என்ற ஐயப்பாடு எனக்கும் ஏற்பட்டது. 'தம் இளம் மனைவியிடம் விடை பெறாமலும், அவளுக்கு எவ்வித ஆறுதலும் கூறாமலும் போக அவர் மனம் எப்படித் துணிந்தது!' இந்த எண்ணத்திற்குப் பிறகே அந்த ஐயப்பாடும் எழுந்தது.

சந்திரிகா தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு தேவிக்கு ஆறுதல் கூறினாள். தேவியின் விபரீத சந்தேகத்திற்குக் காரணமே இல்லை என்றும் வாதித்தாள். அன்று லக்ஷ்மணர் சொல்லிக் கொள்ளாமல் போனதற்குப் பல காரணங்கள் இருக்கும் என்று சமாதானம் சொன்னாள். மொத்தத்தில் அத்தேவியின் உள்ளம் முற்றும் நொந்து வீழ்ந்து விடாமல் இருப்பதற்கான பிடிப்பை—நம்பிக்கையை—அவள் அடிக்கடி ஏற்படுத்தினாள்.

தோழி சந்திரிகாவின் வாதத்தால் தேவியின் உள்ளம் சற்றே தெளியும்; மீண்டும் சந்தேகம் மேலெழுந்து குழப்பும்போது, அவள் உள்ளம் குறுவளியில் அகப்பட்ட துரும்பு போல் துடிக்கும். இப்படியே துடிப்பும் தவிப்பும் கொண்டு பல நாட்களைப் பல யுகங்களாகக் கழித்தாள் ஊர்மிளா தேவி.

பதினான்கு வருஷங்களும், பதினான்கு யுகங்களாகவே ஊர்ந்து சென்றன. ராம, லக்ஷ்மணர் திரும்பி வர வேண்டிய அந்த நாளும் வந்தது! 'நந்திக்கிராமம் வந்து விட்டார்கள்; அங்கிருந்து அனைவரும் அயோத்தி நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள்!' என்ற செய்தி வந்த பொழுதுதான் அயோத்தி வாசிகளின் முகத்திலே முன் இறங்கிய களை மீண்டும் ஏறியது. ராம லக்ஷ்மணர்கள் பின்னால்வர அவர்கள்



முதல்வர்:—என்ன ஸார்! இந்தத் தீபாவளிக்கு என்ன வாங்கினீர்கள்?

இரண்டாவது நண்பர்:—என்னத்தை வாங்குவது? வீட்டிலே நிறைய வசவு வாங்கினேன்!

புகழ் முன்னோக்கி ஓடி வந்தது. ராவணனுடன் அவர்கள் கொண்ட வெற்றியும் இந்திரஜித்தை லக்ஷ்மணன் வெற்றி கொண்ட வைபவமும், லக்ஷ்மணன் பதினான்கு வருஷமும் கண் மூடாமலே கண்ணான அண்ணாவைப் பாதுகாத்த அதிசயமும் கேட்டு அயோத்தி வாசிகள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

வெற்றி மாலை சூடி வரும் ராஜா ராமச் சந்திரனுக்கும், இளைய ராஜா லக்ஷ்மணனுக்கும் வாழ்த்துக்கூறி வரவேற்ற அயோத்தி மக்கள் அளவற்ற ஆனந்தத்தால் ஒருவரை யொருவர் கட்டித் தழுவிக் கொண்டனர்.

“இளையராஜா வருகிறார்!” என்று சேடியர்கள் கூவியபோது, தன்னை யறியாமலே எழுந்து நின்றாள் தேவி. ஆயினும் லக்ஷ்மணனை வரவேற்க அவள் குதூகலமாக இல்லை என்பதை அவ் வரண்மனையின் அமைதியே அறிவித்தது.

கறுத்தும், இளைத்தும் உருமாறி நின்ற லக்ஷ்மணன் தேவியின் முகத்தைக் கூர்ந்து நோக்கினார். அவர் உள்ளத்துள் எழுந்த கலவரம் முகத்திலே பிரதிபலித்தது. மிகவும் தயக்கத்தோடு, “தேவி! என் மேல் உனக்கு ஏன் இத்தனை கோபம்!” என்றார்.

தேவியின் பவள உதடுகளிலே ஏளனப் புன்னகையொன்று நெளிந்தது. அவள் அவரை அலட்சியமாக நோக்கிச் சொன்னாள்.

“கோபமா! நான் யார் தங்களைக் கோபித்துக் கொள்ள! அது போகட்டும்; அண்ணாவைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பில் பதினான்கு வருஷம் துயிலை நீத்த தங்களுக்குக் களைப்பு மிகவும் அதிகமாக இருக்கும். ஆகையால் இப்பொழுதே தாங்கள் இவ்வரண்மனையில் கவலையற்றுத் துயின்று, களைப்பைப் போக்கிக் கொள்ளலாம்!” என்றாள் தேவி. அவள் வார்த்தையில் அன்பு இல்லை; ஜீவன் இல்லை; ஏளனமே எதிரொலித்தது.

லக்ஷ்மணனின் முகம், ‘குப்’ பென்று வெளுத்தது. “தேவி! இப்பதினான்கு வருஷ காலம் நான் துயிலாமல் இருந்ததற்குக் காரணம், ‘அண்ணாவைப் பாதுகாக்கவே’ என்று உலகம் நினைக்கிறது! ஆனால், தேவி! நீ கூடவா அப்படி நினைக்க வேண்டும்! தேவி! பத்தினியோடு துயிலாமல் துயிலும் அப்பரந்தாமனைக் காக்க, நான் கண் விழிப்பானேன்! அவரென்ன கோழையா! அன்றிச் சிறு குழந்தையா! சிறு அரவம் கேட்டாலும் விழித்துக் கொண்டு விடும் சுபாவமுடைய அவருக்கு, என் விழிப்பும், காவலும் என்றுமே தேவையாக இருந்ததில்லை. வீராதி வீரரான அவருக்கு என் காவலும் விழிப்பும் எதற்கு! தேவி! பதினான்கு வருஷ காலம் இரவும் பகலும் என்னைத் துயிலின்றி வாட்டியது எது! என்னை இவ்விடத்திற்கு விரைந்து வரச் செய்தது எது! சொல், தேவி! இதை உன் மனம் கூடவா அறியவில்லை! தேவி!......” அவர் முடிக்கு முன் “ஆ! என்ன!” என்று அலறினாள் தேவி. அவள் முகத்திலே பளிச்சிட்டெழுந்த ஒளி அவள் அழகைப் பன்மடங்காக்கியது. இளைய ராஜா முகத்திலும், இளநகை அரும்பியது. “ஆம்; தேவி! இரவு பகல் என்னைத் துயிலின்றி வாட்டிய குற்றம் உன் மதி முகத்தினுடையதே! இதை நீ அறிந்தும் என்னை ஏன் வருத்துகிறாய்!” என்றார்.

“ஆ! பிரபு! என்னை மன்னித்து விடுங்கள்” என்ற ஊர்மிளா தேவி, இற்று விழுந்த கொடி போல் இளைய ராஜாவின் பாதங்களில் தன் சிரம்புதைத்து வணங்கினாள். அவ்விதம் வணங்கிய வாள்விழியாளை வாரியெடுத்துத் தமது மார்புடன் அணைத்து ஆறுதல் செய்தார், மந்தோதரி புத்திரனை மாய்த்த வீரர்.

‘அப்பாடா! விட்டது விசாரம்’ என்று நெடிய பெருமூச்சு விட்ட நானும், ஆனந்த மிகுதியால் அந்த ஆனந்த தம்பதிகளின் மேல் என் மலர்களைச் சொரிந்து மகிழ்ந்தேன்.—இவ்வாறு அந்த மகிழமரம் கதையை முடித்து நீண்ட மூச்சு விட்டது.

“அப்புறம் ஊர்மிளா தேவி, இளையராஜா லக்ஷ்மணனைத் தன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் கானகம் சென்றதின் காரணத்தைக் கேட்கவில்லையா!” என்று மகிழமரத்தைக் கேட்டேன்.

கலகலவென்று சிரித்த அம்மரம், “உனக்கு அழகும், அகம்பாவமும்தான் இருக்கிறது; அறிவு இல்லை. லக்ஷ்மணன் தம் தூக்கமில்லாமைக்குக் காரணம் சொன்ன போதே, சொல்லிக் கொள்ளாமல் போனதற்குக் காரணமும் புலப்பட்டு விடுகிறதே! அவர் தேவியைப் பார்த்த பின்பு பிரிவது என்பது எப்படி சாத்தியப்படும்!” என்றது.

இப்படி அம் மகிழமரம் சொன்ன லக்ஷ்மணன்—ஊர்மிளா தாம்பத்ய அன்பைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கும் பொழுதே, “களுக்”கென்ற சிரிப்பொலியும், கல கலவென்ற பேச்சொலியும் கேட்டு நிமிர்ந்தேன்.

“இதோ பார்! லக்ஷ்மணன்—ஊர்மிளா தேவியின் காதற்கனிகள்! இந்த அபூர்வ சகோதரக் குழந்தைகளுக்குத்தான் இன்று ஆண்டு நிறைவு விழா. அதன் பொருட்டுத்தான் இன்று இத்தனை கோலாகலம்!” என்று, அங்கு கையில் குழந்தைகளுடன் வந்து கொண்டிருந்த லக்ஷ்மணன் — ஊர்மிளையைச் சுட்டிக் காட்டி மெல்லக் காதோடு ஓதியது மகிழமரம்.

‘ஆகா! என்ன அழகான தம்பதிகள்! எவ்வளவு அற்புதமான குழந்தைகள்!’ என்று நான் வியந்து நிற்கும் பொழுதே, ஊர்மிளா தேவி தன் மலர்க்கரத்தால் என்னைப் பறித்துத் தன் திருக்குமாரனுக்குக் காட்டினாள். தேவியின் காதலரோ என்னை அத்தேவியின் கரத்தினின்றும் லாகவமாகக் கைப் பற்றித் தம் கையிலிருந்த குமாரனிடம், கொடுத்தார். என்னைக் கையில் பற்றிக் “களுக்” கென்று சிரித்த அந்தக்காதல் கனி, தன் பவள வாயிலே என்னைத் திணித்துக் கொண்டு கலைக்கவே நான் கல கல வென்று உதிர்ந்தேன்.

என் முடிவைக்கண்டு, ‘களுக்’ கென்று சிரித்த மகிழமரம், என்னிடம் அனுதாபம் காட்டுவதே போன்று தன் மலர்களைப் பொல பொல வென்று உதிர்த்தது.

சில்லென்று என் இதழின் மேல் விழுந்த மகிழமலரின் ஸ்பரிசத்தால் விழிப்படைந்தேன். என் மருமான் வாசுதேவனின் பின்னஞ்சிறிய கரங்களே என் இதழில் உராய்ந்தது! தூக்கத்தில் நான் ரோஜாவாக மாறிக் கண்ட யாவும், ‘கனவு’ என்பதைப் புரிந்து கொள்ளவே எனக்கு வெகு நேரம் பிடித்தது.



# மிஸ்டர் அப்பு

## 13. கள்ளனுக்குள் கள்ளன்!

பிரேமாவுக்கும் டாக்டர் நீலகண்டனுக்கும் உள்ள காதலை உணர்ந்து கொண்ட சபேசய்யர் மேலும் காலம் கடத்தித் தாமதப் படுத்த விரும்பவில்லை. சீக்கிரமாகவே ஒரு முகூர்த்த நாளைப் பார்த்துப் பதினாயிரம் ரூபாய் வரதட்சிணையுடன் நீலகண்டனுக்குப் பிரேமாவைக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார். கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தேறியது. முனுசாமிக்குக் கல்யாண வாம்படி அசாத்தியம். அவன் இப்பொழுது சாதாரண முனுசாமியா? கம்பௌண்டர் முனுசாமியல்லவா? டாக்டருக்கு அடுத்தாற்போல் அவன் தானே? அவனும் சம்பந்தி வீட்டார்களைப்போல் கல்யாணத்தில் மதிக்கப்பட்டான்.

சங்கரனுக்கு அந்தக் கல்யாணமே பிடிக்கவில்லை. மாப்பிள்ளைக்குப் பதினாயிரம் ரூபாய் வரதட்சிணை கொடுத்ததுபற்றி அவனுக்குக் கவலை இல்லை. ஆனால் வரதட்சிணையாகக் கொடுக்கப்பட்ட அந்தப் பணம் சமதர்மமான நோக்கத்தோடு செலவு செய்யப்படுமா என்பதுதான் அவனுடைய ஆணித்தரமான கேள்வி. அவனுடைய கேள்விக்கெல்லாம் பதில் சொல்லும் அக்கறை அந்தக் கல்யாணச் சந்தடியில் ஒருவருக்கும் இல்லாததுதான் மிகவும் வருத்தப்படவேண்டிய விஷயம். ஆனால் சங்கரன் பேசாமல் இருந்துவிடவில்லை. தனக்குத் தோன்றிய கேள்விகளை எல்லாம் கேட்டுக்கொண்டு தான் இருந்தான்.

சபேசய்யர் வீட்டில் கல்யாணச் சந்தடி ஓய நான்கு நாளாயிற்று. பிரேமா டாக்டருடன் ஒரு தனி வீட்டில் குடித்தனம் செய்ய ஆரம்பித்தாள். முனுசாமியும் டாக்டர் வீட்டோடு கம்பௌண்டராக இருந்து ஓய்ந்த நேரங்களில் வீட்டு வேலையையும் கவனித்து வந்தான்.

இப்படிப்பட்ட சுபமான சூழ்நிலையில் ஒரு நாள் திடீரென்று ஒரு பரபரப்பான செய்தி பரவியது. முதல் நாள் இரவு சபேசய்யர் வீட்டில் திருடன் புகுந்து அவருடைய இரும்புப் பெட்டியிலிருந்து லட்சக்கணக்கான ரூபாய்களைக் கொள்ளையடித்துக்கொண்டுபோய் விட்டான் என்ற பயங்கரமான வதந்திதான் அது.

வதந்தி உண்மையானதுதான். உண்மையாகவே சபேசய்யர் வீட்டிலிருந்து பணம் களவு போய் விட்டது. ஊரில் இதைப் பற்றிப் பலர் பலவிதமாகப் பேசிக்கொண்டனர். சிலர் பதினாயிரம் ரூபாய்தான் களவு போயிற்று என்றனர். சிலர் 'லட்சத்துச் சில்லறை' என்று ரூபாய் அணா பைசா வாரியாகக் கணக்கிட்டுச் சொன்னார்கள் சிலர் 'சபேசய்யர் பவுனுகளே இரும்புப் பெட்டியில் வைத்திருந்தார்!' என்றனர். 'கஷ்டப் பட்டுச் சம்பாதித்தார்' என்றனர் சிலர். 'கஷ்டப்பட்டாரா? கறுப்பு மார்க்கட்டில் குவித்த பணம் ஐயா!' என்றனர் சிலர். 'எல்லாம் பொய். ஏதோ இருநூறு முந்நூறு ரூபாய் தான் களவு போயிற்று' என்றார், எதையுமே நம்பாத

கோபால்

பிரகஸ்பதி ஒருவர். ஊர் வம்பு எப்படியோ, சபேசய்யர் வீட்டில் கள்ளன் புகுந்து இரும்புப் பெட்டியில் அடைத்து வைத்திருந்த ரூபாய் நோட்டை எடுத்துக்கொண்டு போய் விட்டான் என்பது பகிரங்கமான உண்மை.

எப்பொழுதுமே சபேசய்யர் காலையில் படுக்கையை விட்டு எழுந்ததும் இரும்புப் பெட்டி சரியானபடி இருக்கிறதா என்று பார்த்து விட்டுத்தான் மற்ற காரியங்களில் கவனம் செலுத்துவார். அனேகமாகச் சில இரவுகளில் இரும்புப் பெட்டியின் ஞாபகத்திலேயே தூங்காமல் இருப்பதும் உண்டு. சில இரவுகளில் யாரோ இரும்புப் பெட்டியைத் திறந்து கொள்ளையடிப்பது போல் கனவு கண்டு மிரண்டு எழுந்து இரும்புப் பெட்டியைப் பார்த்துவிட்டுப் படுப்பார். அன்று காலை தூங்கி எழுந்து இரும்புப் பெட்டியைப் பார்த்த பொழுது அது திறந்து கிடந்தது. சில ரூபாய் நோட்டுக்களும் சில்லறையும் சுற்றிலும் சிதறிக் கிடந்தன. இதைப் பார்த்ததும் அவருக்கு இடி விழுந்தது போலிருந்தது. திடீரென்று ஏற்பட்ட இந்த மன அதிர்ச்சி தாங்காமல் அவர் மூளை குழம்பி விட்டது. பெட்டியில் எவ்வளவு ரூபாய் இருந்தது என்று அவருக்கே கணக்குத் தெரியாதபடி சித்தம் பேதலித்து விட்டது. ஒரு சமயம் 'பத்து லட்சம் ரூபாய் போய்விட்டதே' என்று கதறுவார். மறுசமயம் பத்தாயிரம் ரூபாய் பறி கொடுத்தேனே' என்று பிரலாபிப்பார். மற்றொரு சமயம் 'பத்து ரூபாய்தான் போய் விட்டது. பாதகமில்லை' என்பார். இதனால் போலீசாருக்கும் மற்றவர்களுக்கும் எவ்வளவு ரூபாய்தான் களவு போயிருக்கும் என்று கணக்குத் தெரியாமல் போய் விட்டது. ஆயினும் போலீசார் தங்கள் கடமையை உணர்ந்து இந்தக் களவு சம்பந்தமாகத் தீவிரமான புலன் விசாரணையில் ஈடுபட்டனர்.

வீட்டில் களவு நடந்ததிலிருந்து சங்கரனின் மனது 'பக் பக்' கென்று அடித்துக் கொண்டிருந்தது. அவனுக்கு இரண்டு தடவை இரும்புப் பெட்டிக்கு மறு சாவி கொடுத்து உதவிய பழைய சாவிக் கடை உத்தமனைப்பற்றித்தான் கவலை. அவனைப் போய்ப் பார்த்து 'ரகசியத்தை வெளியே சொல்லிவிடாதே' என்று முன்னெச்சரிக்கை செய்ய விரும்பினான். ஆனால் அவனுக்கு அவ்வளவு துணிச்சலில்லை. அவனைப் போய்ப் பார்ப்பதினால் கெடுதலைத் தானே தேடிக்கொண்டது போலாகி விட்டால் என்ன செய்வது? ஒரு வேளை அந்தச் சாவிக் கடைக்காரனே தன் வீட்டில் கொள்ளையடித்திருப்பானோ என்ற சந்தேகம் சங்கரனின் மனதில் எழும்பியது. 'அப்படித்தானிருக்கவேண்டும்' என்று அந்தச் சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்து கொண்டான். சங்கரன் மனது வைத்தால் அவனை வெகு சுலபமாகப் போலீசாரிடம் பிடித்துக் கொடுத்து விடலாம். ஆனால் அந்த ஆபத்து சாவிக்கடை காதர் மொய்தீனோடு விடாதே. சங்கரனையும் அல்லவா பிடிக்கும்? ஆகையால் பேசாமல் இருப்பதே உத்தமம் என்று நினைத்தான். தெய்வாதீனமாக காதர் மொய்தீனே போலீசாரிடம் சிக்கி விட்டால் என்ன செய்வது? இதை நினைக்கும்போது தான் சங்கரனுக்குப் பகீரென்றது. கொள்ளையடித்த காதர் மொய்தீன் புத்திசாலித்தனமாக ஊரை விட்டு ஓடிவிட வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்தித்தான். எது எப்படி இருந்தாலும் இன்னொரு பெரிய பயம் சங்கரனுக்கு இருந்தது. இந்தக் கள்ளச் சாவி விஷயம் முனுசாமிக்குத் தெரியுமே, அவன் பேசாமல் இருப்பானா என்பது தான. ஆனால் அவன் மனதில் கொஞ்சம் தைரியம் இருந்தது. முனுசாமி தன்னிடமிருந்து பெற்ற உபகாரத்திற்காக வாவது தன்னைக் காட்டிக் கொடுக்க மாட்டான் என்ற தைரியம்தான் அது.

சங்கரனுக்குத் தனக்கு ஏதேனும் ஆபத்து நேருமோ என்ற பீதி இருந்ததே தவிரத் தன் தகப்பனார் சேமித்து வைத்த ஏராளமான ரூபாய்கள் களவு போய் விட்டதே என்பதைப் பற்றி கவலையே இல்லை. யாரேனும் அவனிடம் அனுதாபத்தோடு அவன் வீட்டில் கொள்ளை போனதை விசாரித்தால் தன் தகப்பனார் பெட்டியில் பணத்தை வைத்துப் பூட்டி வைத்ததினால் தான் இப்படி நேர்ந்தது என்றும், இப்பொழுது அந்தப் பணத்திற்கு விடுதலை கிடைத்து விட்டதென்றும், கொள்ளையடித்துக் கொண்டு போனவன் தீர்க்க தரிசனமுள்ள சமதர்ம வாதியாகத் தானிருக்க வேண்டுமென்றும், ஏனென்றால் கொள்ளையடித்த பணத்தை அவன் சமதர்மமான வழிகளில் தான் செலவு செய்யவேண்டுமே தவிர வேறு வழியில் செலவு செய்ய முடியாதென்றும் சொல்லி வந்தான்.

சபேசய்யர் வீட்டில் திருட்டுப் போன சங்கதி முனுசாமி காதுக்கு எட்டியதும் அவனுக்கு அளவுக்கு மிஞ்சிய வருத்தம் ஏற்பட்டது. உடனேயே அவனுக்கு மூளை வேலை செய்யத் தொடங்கியது. திருடியவன் யாரென்று தெரிந்து கொள்ள அவன் மூளை

யைக் குழப்பிக் கொள்ளவில்லை. சங்கர னுக்கு மாற்றுச் சாவி கொடுத்த புண்ணிய வான் தான் அந்தக் கொள்ளையை நடத்தி இருப்பான் என்று அவனுக்குத் திடமாகத் தெரியும். காதர் மொய்தீனிடம் அவனுக்கு சம்சயமே இல்லை. அவன் தான் திருடி இருப்பான் என்று சத்தியம் செய்யக் கூடத் தயாரா யிருந்தான். காதர் மொய்தீனைப் போலீஸாரிடம் பிடித்துக் கொடுக்க அவனால் முடியும். ஆனால் அதனால் சங்கரனுக்குத் தான் ஆபத்து ஏற்படுமென்று யோசித்தான். இருந்தாலும் அவனால் சும்மா இருக்க முடிய வில்லை. அவன் மனதில் ஒரு ஆசை அடித் துக் கொண்டது, காதர் மொய்தீனிடம் மெதுவாக நெருங்கிக் கொள்ளையடித்த பணத் தில் பங்கு கேட்கலாமா என்று. அவனிடம் நெருங்கிக் கேட்க முனுசாமிக்குத் துணிவு வேண்டாமா? காதர் பெரிய வஸ்தாது என்று முனுசாமிக்குத் தெரியும். அவ னிடம் நெருங்கினால் கை முஷ்டியைத் திருப்பினால் என்ன செய்வான் முனுசாமி? தனக்குத் துணையாக வேறு யாரை யாவது அழைத்துக் கொண்டு போய் அவனை மிரட்டலாமா என்று யோசித்தான். தனக் குக் கூட்டாகத் தகுந்த பேர்வழியைப் பொறுக்க வேண்டாமா? அவன் மனதில் பளிச்சென்று அப்புவின் ஞாபகம் வந்தது. அப்பு ஏதேனும் ஒரு வழிகண்டு பிடித்து விடுவான் என்ற நம்பிக்கை முனுசாமிக்கு



எப்பொழுதுமே உண்டு. உடனே அப்பு வின் வீட்டை நோக்கி நடந்தான்.

அப்பு முனுசாமியைக் கண்டதும் ஆர்வத் தோடு அவனை வரவேற்றான். "என் னப்பா முனுசாமி, நீ கம்பௌண்டாகி விட்டாயாமே?" என்றான்.

"ஆமாம் சாமி! ஒரு முக்யமான விஷயம். ஐயா வீட்டிலே திருட்டுப் போன விஷயம் தெரியுமா?" என்றான்.

"தெரியாமல் என்ன? ஊர் முழுவதும் தெரிந்த விஷயம் தானே? உள்ளே பூட்டி முடக்கி வைக்கும் பணத்திற்கெல்லாம் அந்த கதி தான் நேரும். நான் சொல்கிறபடி என் நான்கு வருட திட்டத்தில் அந்தப் பணத்தைப் போட்டிருந்தால், அடாடா, உல கத்துக்கே ஒரு விமோசனம் ஏற்பட்டுப் போயிருக்கும்......" என்றான் அப்பு.



"அது போனது போகட்டும். இப்போ அந்தக் கொள்ளை நடத்தினவனைக் கண்டு பிடிக்கணும்—" என்றான்.

"அது எப்படி முடியும்? இப்படிப்பட்ட கொள்ளைகளை யெல்லாம் ஆராய்ந்து திருடர் களைக் கண்டு பிடிக்க வேண்டுமென்றால் இத்தாலியிலிருந்து கை தேர்ந்த துப்பறியும் நிபுணர்களை வரவழைத்தால்தான் முடியும்" என்றான் அப்பு.

"அப்படிப்பட்ட நிபுணருங்க எல்லாம் இதுக்கு வேண்டாமுங்க. இந்த முனுசாமி ஒருத்தனாலேயே முடியும். இருந்தாலும் கூட நீங்க உதவி செய்வீங்களேன்னு கேட் டேன்" என்றான் முனுசாமி.

"உன்னால் முடியுமா? அது எப்படி?" என்று ஆச்சரியத்தினால் துடித்தான் அப்பு.

"அதை அவ்வளவு சுலபமாச் சொல்லிவிட முடியுமா? இந்த வீணை சின்னய்யா கள்ளச் சாவி வாங்கி இரும்புப் பெட்டியைத் திறந்து பணம் எடுத்ததிலிருந்துதான் வந்ததுங்க!"

"சின்னய்யாவா? சங்கரனா கள்ளச் சாவி போட்டுப் பெட்டியைத் திறந்து....?"

என்று ஆச்சர்யத்துடன் அரை குறையாகச் சொல்லி நிறுத்தினான் அப்பு.

"ஆமாம்! அவரு உங்களைப் போல நல்லவங்களுக்கு உதவி செய்யத்தான் பெட்டியைக் கள்ளச் சாவி போட்டுத் திறந்து பணம் எடுத்தாரு. ஆனால் அந்தக் கள்ளச் சாவியைச் சின்னய்யாவுக்குக் கொடுத்த மன்னன் தான் ராவோடு ராவாக வந்து பெட்டியைத் துடைத்துப் பணத்தை வாரிக் கொண்டு போயிருக்கிறான்!"

அப்படியா? யாரவன்? எங்கே இருக்கிறான்?" என்று துள்ளினான் அப்பு.

"பதறாதீங்க. கடைத் தெருவிலே பழைய சாவிக்கடை வைத்திருக்கானே சிங்கப்பூர் பயில்வான் காதர் மொய்தீன்—அவன்தான் இந்தக் கதையை நடத்தி இருக்கிறான்."

"அப்படியா — இப்போதே அவனைப் போலீசில் ..."

"பார்த்தீங்களா? மறுபடியும் பதட்டப் படுறீங்களே. அவனைப் போலீசிலே



"ஸார்! நம்பெருமாள் நாயுடு கடன் கேட்கிறார். அவரை உங்களுக்குத் தெரியுமா? அவருக்குக் கடன் கொடுக்கலாமா?"

"நீங்கள் முதலிலேயே என்னைக் கேட்டது ரொம்ப நல்லதாப்போச்சு. உங்களை எனக்கு எவ்வளவு நன்றாகத் தெரியுமோ, அவ்வளவு நன்றாக அவரையும் எனக்குத் தெரியும். ஒரு செல்லாத செப்புக் காசு கூட அவரை நம்பிக் கொடுக்காதீர்கள்!"

காட்டிக் கொடுத்துடலாம். ஆனால் சின்னய்யா, நீங்க, நான் எல்லோரும் அவனோடு ஜெயிலுக்குப் போகத் தயாராய் இருக்கணும். இந்த விஷயம் போலீசுக்கே தெரியக் கூடாது. இதுலே புத்திசாலித்தனமா ஒரு காரியந்தான் செய்யலாம்......" என்று சொல்லி நிறுத்தினான் முனுசாமி.

"என்ன?" என்றான் அப்பு.

"மெதுவாக அவனிடம் போய் நயமாகவும் பயமாகவும் அவனை மிரட்டி அவன் கொள்ளையடித்த பணத்திலே கூடுமான வரையில் நாலும் பங்கு வாங்கிக் கிட்டுச் சிவனேன்னு இருந்துடணும். இது சின்னய்யாவுக்குக்கூடத் தெரியக் கூடாது."

"சரி, அப்படியே செய்வோம். அது தான் சரியான யோசனை" என்றான் அப்பு.

"சரி! கொஞ்சம் ஆடம்பரமாக உடை உடுத்திக் கிட்டுக் கிளம்புங்க, போவோம். அவனிடம் எப்படிப் பேசணும்ன்னு உங்களுக்கு நான் சொல்லித் தரணுமா?" என்றான் முனுசாமி.

"அதைப்பற்றிச் சந்தேகப்படாதே. நான் யார் தெரியுமா? அப்பு" என்று பெருமையாகச் சொல்லிக்கொண்டான் அப்பு.

அப்புவும் முனுசாமியும் காதர்மொய்தீன் கடைக்கு வந்தபொழுது காதர் தன் கடையிலுள்ள சாமான்களை எல்லாம் எங்கோ அப்புறப்படுத்திக் கொண்டிருந்தான். காதர் பெரிய வஸ்தாதுதான். என்ன இருந்தாலும் அவனுக்கு முனுசாமியையும் அப்புவையும் கண்டவுடனே பீதி ஏற்பட்டுவிட்டது. இதை அவன் முகக் குறியிலிருந்து தெளிவாய் உணர்ந்து கொண்டான் அப்பு. கேட்க வேண்டுமா அவன் துணிச்சலுக்கு?

"என்ன சாயபு! ஒரு பழைய இரும்புப் பெட்டிக்குச் சாவி வேணுமே?" என்றான்.

"சாவியா? இல்லீங்களே? நான் அந்த வியாபாரத்தையே நிறுத்திப் புட்டேனுங்களே!" என்றான் காதர்.

"நிறுத்திடவேண்டியதுதானே! கையிலே நல்ல முதல் ஏற்பட்டவுடனே வேறு பெரிய வியாபாரமாப் பார்க்கவேண்டியதுதானே!" என்றான் முனுசாமி.

"பெரிய வியாபாரமா? அதெல்லாம் இந்த ஊருலே செய்ய யோக்யதை இல்லே. சிங்கப்பூருக்குத்தான் போகப் போகிறேன். இந்தக் கடையை விட்டுடலாம்ன்னு உத்தேசிக்கிறேன்" என்றான் காதர்.

"சரியான யோசனை!" என்றான் அப்பு.

"நல்ல யோசனைதான். இந்த ஊரிலேயே இருந்தால் கெடுதல்தான். எவ்வளவு சீக்கிர

மாகச் சிங்கப்பூருக்குப் போகலாமோ அவ்வளவு சீக்கிரமாய்ப் போறது நல்லது" என்றான் முனுசாமி கிண்டலாக.

முனுசாமியின் வார்த்தையைக் கேட்டதும் காதருக்கு ஏற்பட்டிருந்த சம்சயமும் பீதியும் அதிகமாகி விட்டன. அவன் சந்தேகத்தோடு முனுசாமியைப் பார்த்தான்.

அப்பு ஒரு தடவை கனைத்துக்கொண்டு "சிங்கப்பூருக்குப் போனால் என்ன, பினாங்குக்குப் போனால் என்ன? போலீஸ்காரன் விடணுமே?" என்றான்.

"நீங்க என்ன சொல்றீங்கன்னு புரியல்லியே...?" என்றான் காதர் மொய்தீன் சம்சயத்துடன்.

"புரியும்படியாகச் சொல்லட்டுமா? நேத்து பெரிய தெரு சபேசய்யர் வீட்டிலே ஒரு லக்ஷ ரூபாய் களவு போச்சாமே தெரியுமா? அந்தக் கொள்ளையை நீ தான் செய்திருக்கணும்னு போலீஸ்காரங்க தவறாகச் சந்தேகப்படறாங்க—" என்றான் அப்பு.

"போலீஸ்காரங்க தவறாய்ச் சந்தேகப் படல்லே. சரியாத் தான் சந்தேகப்படறாங்க" என்றான் முனுசாமி.

"போலீஸ்காரங்க என் மேலேயா சந்தேகப் படறாங்க? அத்தனையும் பொய்" என்று துடித்தான் காதர் மொய்தீன்.

"பொய்யா? சரிதான். எல்லாத்தையும் பொய்யாய் அடிக்கணும்னு தானே நாங்க உன் கடையைத் தேடி வந்திருக்கிறோம்?" என்று சொல்லிவிட்டு அப்புவைக் காட்டி "இந்த ஐயா யாரு தெரியுமா உனக்கு?" என்றான் முனுசாமி.

"தெரியாதே!" என்றான் காதர்.

"இவரு பேரு மிஸ்டர் அப்பு. சீமையிலே இந்த மாதிரி திருட்டு கொலை நடக்கிறதையெல்லாம் துப்பு வைச்சுக் கண்டு பிடிக்கிற வித்தையைக் கத்துக் கொடுக்க ஒரு பள்ளிக்கூடம் வைச்சிருக்காங்க. அந்தப் பள்ளிக்கூடத்திலே ஒன்பது வருஷம் படிச்சுப் பட்டம், பதக்க மெல்லாம் இவரு வாங்கி இருக்காரு. இவரு யாரையாவது சந்தேகப் பட்டுத் திருடன்னு சொல்ல வேண்டியது தான் தாமதம், உடனே போலீஸ்காரங்க அந்த ஆசாமியைக் கொண்டு போய்க் கொட்டாரத்திலே தள்ளிடுவாங்க. இப்போ இவரு எங்க ஐயா வீட்டிலே நடந்த கொள்ளையைத் துப்புக் கண்டு பிடிச்சு உன்னைச் சோதனை போட வந்திருக்காரு. நீ கொள்ளையடிச்ச தொகையிலே கணிசமாக ஏதாவது கொடுத்தால் போகுதுன்னு விட்டு விடுவாரு......" என்றான் முனுசாமி.

"நான் அப்படி லேசில் விட்டு விட மாட்டேன். பாலைப் பார்க்கிறதா, பானையைப் பார்க்கிறதா என்பது போல் இவனால் சங்கரனுக்கு ஏதாவது ஆபத்து வரப் போகிறதே என்று தான் விட்டுவிட உத்தேசிக்கிறேன். ஏனென்றால் அவன் இவனிடம் தானே கள்ளச் சாவி வாங்கினான்?" என்றான் அப்பு.

காதர் சிறிது நேரம் தயங்கியபடியே யோசித்தான். இவ்வளவு தூரம் விஷயம் வெளியான பிறகு எப்படியாவது தப்பித்துக் கொண்டு சிங்கப்பூருக்குப் போய் விடுவது தான் நல்லதாக அவனுக்குப் பட்டது. "சரி உங்களுக்கு என்ன வேணும்?" என்று கேட்டான் அப்புவிடம்.

"ஒரு லக்ஷ ரூபாய் பெட்டியிலிருந்து எடுத்திருக்கிறாயே, அதில் பாதியாவது ஐயா பக்கம் தள்ளேன்" என்றான் முனுசாமி.

"ஒரு லக்ஷ ரூபாயா? இல்லவே இல்லியே. அந்தப் பெட்டியில் பன்னிரண்டாயிர ரூபாயும் சில்லறையும்தான் இருந்தது" என்றான் காதர்.

"தொலையுது. அதுலேதான் பாதியை ஐயா கிட்டே கொடுத்துட்டுத் தப்பிச்சுக் கிட்டுப்போ" என்றான்.

காதர் சிறிது நேரம் தயங்கி யோசித்து விட்டு அங்கிருந்த பெட்டியைத் திறந்து அப்படியும் இப்படியும் பார்த்துக்கொண்டு ஆறாயிரம் ரூபாயை எண்ணி அப்புவிடம் கொடுத்தான். அப்பு அதை வாங்கிப் பையில் வைத்துக்கொண்டு "நான் இருக்கிற வரையில் நீ பயப்படவே வேண்டாம். நீ சிங்கப்பூருக்கோ ரங்கூனுக்கோ எங்கே வேண்டுமானாலும் போகலாம்!" என்று சொல்லி விட்டுக் கிளம்பினான். முனுசாமியும் காதரைப் பார்த்து "உன் தலை தப்பியது ஐயா புண்ணியத்திலேதான்!" என்று சொல்லி விட்டு அப்புவுடன் நடந்தான்.

அப்பு வெளியே வந்ததும் முனுசாமியிடம் "இன்று நீ நரிமுகத்தில்தான் விழித்தாய்" என்று சொல்லி ஒரு ஆயிரம் ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினான்.

முனுசாமி அதைக் கையில் வாங்கிக் கொண்டு அதிருப்தியுடன் "ஆறாயிரம் ரூபாயில் இதுதானா?" என்றான்.

"அடடே! உன் சமத்துக்கு இது போதாதா? இதுகூட உனக்கு யாரால் கிடைத்தது? என்னால், என்னுடைய துப்பறியும் திறமையால்! நான் யார் தெரியுமா? அப்பு—ஆமாம் மிஸ்டர் அப்பு" என்று சொல்லிக் கொண்டே விறுவிறு என்று நடந்தான் அப்பு. (தொடரும்)

# விடி வெள்ளி

**உமாசந்திரன்**

**மா**டி அறையிலிருந்த நிலைக்கண்ணாடியில் அப்பொழுது தான் கடைசி முறையாகத் தன்னை அழகு பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தாள் ஹேமா. ஜகதீசன் வந்ததும் அவனுடைய கண்ணைக் கவரும் விதத்தில் தனது ஆடை அலங்காரம் அமைந்திருந்தது பற்றி அவள் மனம் திருப்தியால் குதூகலித்தது. அநாவசிய ஆடம்பரம் ஜகதீசனுக்குப் பிடிக்காதென்று அவளுக்குத் தெரியும். ஆனால் அதற்காகக் கவர்ச்சியற்ற எளிமையை அவன் விரும்பவில்லை. எளிமையும் கலைப் பண்பும் கலந்து தோன்றும் அழகிலேயே அவன் மனம் லயித்ததென்று ஹேமா அறிந்திருந்தாள். ஆகவே தான் தனக்குப் பிடித்தமான சில ஆடம்பர வஸ்துக்களைக் கூட நீக்கிவிட்டு எளிய முறையில் கலையழகு பிரதிபலிக்குமாறு தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். ஜகதீசனுடைய கொள்கையில் எவ்வளவு உண்மை இருக்கிறதென்பதை நிலைக் கண்ணாடியில் தெரிந்த அவளுடைய பிரதிபிம்பம் அவளுக்கு எடுத்துக் காட்டியது.

வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டதும் ஹேமா பரபரப்புடன் கீழே இறங்கிச் சென்று கூடத்திற்கு வந்து நின்று கொண்டாள். ஸ்டேஷனிலிருந்து ஜகதீசனை அழைத்து வருவதற்காக ஹேமாவின் தந்தை பதஞ்சலி சர்மாவே காரை எடுத்துக் கொண்டு நேரில் சென்றிருந்தார். இப்போது அவர் மட்டும் காரிலிருந்து இறங்குவதைக் கண்டதும் ஹேமாவின் மனம் பகீரென்றது. "ஏனப்பா, அவர் வரவில்லையா?" என்று கலக்கத்துடன் கேட்டுக் கொண்டே வாசலுக்கு விரைந்து வந்தாள்.

"ஒரு வேளை ராத்திரி வண்டியில் தான் வருவான்போல் இருக்கிறது."

"பத்து மணி வண்டியில் வருவதாகத் தானே தந்தி கூட அடித்திருந்தார்!" என்று கேட்டுக் கொண்டே ஹேமாவின் தாயாரும் வெளியே வந்தாள்.

"என்ன காரணமோ? ஒரு வேளை இந்த வண்டி தவறிப் போயிருக்கலாம்" என்று கூறியவாறு அங்கிருந்த நாற்காலியில் சாய்ந்தார் சர்மா.

"மாப்பிள்ளைக்கு நம்மிடம் வேறு ஏதேனும் மனஸ்தாபம் இருக்காதே!" என்று கவலையுடன் கேட்டாள் தாயார்.

"மனஸ்தாபமா? அப்படி ஏதேனும் நாம் தவறாக நடந்து கொண்டிருந்தாலும் அதைப் பாராட்டிக் கொண்டிருக்கும் அற்ப குணம் ஜகதீசனிடம் கிடையாது.'

தன் கணவனைப் பற்றித் தீர்மானமாகக் கூறிய இந்த மொழிகளைக் கேட்டு ஹேமாவின் மனம் பெருமையால் பூரித்தது.

"நீ கவலைப்படாதே, ஹேமா! ஜகதீசன் வராமலிருக்க மாட்டான்" என்று அவளுக்கு ஆறுதல் கூறினார் சர்மா.

"அந்த நம்பிக்கை எனக்கும் உண்டு" என்று கூறி ஹேமா லஜ்ஜையுடன் சிரித்துக் கொண்டாள்.

அதே சமயம் யாரோ கட்சிக்காரர் சர்மாவுடன் பேசுவதற்காகப் படியேறி வந்து கொண்டிருந்ததைக் கண்டதும் ஹேமாவும் அவள் தாயாரும் கூடத்துக்குச் சென்றுவிட்டனர்.

ஹேமா காலேஜில் மூன்றாவது வருஷப் படிப்புப் படித்துக் கொண்டிருந்தாள். ஆறு மாதத்துக்கு முன்பு தான் அவள் இண்டர்மீடியேட் பரீட்சையில் தேறிய கையோடு அவளது விவாகமும் ஆகியிருந்தது. சில பெண்களைப் போல் அவள் விவாகமானதும் படிப்பை நிறுத்தி விடவில்லை. தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தாள். காலேஜ் படிப்பை அரைகுறையாய் விடக் கூடாதென்று ஜகதீசனும் சொல்லியிருந்தான். ஹேமா படித்து வந்த காலேஜிலேயே ஜகதீசன் மேல் வகுப்பில் படித்துக் கொண்டிருந்ததால் விவாகம் ஆவதற்கு முன்பே அவனைப் பற்றி அறிந்து கொள்ளும் சந்தர்ப்பங்கள் ஹேமாவுக்கு ஏற்பட்டிருந்தன. அவனுடைய உயர்ந்த நோக்கங்களும் கொள்கைப் பற்றும் அவள் மனதை ஆகர்ஷித்தன. அதேமாதிரி ஹேமாவின் அழகு, புத்தி கூர்மை, தன்னடக்கம் ஆகிய குணங்கள் ஜகதீசன் மனதிலும் உயர்ந்த இடம் பெற்று விட்டன. ஒருவருக்கொருவர் நேரில் பேசிப் பழகிக் கொள்ளும் சந்தர்ப்பம் ஏற்படாத போதிலும் பரஸ்பரம் அவர்கள் மனதில் தோன்றியிருந்த மதிப்பு நாளாக ஆக அவர்களையறியாமலே வளர்ந்து வந்தது. இந்நிலையில் பெற்றோராகப் பார்த்து முடித்து வைத்த மணம் அவர்களது மனப்பொருத்தத்திற்கு முத்திரை வைத்தது போல் அமைந்து விட்டது. கலியாணமான மறு மாதமே பி. ஏ. பரீக்ஷையில் தேறிய ஜகதீசன் வைத்தியக் கல்லூரியில் இடம் பெற்றுச் சென்னை சென்று விட்டான். அதன் பிறகு இப்போது தான் முதல் தடவையாக அங்கிருந்து வருகிறான். ஆகவே அவன் வருகையைக் குறித்து ஹேமா அளவுக்கு மீறிய ஆவலும்

பரபரப்பும் கொண்டிருந்ததில் ஆச்சரியம் ஏதும் இல்லை. தந்தியடித்திருந்தபடி முதல் வண்டியிலேயே அவன் வராதது அவளுக்குச் சிறிது ஏமாற்றமளித்தாலும், இதற்குள் எப்படியாவது வந்துவிடுவான் என்ற நம்பிக்கை அவளது ஏமாற்றத்தை மறக்கடித்து விட்டது.

கூடத்து ஊஞ்சலில் அவள் வந்து உட்கார்ந்தபோது அவள் மனம் ஜகதீசனைப் பற்றித் தகப்பனார் கூறிய வார்த்தைகளையே இன்னும் எண்ணிப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தது. தன் கணவனுடைய உயர்ந்த குணத்தைத் தந்தையும் அறிந்து கொண்டிருக்கிறார் என்ற பெருமை அவளுக்கு. சென்னையிலிருந்த ஜகதீசன் அவளுக்கு அடிக்கடி கடிதம் எழுதிக் கொண்டிருந்தான். அவற்றின் மூலம் அவனது மனப்பண்பு முழுவதையும் அவளால் அறிந்து கொள்ள முடிந்தது. அவ்வளவு உயர்குணமுள்ளவனைக் கணவனாக அடைந்த பெருமை மட்டுமல்ல; அப்படிப்பட்டவன் மனதில் முன்பே தன்னைப்பற்றி உயர்ந்த மதிப்பு இருந்து வந்தது என்ற விஷயமே நினைக்கும் போதெல்லாம் அவளை நெஞ்சு தழுதழுக்கச் செய்தது. அவன் தன்னிடம் எப்படிப் பழகுவான், என்னென்ன பேசுவான் என்றெல்லாம் எண்ணிப் பார்க்கப் பார்க்க, அந்த எண்ணங்களுக்கு முடிவே இருக்காதுபோல் தோன்றியது.

"மாப்பிள்ளைக்கு இது பிடிக்கும்! அது பிடிக்கும் என்று என்னென்னமோ தயார்செய்யச் சொன்னாயே! அவ்வளவும் வீண்போகிறதே என்று தான் கஷ்டமாயிருக்கிறது" என்று கூறிக் கொண்டே அவளருகே வந்து உட்கார்ந்தாள் தாயார்.

"ராத்திரி அவ்வளவையும் மறுபடி ஒரு தரம் செய்தால் தீர்ந்தது!" என்று சிரித்தாள் ஹேமா. சட்டென்று அவள் முகத்தில் சிந்தனை தேங்கியது. "நிச்சயமாகப் பத்து மணி வண்டிக்கு வருவதாக இருந்தாலொழிய அப்படித் தந்தியடித்திருக்க மாட்டாரே! அவர் புறப்பட முடியாதபடி என்ன அசந்தர்ப்பம் நேர்ந்திருக்கும் என்றுதான் கவலையாயிருக்கிறது" என்றாள்.

"அப்பா சொன்னது போல் வண்டி தவறியிருக்கலாமில்லையா?"

"நேரம் தவறி எதுவும் செய்யும் வழக்கம் அவரிடம் கிடையாதே!"

தாயார் சிரித்தாள். "அதற்குள் மாப்பிள்ளையைப் பற்றி இவ்வளவு தூரம் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறாயா?" என்றாள்.

அதே சமயம் பதஞ்சலி சர்மா பரபரப்புடன் உள்ளே வருவதைப் பார்த்ததும்



இருவரும் எழுந்து நின்றனர். சொல்ல வந்ததைச் சொல்லுவதா வேண்டாமா என்று தயங்குபவர் போலச் சர்மா ஊஞ்சலில் வந்து உட்கார்ந்து கொண்டார்.

"என்ன, அப்பா?" என்றாள் ஹேமா, ஆவலை அடக்க முடியாமல்.



போய் ஞாபகப் பி காக இருந்து விட்ட னென்றே ஜகதீசன் விஷயத்தில் நாம் நினைக் முடியாது."

"பின்பு வேறு எந் விதத்தில்தான் இதற்கு சமாதானம் சொல் முடியும்?" என்றா அம்மாள்.

"ஒன்றுமில்லை, ஹேமா! இப்போது ஒரு கட்சிக்காரர் வந்தாரே, அவர் சொன்ன விஷயம் புதிர்போலிருக்கிறது" என்றார் சர்மா.

"என்ன?"

"அவரும் இந்தப் பத்து மணி வண்டியில் தான் வந்தாராம். அதே வண்டியில் மாப்பிள்ளை வந்து கொண்டிருந்ததைப் பார்த்ததாகச் சொல்கிறார்."

"நிஜமாகவா?"

"பார்த்தது மட்டுமல்ல; மாப்பிள்ளையிடம் பேசவும் பேசினாராம். இங்குதான் வந்து கொண்டிருப்பதாக மாப்பிள்ளை சொன்னாராம்."

"அப்படியானால் நீங்கள் எப்படி வெறுங்கையுடன் திரும்பி வரும்படி ஆயிற்று?" என்றாள் ஹேமாவின் தாய்.

"அதனால்தான் கட்சிக்காரர் சொல்வது புதிர்போலிருக்கிறது என்றேன்."

"நீங்கள் சரியாகப் பார்த்திருக்க மாட்டீர்கள்."

"அப்படியே வைத்துக் கொண்டாலும், மாப்பிள்ளை இதற்குள் தாமாக வீட்டிற்கு வந்து சேர்ந்திருக்கவேண்டுமே!"

"அதிருக்கட்டும். இந்தக் கட்சிக்காரருக்கு மாப்பிள்ளையை முன்பே தெரியுமா?" என்றாள் தாயார்.

"கல்யாணத்திற்கு வந்திருந்த போது பார்த்திருக்கிறார். அந்த ஞாபகத்தில் தான் இப்போது மாப்பிள்ளையைப் பார்த்ததுமே அடையாளம் புரிந்து கொள்ள முடிந்திருக்கிறது."

"உங்கள் கட்சிக்காரரும் மாப்பிள்ளையும் ஒரே பெட்டியில்தானே உட்கார்ந்து வந்தார்கள்?"

"கட்சிக்காரர் இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்தாராம். நம்முடைய மாப்பிள்ளைதான் மூன்றாவது வகுப்பைத் தவிர வேறெதிலும் பிரயாணம் செய்வதில்லையே!" என்றார் சர்மா.

"அப்படியானால் நடுவழியில் மாப்பிள்ளைக்கு என்ன நேர்ந்திருக்க முடியும்?" என்றாள் அம்மாள் கவலையுடன்.

"அதுதான் எனக்கும் புரியவில்லை. நடுவில் எங்காவது இறங்கி மறுபடியும் ஏற அவகாசமில்லாமல் வண்டியைத் தவற விட்டிருப்பானென்றோ, இறங்க மறந்து

அவ் விருவரின் பேச்சை ஹேமாவின் காதுகள் கேட்டுக் கொண்டிருந்தனவே ஒழிய அவள் மனம் ஒரு நிலையில் இல்லாமல் தத்தளித்துக் கொண்டிருந்தது. "அப்பா........." என்று ஏதோ கூ வாயெடுத்தவள் மேலே பேச முடியாம தொண்டையடைக்க நின்றுவிட்டாள்.

ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த சர்ம எழுந்து அவளருகே வந்து பரிவுடன் அவள் தோளில் கை வைத்தார். "அ வசியமாக மனதைக் குழப்பிக் கொள் ளாதே, ஹேமா. தவிர்க்க முடியாத கா ணம் இருந்தாலொழிய ஜகதீசன் இ வித ஏமாற்றத்தை உனக்குக் கொடு இருக்க மாட்டான்" என்று அவர் கூறி தும் ஹேமாவின் முகம் பிரகாசமடை தது., எவ்வளவு தெளிவான சிந்தனை அப்பாவுக்கு! அதனால்தான் அவ்வள பிரபல வக்கீலென்று பெயர் வாங்கியிரு கிறார்! இந்தச் சாதாரண விஷயம் அவள் மனதில் தோன்ற மறுத்து விட்டதே. எதிர்பார்த்தபடி வராவிட்டால் இங்குள்ள மனது தவித்துப் போய் விடும் என்று ஜகதீசனுக்குத் தெரியாதா? ஆனால் நடு வழியில் அவ்விதம் தவிர்க்க முடியாத காரணம் என்ன நேர்ந்திருக்க முடியும்?

"ஸார், தந்தி!" என்ற குரல் கேட்டதும் ஹேமா தரையில் கால் பதியாமல் வாசலுக்கு ஓடிவந்து நடுங்கும் கைகளில் தந்தியை வாங்கிக் கொண்டாள். அதை பிரித்துப் பார்க்க அவளுக்குத் தைரியமில்லை. நேரே தகப்பனார் கையில் கொடுத்து விட்டு ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்துக் கொண்டு வேறு பக்கம் பார்த்து நின்று விட்டாள்.

தந்தியைப் பிரித்ததும் ஊர்ப் பெய தான் முதலில் சர்மாவின் கண்களில் பட் டது. சிதம்பரத்திலிருந்து நாற்பது மைல் தூரத்திலுள்ள ஒரு சிறிய கிராமம் அது. அந்த ஊர் நாட்டாண்மைக்கார அம்பல காரன் சர்மாவின் கட்சிக்காரன்கூட. ஒரு வேளை அவன் ஏதாவது தன் வழக்கு சம்பந்தமாகத் தந்தி அடித்திருக்கிறானோ? இல்லையே! கீழே 'ஜகதீசன்' என் றல்லவா பெயர் போட்டிருக்கிறது!

"எதிர்பாராத காரணத்தால் இங்கு இறங்கும்படி ஆயிற்று. கவலைப்பட

வேண்டாம். அடுத்த வண்டியில் கட்டாயம் புறப்பட்டு வருகிறேன்.—ஜகதீசன்."

ஒரு தரத்துக்கு இரண்டு தரமாக மனதுக்குள் வாசித்துப் பார்த்து விட்டு அதையே உரக்கப் படித்துக் காட்டினார் சர்மா. "நாம் கவலைப்படுவோம் என்று அறிந்து ஸ்டேஷனிலிருந்தே தந்தி கொடுத்திருக்கிறான்" என்றார்.

இதன் மத்தியில் ஹேமாவும் தந்தியைத் தகப்பனார் கையிலிருந்து வாங்கி மனங்கொண்ட மட்டும் படித்துத் தீர்த்தாள். அப்போதைக்கு மனது ஆறுதலடைந்தது போல் தோன்றியதே ஒழிய முழு நிம்மதி ஏற்படவில்லை. "அடுத்த வண்டி ராத்திரிதானே அப்பா!" என்றாள் கலக்கத்துடன். அதுவரை எப்படிப் பொறுத்திருப்பது என்ற தவிப்பை அவள் குரலில் உணர்ந்தார் சர்மா. ஹேமா கூற நினைத்ததன் எதிரொலி அவர் மனதிலும் எழுந்தது.

"புத்தூர் இங்கிருந்து நாற்பது மைல் தானே, காரிலேயே நேரில் சென்று என்ன ஆயிற்றென்று பார்த்துக் கொண்டு மாப்பிள்ளையைக் கையோடு அழைத்துக் கொண்டு வந்து விடுகிறேன்" என்றார்.

"அப்படியானால் நானும் உங்களுடன் வருவேன்" என்றாள் ஹேமா.

"நீங்கள் வரும்வரை நான்தான் நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருக்க வேண்டும்!" என்றாள் அவள் தாயார்.

"நீ இங்கில்லாவிட்டால் தீராதே!" என்று சிரித்தார் சர்மா.

* *

அவர் ஓட்டிச் சென்ற வேகத்தில் சர்மாவின் கார் அடுத்த ஒரு மணி நேரத்திற்குள்ளேயே புத்தூர் ஸ்டேஷனை அடைந்தது. ஸ்டேஷன் மாஸ்டர் முன்பே சர்மாவுக்குப் பரிச்சயமானவர்தான். ஜகதீசன் ஸ்டேஷனிலிருந்தே தந்தி கொடுத்திருந்தானாதலால் ஸ்டேஷன் மாஸ்டரிடம் தந்தியைக் காட்டி விசாரிப்பது எளிதாயிருந்தது. 'உங்கள் பேருக்குத் தந்தியடிக்கும் போதே அவர் உங்கள் மாப்பிள்ளையாய்த்தான் இருக்க வேண்டுமென்று நினைத்தேன். நான் நினைத்தது சரியாய்ப் போயிற்று" என்றார் அவர்.

"என்ன சந்தர்ப்பத்தில் அவர் இங்கே இறங்கும்படி ஆயிற்றென்று உங்களுக்குத் தெரியுமா?" என்றார் சர்மா ஆவலுடன்.

"அதைப் பற்றி அவர் ஒன்றும் சொல்லவில்லை. நானாக ஊகித்துத் தெரிந்து கொண்டது எவ்வளவு தூரம் சரியாயிருக்குமென்று எனக்குத் தெரியாது. அவரோடு வயதான ஒரு ஸ்திரீயும் அவர் இருந்த பெட்டியிலிருந்து இறங்குவதை நான் கவனித்தேன்."

"அந்த ஸ்திரீ எப்படி இருந்தாள்?"

"மிகவும் வருத்தப்பட்டவள் போல் காணப்பட்டாள். எதையோ நினைத்து வழியெல்லாம் அழுது கொண்டிருந்தாளென்று அவள் முகத் தோற்றத்திலிருந்து அறிந்துகொள்ள முடிந்தது. கஷ்டத்தைப் பற்றித் தெரிந்து கொண்டு அவளுக்கு உதவி செய்வதற்காகவே உங்கள் மாப்பிள்ளை இங்கு இறங்கியிருக்க வேண்டும்."

"விசித்திரம்தான்!" என்றார் சர்மா.

"அந்த ஸ்திரீயை ஒரு மாட்டு வண்டியில் ஏற்றிய பிறகு தான் உங்களுக்குத் தந்தி கொடுக்க வேண்டுமென்ற நினைவு அவருக்கு உண்டாகியதென்று நினைக்கிறேன். அவசர அவசரமாக என்னிடம் வந்து தந்தியின் வாசகத்தை எழுதிக் கொடுத்துவிட்டு அதே பரபரப்புடன் வெளியே சென்று விட்டார்" என்று முடித்தார் ஸ்டேஷன் மாஸ்டர்.

மேல் விவரம் ஊருக்குள் சென்று தான் தெரிந்து கொள்ள வேண்டும் போலிருக்கிறது" என்று சர்மா ஸ்டேஷன் மாஸ்டருக்கு நன்றி தெரிவித்து விட்டு ஹேமா



"நேற்று ஒரு பெண் பிள்ளை அஞ்சு ரூபாய் கேட்டாள். கொடுக்க முடியாது என்று சொல்லி விட்டேன். அப்புறம் ராத்திரி பெல்லாம் தூக்கமே வரவில்லை."

"யாரப்பா அப்படி உன் மனதை இளக்கிய பெண் பிள்ளை?"

"வேறு யார்? என் பெண்சாதி தான்!"



"என்ன ஊர் இது, உங்கள் சபாவிலே சுருதி கூடச் சேராத பாடகர்களுக்கெல்லாம் அடிக்கடி சான்ஸ் கொடுக்கிறீர்களே!"

"அடேடே! நான் இத்தனை நாளாக உம்மைக் கவனிக்கவே யில்லையே! உமக்கும் ஒரு 'சான்ஸ்' தருகிறேன்!"

---

வுடன் மீண்டும் காரில் ஏறிக் கொண்டு காரை ஊருக்குள் ஓட்டிச் சென்றார்.

இரண்டே தெருக்களுள்ள சிறிய ஊராகையால் அவர்கள் அங்கு செல்வதற்கு முன்பே ஜகதீசனைப் பற்றிய பேச்சு ஊரில் பரவிப் போயிருந்தது. ஆகவே அவனிருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பதில் சிரமமேதும் ஏற்படவில்லை.—தனியான கூரை வீடு. சுவர், தரை எல்லாமே மண்ணால் பூசப்பட்டிருந்தும் சுத்தமாக மெழுகி மாசு மறுவின்றித் தோன்றியது. அந்த வீட்டினுள்ளே நார்க் கட்டிலில் படுத்திருந்த மெலிந்த உருவத்தைச் சிரத்தையுடன் கவனித்தவாறு கட்டிலருகே முக்காலியில் உட்கார்ந்திருந்தான் ஜகதீசன். சர்மா ஹேமாவுடன் உள்ளே பிரவேசித்ததைக் கூட அவன் உணரவில்லை. பரிசோதனை முடிந்ததும் தான் அவன் தலை நிமிர்ந்தான். "நான் கொடுத்த மருந்து வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறது. இன்று ராத்திரி கழிந்து விட்டால் அப்புறம் கவலையில்லை" என்று கட்டிலின் மறுபுறம் நின்று கொண்டிருந்த ஸ்திரீயைப் பார்த்துக் கூறினான்.

"ஆண்டவன் தான் உங்களைக் கொண்டு சேர்த்தாருங்க. நீங்க தான் என் பொண்ணுக்கு மாங்கல்யப் பிச்சை கொடுக்கணும்." என்று அந்த ஸ்திரீ கூறிக் கொண்டிருக்கும் போதே உள்ளேயிருந்து ஓர் இளம் பெண் விம்முவது காதில் விழுந்தது. "நீங்கள் வருத்தமே பட வேண்டாம். இனி மேல் அபாயமில்லை" என்று கூறிய ஜகதீசனின் பார்வை சட்டென்று ஹேமாவும் அவள் தந்தையும் நின்றிருந்த திசையில் திரும்பியது. "ஹேமா!" என்று கூவி விட்டான்.

ஹேமாவின் வாயிலிருந்து வார்த்தையே கிளம்பவில்லை. உணர்ச்சிப் பெருக்கில் அவளது பேசும்சக்தி ஸ்தம்பித்துவிட்டது.

"தந்தி பார்த்ததும் புறப்பட்டு வந்தோம்" என்றார் சர்மா சுருக்கமாக.

"நீங்கள் வந்ததே நல்லதாயிற்று. இங்கு இருக்கும் நிலைமையில் ராத்திரி வண்டியில் புறப்படுவது கூட முடியும் என்று தோன்றவில்லை" என்றான் ஜகதீசன்.

"எல்லாம் புரிந்து கொண்டேன், மாப்பிள்ளை! நான் செய்ய வேண்டியது ஏதாவது இருந்தால் உடனே சொல்லுங்கள்" என்றார் சர்மா.

"டிப்திரியா கேஸ். நான் கவனிப்பதை விட, தேர்ந்த டாக்டர் யாரையாவது அழைத்து வருவது நல்லது..."

"இப்போதே மறுபடியும் போய் நம்முடைய டாக்டரை அழைத்துக் கொண்டு வருகிறேன்" என்றார் சர்மா.

"நான் இங்கேயே இருக்கிறேன்." என்று ஹேமா சொன்னபோது ஜகதீசன் முகம் ஆனந்தத்தால் மலர்ந்தது.

"எவ்வளவோ சந்தோஷமா புதுத் தீபாவளி கொண்டாடப் போறவங்களை என் பாவம் நிறுத்தி வச்சிடுத்தே!" என்றாள் அந்த ஸ்திரீ.

"உன் மருமகனுக்குப் பிரக்ஞை திரும்பி உன் பெண்ணின் முகத்தில் சிரிப்பு காணும் வரை நாங்கள் இங்கிருந்து நகர மாட்டோம்" என்றான் ஜகதீசன்.

டாக்டரை அழைத்துக் கொண்டு சர்மா திரும்பி வந்த பொழுது அவர் மனைவியும் அவருடன் வந்து விட்டாள். ஹேமாவும் ஜகதீசனும் தங்கள் முதல் தீபாவளியை அந்தக் குக்கிராமத்தில் மாசு மறுவற்ற அந்தச் சிறு மண் வீட்டிலேயே கொண்டாடினர். சேவையுணர்ச்சி அவர்கள் உள்ளத்தை அழகு படுத்திக் கொண்டிருந்ததால் மங்கள ஸ்நானமும் புது உடைகளும் அவர்கள் கொண்டாட்டத்திற்குத் தேவையாயில்லை. வானில் விடி வெள்ளி பூத்து வீடெல்லாம் வண்ண ஒளி சிதறும் அந்த வேளையில், உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்த கணவன் உடலில் புதிய ஜீவ ஓட்டத்தைக் கண்டு அந்த கிராமிய மங்கையின் கண்கள் காட்டிய பிரகாசம் ஒன்றே, தங்கள் பண்டிகைக்குத் தெய்வீகத் தன்மை அளிக்கப் போதுமானதென்று உணர்ந்து, அவ்விருவர் நெஞ்சம் தழுதழுத்தது.

# இவ்வளவுதானா!


டப்
பட்!
டப்
பட்
படார்
பட்
பட்
டேய், துணி துவைக்கிற சத்தம் பட்டாஸ் வெடிக்கற மாதிரியே இருக்குடா!
டப்
பட்
பரு

# கம்பர் தரும் காட்சி

## டி.கே.சி

### 311. மனுஷன் அம்பா கொன்றது!

துயரமும் ஆங்காரமும் ராவணனைப் படாதபாடு படுத்திக் கொண்டிருந்தன. பக்கத்திலிருந்தவர்கள் யாதொரு வார்த்தையும் பேச முடியாதபடி பயந்து நடுநடுங்கிக் கொண்டு நின்றார்கள்.

இந்த சமயத்தில அதிகாயனது தாய் தானமாலை புலம்பிக் கொண்டும் அலறிக் கொண்டும் வந்தாள்.

* * *

ராவணனது காலில் விழுந்தாள். ஒரு பக்கமாய்ச் சாய்ந்து விழுந்தாள். அவளுடைய தோள்கள் தரையில் திடீரென்று விழவும் தரை பெயர்ந்து விட்டது. அப்படி விழுந்தாள்.

வீழ்ந்தனள் அரக்கன்தாள் மேல்,
வேயின்தோள் நிலத்தைமே வப்
போழ்ந்தனள், பெரும்பாம்பென் ன
புரண்டனள், பொருமிப்பொங் கிச்
'சூழ்ந்தனை கொடியாய்' என்(று)
துடித்தனள் துயரவெள் ளத்(து)
ஆழ்ந்தனள், புலம்பலுற் றாள்,—
அழக்கண்டும் அறிந்திலா தாள்.

[வீழ்ந்தனள் அரக்கன் தாள் மேல்: வீழ்ந்தாள் ராவணனது காலில்; வேயின் தோள் நிலத்தை மேவப் போழ்ந்தனள்: வேய் போலத் (வேய்: ஒரு வகை மூங்கில்) திரண்ட தோள் நிலத்தில் மோதவும் தரை நொறுங்கிற்று; பொருமிப் பொங்கி: விம்மித் துயரம் மேலிட்டு; 'சூழ்ந்தனை கொடியாய்' என்றுத் துடித்து: கேடு விளைத்து விட்டாயே கொடிய ராவணனே என்பதாக அலறி, உடல் நடுங்கி; அருந் துயர வெள்ளத்து ஆழ்ந்தனள்: பெரிய அடக்க முடியாத துயர வெள்ளத்தில் மூழ்கினாள்; புலம்பலுற்றாள்: ஒரே கதறலாய்க் கதறினாள்; அழக் கண்டும் அறிந்திலாதாள்: அவளுடைய சாதாரணமான வாழ்க்கையில் பார்த்தால், வேறு ஒருவர் அழ அதைப் பார்த்தும் இல்லையென்று தான் சொல்லத் தோன்றும். அத்தகைய திடசித்தம் கொண்ட தானமாலை, யாரும் அறியாத துயரத்துக்குள்ளாகி அழுது புலம்புகிறாள்]

* * *

ராவணனை ஏறிட்டுப் பார்த்தவளாய்ப் புலம்புகிறாள்:

"சக்தியில்லாமலா போய் விட்டது இப்போது உனக்கு, பகைவர்களுடைய வலிமையை இல்லாமலாக்கத் தீர்க்க?

"முதல் நாள் யுத்தத்தில் உன்னுடைய வீரம் தொலைந்து போய் விட்டதே. அதை மறுபடியும் பெறவில்லையா நீ.

"எத்தனையோ புகழுக்கு இலக்காய் உள்ளது உன்னுடைய தோள் வலி. அதுவும் தொலைந்து போய் விட்டதா!

"அறிவாளிகள் சொன்ன வார்த்தையைக் கேட்டும் உணரவில்லையோ நீ.

"நான் சொன்னதைத்தான் நீ எங்கே கேட்கப் போகிறாய்?"




முதல் எலி:— தீபாவளிப் பட்சணத்தை ஏகமாகத்தின்றுவிட்டேன், வயிற்றுவலி தாங்கவில்லை. என்ன செய்யலாம்?

இரண்டாவது எலி:— தீபாவளி மருந்து செய்து வைத்திருப்பார்களே, அதைச் சாப்பிட்டு விடேன்!

மாட்டாயோ இக்காலம்
வல்லோர் வியந்திடுக்க,
மீட்டாயோ வீரம்,
மெலிந்தாயோ தோளாற்றல்,
கேட்டாய் உணர்ந்திலையோ,
என்னுரையும் கேளாயோ,—
காட்டாயோ என்னுடைய
கண்மணியைக் காட்டாயோ!

[மாட்டாயோ: சக்தி இல்லையோ; மீட்டாயோ வீரம்: வீரத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ள வில்லையோ; கேட்டாய் உணர்ந்திலையோ: கேட்டும் உணர்ந்து கொள்ள வில்லையே; காட்டாயோ என்னுடைய கண்மணியைக் காட்டாயோ: என் மூன்றும் காட்ட மாட்டாயா, என் கண்மணி அதிகாயனைக் காட்ட மாட்டாயா?]

* * *

"வஜ்ரா யுதத்தோடு கூடிய இந்திரனுக்கும் தோற்காத வீர மகனைப் பெற்றாள் என்று வான லோகத்திலுள்ள வானோர்களும் என்னைப் புகழ்வார்களே! அந்தப் புகழுக்குப் பாத்திரமானவள் அல்லவா நான்! என் மகன் அதிகாயன் மந்தரகிரி போன்ற தோள் கொண்ட வீரன் அல்லவா?

"அப்படிப்பட்ட அதிகாயன் ஒன்றுக்கும் உதவாத ஒரு மனிதன் எய்த அம்புக்கு இரையானானே."

'இந்திரற்கும் தோலாத
நன்மகனை ஈன்றாள்' என்(று)
அந்தரத்து வாழ்வாரும்
ஏத்தும் அளவத்தேன்,
மந்தரத்தோள் என்மகனை,
மாட்டா மனிசன்தன்
உந்து சிலைப்பகழிக்(கு)
உன்னைக் கொடுத்தேனே!

[அந்தரத்து வாழ்வாரும் ஏத்தும் அளவத்தேன்: வானலோகத்திலுள்ள தேவர்களும் புகழ்வதற்கு உரியவளான நான்; மாட்டா மனிசன் தன்: ஒன்றுக்கும் இயலாத ஒரு சாமான்ய மனிதனுடைய; உந்து சிலைப் பகழிக்கு உன்னைக் கொடுத்தேனே: வில்லில் இருந்து வரும் ஒரு அம்புக்கு இரையாகக் கொடுத்தேனே, பாவி!]

தானமாலையின் துயரம் இன்னும் எப்படியெல்லாமோ அவள் மனசை இழுத்துக் கொண்டு போகிறது.

---

# குழந்தை விமலா

குகப்ரியை

பங்குனி மாதம். வெய்யில் வெகு கடுமையாகக் காய்ந்துகொண்டிருந்தது. உண்டகளைப்புக்குப்பின் சற்று சிரம பரிகாரம் செய்து கொள்வோமென்று சாய்வு நாற்காலியில் சாய்ந்தேன். பள்ளிக்கூடத்திலே வாக்கு வன்மைப் போட்டி. கமலா உரத்த குரலில் பாவந் தோன்ற ஏதோ ஒரு கட்டுரையின் பகுதியை வாய்விட்டுப் படித்துக் கொண்டிருந்தாள்.

"குழந்தை குடும்பத்தின் பொக்கிஷம். இல் வாழ்க்கையின் இன்பக் கனி. கணவனுக்கும் மனைவிக்கும் இடையேயுள்ள ஆனந்த முடிப்பு. இதயங்களை இணைக்கும் பொற்சரடு. மலரினில், நிலவானில், மழலையர் முகத்தில் எல்லாம் இயற்கையின் எல்லையற்ற பேரழகைக் காண்கிறோம். 'கோடித் துக்கம் ஒரு குழந்தையின் முகத்தால் தெளியும்' என்கிறது பழமொழி. ஆலம் விதை மிகப் பெரிய விருட்சத்தைத் தன்னுள் கொண்டிருப்பது போல வருங்கால உலகின் செயலை எல்லாம் குழந்தைதான் தன் அகத்தே கொண்டு நிற்கிறது. குழந்தைகளினால்தான் மனிதரிடம் நற்குணங்கள் ஏற்படுகின்றன. வளருகின்றன..." என்று இந்த ரீதியில் படித்துக்கொண்டே போனாள் கமலா. என் மனம் பல வருடங்கள் பின்னோக்கிச் சென்றது. அன்றை வீட்டில் நடந்த அந்தச் சம்பவம், அப்பொழுது நடைபெறுவது போல் என் அகக் கண்களின் முன்பு விரிந்தது.

• • •

சாயங்காலம். பறவைகள் கூண்டு அடையும் தருணம். செக்கர் வானம் விதவிதமான வர்ணக் கோலங்களை இழைத்து இழைத்துக் கலைத்துக் கொண்டிருந்தது; மேல்மாடியின் திறந்த முற்றத்திலே நின்று அந்திவானத்தின் அழகிலே ஈடுபட்டு மெய்மறந்திருந்தாள் அவள். "சூரியன் மறையும் தோறும் உன் வாழ்க்கையில் இடைத்தற்கு அரிய ஒரு நாள் கழிந்து விடுகிறது. ஆகவே நல்ல செயல்களை நினைக்கும் பொழுதே செய்துவிட வேண்டும்" என்று யாரோ எழுதியிருந்த ஒரு தொடர் அவள் மனத்தில் தோன்றிற்று.

வாலீசுவரர் கோயிலிலே சந்தியா கால பூஜை நடந்து கொண்டிருந்தது. கணகண வென்று மணிகள் துரித காலத்திலே ஒலித்துக் கொண்டிருந்தன. மேளக்காரன் மிகவும் அற்புதமாக பூர்விகல்யாணி ராகத்தை ஆலாபனம் செய்து கொண்டிருந்தான். அதே சமயத்தில், பழைய மேளத்தின் நினைவுச் சித்திரம் அவள் உள்ளத்தில் மெல்ல எழுந்தது.

தன் அழகிய மருதாணி பலித்த சிறு கைகளைக் கணவன் பற்றியதும், பாதசரமும் கொலுசும் அணிந்த தன் பாதங்களை இரு கைகளாலும் பற்றி அவன் அம்மியின் மீது வைத்ததும் இப்படிப் பல காட்சிகள் நினைவில் தோன்றி அவளை மெய் சிலிர்க்கச் செய்தன. அவள் கண்களில் தாரை தாரையாய்க் கண்ணீர் பெருகலாயிற்று.

"என்ன பணம்! என்ன பவிஷு! என்ன இருந்தாலும் அப்பாவுக்கு இவ்வளவு பிடிவாதம் வேண்டாம். அவர்கள் ஏழைகள் என்று தெரிந்துதானே பெண் கொடுத்தார். அதனாலென்ன! நான் போய்க் குடித்தனம் செய்ய மாட்டேனா! வீட்டு வேலைகள் அதிகம் செய்து பழக்கமில்லை என்பார். வாஸ்தவந்தான். ஆனால் பழக்கம் செய்துகொள்ள எவ்வளவு நாளாகும்! இந்த அற்ப விஷயம் இவ்வளவு வயதாகியும் இவர்கள் இருவருக்கும் புரியவில்லையே! அப்பாவும் சரி; மாமனாரும் சரி! ஒருவருக் கொருவர் சளைத்தவர்களல்ல. பெரியவர்கள் எப்படியாவது தொலையட்டும்...... இவர் தானாயிற்று, 'இவளும் ஒரு பெண்தானே, இவளுக்கு மனசு என்று ஒன்று உண்டு. உணர்ச்சிகளும் உண்டு' என்பதைப் பற்றி நினைக்கவே மாட்டாரா! தோன்றலே தோன்றாதா!.........அவர் மறுக்கிறாரோ! யாருக்குத் தெரியும்! அவரைச் சொல்வதில் பயனென்ன! குற்றம் நம் மீது. என்னதா னிருந்தாலும் உள்ளூரில் பெற்றவர்களும் வீடும் வாசலும் இருக்கும் பொழுது சுயமரியாதையுள்ள எவன் வேட்டகத்திலே வந்து வசிக்க விரும்புவான்! இத்தனை வயதாகியும் அப்பாவுக்கும் துளிகூட விவேகமில்லை. பெண் வீட்டோடு 'வாழாவெட்டி' என்று பட்டம் வாங்கிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாளே என்று யோசித்துத் தான் பார்க்கிறாரா! 'வாழாவெட்டிப் பெண்ணானால் என்ன! உன்னையும் ஒரு பிள்ளை என்று நினைத்துக் கொள்கிறேன். படிக்க வைத்து விடுகிறேன்; உத்தியோகம் பண்ணேன்' என்கிறார். சம்பாதிப்பதும் சாப்பிடுவதும்தான் வாழ்க்கையின் லட்சியங்களா! இவைகள்தான் வாழ்க்கையின் லட்சியங்கள் என்றால் வெறும் சோற்றுக்கும் துணிக்கும் தான் பெண்கள் கணவனை எதிர்பார்க்கிறார்களா! இவர் படித்தவர்தான். இவருக்கு மேலே ஒரு முழம் அவரும் படித்தவர்தான். நாகரிகம், 'கல்ச்சர்' என்றெல்லாம் பேசுகிறார். முடிவு என்ன! இரண்டு பேரும் போட்டி போடுவதுதான் மிச்சம். அங்கே புக்ககத்தில் உட்காரவே எனக்குப் பொழுதிராதாம்...இங்கே ஐந்து வருஷமாய் உட்கார்ந்து, உட்கார்ந்து என்ன பலனைக் கண்டேன்! நகை நட்டு, ஆள் அம்பு, பணம் பவிஷு எல்லாமிருந்துவிட்டால் போதுமா? மனசுக்கு நிம்மதியில்லாமல், இந்தப் பாழும் போலி வாழ்க்கை யாருக்கு வேணும்! அப்பா அனுப்பமாட்டேனென்றால், அந்த வீம்புக்காக என் வாழ்க்கையையே பலியிட்டு விடுவதா!......விஷயம் இப்படித்தான் ஆகிவிட்டது. இளமை மிடுக்கில் அந்தக் கர்வமும், அகங்காரமும் இல்லாவிட்டால் பேசாமல் அவர் கூப்பிட்டபொழுது கூடவே போயிருக்க மாட்டேனா! எனக்கும் அந்த நாளில் அவ்வளவு

அகம்பாவம் இருக்க வேண்டாம்தான். இப்படி சிறு பொறி பெருந் தீ ஆகி விடுமென்று கண்டேனா! தெரியா விட்டால் தானென்ன! 'அம்மா, அப்படி நடவாதே, இப்படி நட...' என்று ஒரு வார்த்தை புத்திமதி சொல்லியிருக்கக் கூடாதா......' சொன்னால் மட்டும் கேட்டிருப்பேனா!—என்றெல்லாம் ஓடின அகிலாவின் எண்ணங்கள்.

மணி ஒன்றடித்தது. வீதியில் கலகலப்பு, சிலுக் சிலுக் என்று தண்டை ஒலிக்க வந்து கொண்டிருந்தாள் விமலா. இடையில் வெட்பில் சரிகைக் கரை போட்ட பட்டுப் பாவாடை. இளம் பச்சை நிறத்தில் அழகாய்த் தைக்கப் பட்ட சொக்காய். தலைப் பின்னல் இரு தோள்களிலும் புரண்டு கொண்டிருந்தது. புஷ்ப சரங்கள் இருகாதின் பின் புறங்களிலும் சூடியிருந்தாள். வெய்யிலின் மிகுதியினால் முகம் சிவக்க அவள் ஓடிவந்த காட்சியிலே மெய் மறந்து ஈடுபட்டிருந்தாள் அவள். அவளது சிந்தனைகளின் தொடர் எதிர் வீட்டிலிருந்து கிளம்பிய பேச்சின் ஒலியால் கலைந்தது. "கூட்டம் வந்த புத்தியோ! குலம் வந்த ஆசாரமோ! அந்த அறுதலி மகளுடன் நம்ம ராசாத்தியை அனுப்பாதே. அவர்கள் சகவாசமே நமக்கு வேண்டாம். அகம்பாவம் பிடித்த கும்பல். உன்னூர், அடி கிலத்திலே மன்மதன் மாதிரி புருஷன்; எரிக் கொண்டாளாம் பிறந்தகத்திலே! பணமிருக்கிறதாம், பணம்! பணத்தைக் கொண்டு உடைப்பில் போடு. அந்தப் பிள்ளை தெய்வமென்று. பாவம், மானி, வேறொருவளாய் இருந்தால் இதற்குள் இரண்டாம் கல்யாணம் செய்து கொண்டு குழந்தையும் குஞ்சுமாய் இருப்பான். தாயாரும் ஆனமட்டும் வேப்பிலை அடித்துப் பார்த்தாளாம். குனிந்த தலை நிமிராமல் எழுந்து போய் விடுவானாம்" என்று உரத்த குரலில் சொல்லிக் கொண்டிருந்தாள் எதிர் வீட்டுக் காமாட்சி அம்மாள்.

அகிலா மனத்தில் அலைகள் பொங்கி எழுந்தன. தன்னைப் பற்றியும் தன் கணவரைப் பற்றியும் ஊரார் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் அவள் நெஞ்சையே பிளப்பது போலவும், மறு விநாடி மெல்லிய மலர் கொண்டு, தன் இதயத்தைத் தொடுவதைப் போலவும் மாறி மாறித் தோன்றி வதைத்தது.

* * *

"அம்மா, நாளைக்கு எங்கள் பள்ளிக்கூடத்து டான்ஸிலே என்னையும் சேர்த்துக்கப் போகிறார்களாம்" என்று கூறியவளாய் ஓடி வந்தாள் குழந்தை விமலா. இரு கைகளையும் நீட்டி அந்தப் பொற் பதுமையைத் தழுவிக் கொண்டாள் அகிலா. அவள் கண்கள் நீரைப் பெருக்கின. குழந்தை கவனித்துவிடப் போகிறாளே என்று அவள் நினைக்குமுன் "ஏம்மா அழறே! தாத்தா கோவிச்சுண்டாரா!" என்று மென் சொல்லால் கேட்டாள் குழந்தை விமலா. அவளையும் மீறித் துக்கம் பீறிட்டு எழுந்தது.

"அழாதேம்மா, எங்க பள்ளிக்கூடத்துக்கு அந்தண்டை வாய்க்கால் தெருவு இல்லே. அதிலிருக்கும் ஒரு மாமா எங்களுக்கெல்லாம்



நோயாளி:—டாக்டர் ஸார், இப்பொழுது ஜுரம் எப்படியிருக்கிறது? கொஞ்சமாவது இறங்கியிருக்கிறதா?



டாக்டர்:—பேஷாக இறங்கியிருக்கிறது. நேற்று 103 டிகிரி இருந்தது. இன்று 101 டிகிரி தான் இருக்கிறது!

நோயாளி:-என்ன ஸார் இது? இப்படி இரண்டும் ஒன்றுமாக இறங்கிக் கொண்டே போனால் ஒரு மாதம் ஆகும் போலிருக்கிறதே, ஜுரம் முழுவதும் இறங்குவதற்கு?

'வாதாம் பப்ரமிட்டு' கொடுத்தா. எத்தனை பெரிசு தெரியுமா கொட்டை!" என்று மூடியிருந்த கையைத் திறந்து காட்டினாள் விமலா. "அம்மா, அந்த மாமா ரொம்ப நல்லவர். எனக்கு, கமலாவுக்கு, ரோஜாப்பூ ராஜத்துக்கு எல்லோருக்கும் ஆளுக்கு இரண்டு இரண்டு கொடுத்தார். ஒண்ணு தின்னுட்டு, உனக் கொண்ணு கொண்டு வந்தேன்" என்று உற்சாகத்துடன் கூறினாள் குழந்தை.

'பளிச்' சென்று ஒரு மின்னல், ஒருவேளை அது அவராகத்தான் இருக்குமோ! 'அறிந்த ஞானியும் மறப்பரோ மக்கள்மேல் காதல்' என்ற தொடர் அவள் மனத்துள் எழுந்தது. இதுபோன்ற உவமைகளை இளம் வயதில் உபாத்தியாயர் எடுத்துச் சொல்லி அதை ஒட்டிச் சொன்ன கதைகளும் அவள் நினைவில் எழுந்தன. இதற்குள் உள்ளேயிருந்து பேச்சுக் குரல் கணீர் என்று காதில் வந்து விழுந்தது.

"அவன் தான் அந்தப் பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கெல்லாம் பப்ரமிட்டு வாங்கிக் கொடுக்கிறானும். அவன் தாயார் இனியாள் கல்யாணத்துக் கோடிக்கிறாள். இது ஒன்று என்னத்துக்கு இடறுகட்டை, குறுக்கேன்னு விஷத்தைக் கொடுத்தாலும் கொடுப்பாள். சாலாட்சி பின்னே தானே, எதை வேணுமானாலும் செய்வாள்" என்ற வேம்பு மாமியின் குரல் உச்சஸ்வரத்தில் கேட்டது. இதயத்திலே ஆயிரம் தேள்கள் ஏக காலத்தில் கொட்டுவது போலிருந்தது. சற்று முன் எதிர் வீட்டுக் காமாட்சி சொன்ன வார்த்தைகள், இப்பொழுது இந்த வேம்பு பேசுகிற பேச்சு, அதைத் தன் பாட்டி காது கொடுத்துக் கேட்கும் அழகு, இதிலிருந்து விளையக் கூடிய விபரீதங்கள், எல்லாம் ஒன்றன் பின் ஒன்றாய்த் தோன்ற அவள் கண்களினின்றும் கண்ணீர் மீண்டும் பெருகலாயிற்று.

"அம்மா, வாயைத் திற" என்று வற்புறுத்தினாள் குழந்தை. அவளையு மறியாமல் வாயைத் திறந்தாள். கை சூடேறிப் 'பிசுக்' கென்றிருந்த அந்த ரோஜா நிறப் பாதாம் பப்ரமிட்டை அன்புடன் தன் அருமைத் தாயின் வாயினுள் போட்டாள்.

தமிழ் நாட்டிலே பெரும்பான்மையான அக்ரகாரங்களில் தீபாவளியை ஒட்டி, பலாவன் வைப்பார்கள். அதாவது களிமண்ணால் ஒரு அழகிய நந்தி உருவம் செய்து தினந்தோறும் பூஜை செய்து வருவார்கள். சிறு பெண்கள் வீடு வீடாகச் சென்று கும்மியடித்தும், கோலாட்டம் போட்டும் பணம் வசூலிப்பார்கள். அந்தத் தொகையைக் கொண்டு தான் பலாவன் ஆற்றில் விடும் உற்சவம் நடக்கும். மேளதாளம், இரவு நேரமானால் வாணவேடிக்கை, தீவட்டி முதலியனவுகளுடன் விமரிசையான விருந்தும் நடைபெறும். வீட்டிற்கு ஒன்று வீதம் சித்திரான்னங்கள், பக்ஷணம் இவைகளையும் செய்வதுண்டு.

அக்கிரகாரத்திலிருந்து கிளம்பும்பொழுதே பலாவனுக்குப் பின்னால் கொடி பிடித்து, கையில் சந்தன தாம்பூலங்களுடன் பெண்களும் புறப்படுவார்கள். மேளக்காரனும், மற்றுமுள்ள கிராமத்துப் பெரியவர்களும் முன்னே செல்ல 'பலாவன்' ஒரு பெரிய ராஜகுமாரன் போல் பவனி வரும். விதவிதமாய் உடுத்து அழகிய பறவைக் கூட்டங்கள் போல் சிறு சிறு வட்டமாய் மேளக்காரரது நடையைப் பின் பற்றி எல்லோரும் நடப்பர். பலாவன் இழுக்கும் குழந்தைகள் உற்சாக மிகுதியினால் "ஜோரா" வென்று கூச்சலிட்டுக் கொம்மாளமடிக்கும். இடையிடையே, நீ முன்னே, நான் முன்னே என்ற போட்டி, ஒருவரை யொருவர் தள்ளுதல், குட்டுதல் முதலிய ரௌத்திர நாடகங்களும் நடைபெறும். ஊராரை வாயிலிட்டு மெல்லுவதையே தொழிலாகக் கொண்ட பெண் தெய்வங்களின் குட்டி விமரிசனங்களும் ஒருபுறம் நடக்கும். திரும்பும்பொழுது எந்தெந்த சரித்திரப் பாடல்களைச் சொல்லுவது, யார் முறை வைத்துப் பாடுவது என்ற சர்ச்சை இன்னொரு புறம் நடைபெறும்.

சிலர் பாடிக் கும்மியடித்தும், சிலர் சிறு சிறு வட்டங்களாகச் சூழ்ந்து கோலாட்டம் போட்டும் ஆற்றை அடையும் பொழுது மணி பத்து அடித்து விடும்.

அன்று அகிலாவுக்கு இந்த வேடிக்கை விநோதங்களில் கலந்துகொள்ள விருப்பமேயில்லை. தாயின் வற்புறுத்தல் ஒரு புறமும், குழந்தையின் கொஞ்சலுடன் கூடிய வேண்டுகோள் ஒரு புறமும் இழுக்கத் தலையை வாரிக் கொண்டு ஒரு நல்ல புடவையை எடுத்து உடுத்திக்கொண்டாள். விமலாவுக்குத் தாமரைப் பூக் கலரில் சரிகைக் கரை பாவாடை, வெண் பட்டாலான சட்டை, இடையில் ஒட்டியாணம், கழுத்தில் முத்து நெக்லேஸ், ஆகியவற்றை அணிவித்தாள். இந்த அலங்காரத்துடன் நடைக் குச்சுடன் கூடிய தலைப்பின்னலை வீசி வீசி அசையும் வண்ணம் கையிலிருந்த வர்ணக் கோலாட்டத்தைத் தடவித் தடவி அழகு பார்த்தவளாய் நடந்து கொண்டிருந்தாள் குழந்தை விமலா. மெல்ல பலாவன் ஆற்றை அடைந்தது.

பலாவன் ஆற்றில் இறங்கும் தருணம். "ஐயோ! பெரிய வீட்டு விமலா தாண்டி!" என்ற ஒரு கூக்குரல். கூட்டத்தில் ஒரே பரபரப்பு. "எங்கே!" என்று அலறியவளாய் ஓடி வந்தாள் அகிலா. "விமலா!

வெள்ளத்திலே!'' அதற்குமேல் என்ன பேசி னூர்களோ அவனுக்கே தெரியாது. குனித்துத் தலையை உதறிக் கொண்டிருந்த ஒரு மனிதன் வெள்ளத்திலே குதித்து, குழந்தையின் பாவாடையின் சாயல் தெரிந்த இடத்தை ஒட்டி நீழ்தினுன். ஒரு நிமிஷம் ஒன்றுமே தெரியவில்லை. இருவரும் வெளியே வரு வார்கள் என்று எதிர்பார்த்திருந்த இடத் திற்குச் சற்றே தள்ளி முதலில் அவன் தலை தெரிந்தது. தெய்வ நதியாய் அந்த ஆற்றிலே வேகம் அதிகம் கிடையாது. இந்தப் பேச்சி யம்மன் துறை ஆழமும் அதிகமில்லை என்று பெயர். இருந்தாலும் கார்த்திகை மாத வெள்ளப் பெருக்கு! கரையிலிருந்தவர்கள் ஆவலும் பீதியும் நிறைந்த கண்களோடு வெள்ளத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் வேண்டிக் கொண்ட தெய்வங்களுக் குக் கணக்கே யில்லை. அகிலாவோ ஒரே கற்சிலை யாய் நின்று விட்டாள்.

சற்று நேரத்திற்கெல்லாம் குழந்தையுடன் கரை ஏறினுன் அவன். ''அடி தங்கமே!.....'' அதற்குமேல் பேச அவன் நா எழவில்லை. கரையேறிய அவன் குழந்தையைத் தலைகீழாய்ச் சுற்றினுன். களகளவென்று வாயிலும், மூக்கி லும் தண்ணீர் வெளிவந்தது. தற்செயலாய் வேடிக்கை பார்க்கும் பொருட்டுவந்த டிரைவர் ஒருவன் காரிலிருந்து இறங்கி வந்து, தனக்கு 'முதல் உதவி' தெரியுமென்றும், இருந்தாலும் கருப்பூர் பெரிய ஆஸ்பத்திரிக்குப் போகலா மென்றும் சொன்னுன். இதற்குள் மூச்சும் மெதுவாய் வரத் தொடங்கியது. குழந்தை யைத் தோளில் சாத்தியபடி மோட்டார் காரை நோக்கி நடந்தான் அவன். அவனைப் பின் தொடர்ந்து காரில் ஏறினுள் அகிலா. தன் தாயார், தகப்பனுருக்கு விஷயம் தெரிவிக்க வேணுமே என்ற எண்ணமே அவள் நெஞ்சில் எழவில்லை. மறு வினாடி குழந்தை, குழந்தை யைக் கரையேற்றிய அம் மனிதர், அகிலா இம் மூவருடன் கருப்பூரை நோக்கிப் பறந்தது கார்.

* * *

அந்த வட்டாரத்துக்குள் அது பெரிய ஆஸ்பத்திரியானுலும் கருப்பூர் ஆஸ்பத்திரி அளவில் சிறியது. ஒரு லேடி டாக்டர் உண்டு. சுமார் பத்து நோயாளிகள்தான் தங்கலாம். அந்த ஆஸ்பத்திரியின் ஓர் அறையில் சோகமே உருவெடுத்தாற் போல் உட்கார்ந்திருந்தாள் அகிலா. எதிரேயுள்ள கட்டிலில் அவன் படுத் திருந்தான். உடல் மரவாய்க் கொதித்துக் கொண்டிருந்தது. 'அப்பா அம்மா' என்று முனகியவாறு படுத்திருந்தான் அவன். அடுத்த அறையிலுள்ள கட்டிலில் துவண்டு தன் நினை வற்றுக் கிடந்தாள் விமலா.

அவள் முகத்திலே இன்னதென்று விவரிக்க முடியாத ஒரு பயமும் குழப்பமும் இருந்தன. இறந்த கால நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாய் இரகு முகைத்து எதிரே வந்து கொண் டிருந்தன. வாழ்க்கையின் இன்பமான அந்த வளர்ந்த காலம். அதை ஒட்டிய சம்பவங்கள்; விமலா பிறந்தது. அந்த சமயம் தன்மீது அகிலா பொழிந்த அந்த எல்லையற்ற அன்பு— இவைகளெல்லாம் தோன்ற ஒரு நெடுமூச் செறிந்தாள் அவள்.

''அம்மா! அப்பா! தாள முடிய வில்லையே,...என்ன வலி! என்ன வலி!'' என்று முனகினுன் அவன்.

''எங்கே வலிக்கிறதுடப்பா! தலையையா! உடம்பையா!'' என்று மிகுந்த பரிவுடன் கேட்டாள் அவன் தாய்.

''ஒன்றுமே சொல்லத் தெரியவில்லை. தலை பிளக்கு போகிறது'' என்று மிகவும் ஈன ஸ்வரத்தில் சொன்னுன் அவன்.

அகிலாவுக்கு எங்கேயோ கனவிலே சஞ்சரிப் பதுபோலிருந்தது. ஒன்றுமே விளங்காத ஒரு நிலை. ''அட தெய்வமே! குழந்தைக்கும் அவ ருக்கும் சேர்ந்தாற் போலவா நிமோனியா ஜுரம் வரவேணும். வந்தால்தான் என்ன! இப்படியா......! பெரிய டாக்டரோ ஒன்றுமே சரியாய்ச் சொல்லாமல் மென்று விழுங்குகிறார். முகத்திலே சுபாடமில்லை. என்னென்ன பாவம் செய்து, இப்படி வரம் வாங்கி வந்திருக் கிறேனோ! ஒரே ஒரு முறைதான் கண் திறந்து பார்த்தார். 'என்ன! நீயா இங்கே வந் திருக்கே!' அவ்வளவுதான்! அந்த இரண்டு வார்த்தைகளிலே, அடடா எத்தனை விதமான

## நிஜந்தான்!



அர்த்தங்கள் ஒலிக்கின்றனவோ! என்ன வெல்லாம் நினைக்கிறோ! எப்படித் தெரியும்.......பெரிய டாக்டர் பட்டணத்திலிருந்து டெலிபோன் செய்திருக்கிறாராம் மருந்துக்கு. அவர்கள்தான் என்ன பிரம்மாவா! என்ன செய்வேன்! பகவானே! என்னை இன்னும் எத்தனை விதம்தான் சோதிக்கப் போகிறாயோ!

"இந்தச் சாக்கிலே மறுபடி அவருடைய அன்பைப் பெற முடியுமா என்று தவிக்கிறேன். அதற்காக மிகவும் அருமையான பொருளைத் தியாகம் செய்து விடும்படி நேருமோ! அப்படி நேர்ந்தால்.....! அந்த அன்புக்கு இவ்வளவு உயர்ந்த பொருளைக் கொடுக்கிறாயா என்று கேட்க, அந்தத் தெய்வத்திற்கென்ன அத்தனை கல் நெஞ்சமா! அவர் சற்றே தெளியும் பொழுது பேசுகிற அந்த வார்த்தைகளிலேதான் என்ன பரிவு! என்ன கனிவு!

"'குழந்தைக்கு என்னமா யிருக்கு. கொஞ்சமாவது ஆகாரம் செல்லுகிறதா! கண்களைத் திறந்து பார்த்தாளா!' என்றெல்லாம் கேட்கிறார். இந்தக் குழந்தை நேற்றுவரை யாரோ வென்று இருந்தவர்தானே! இன்று திடீரென்று புதிய பாசம்வந்து விடுமா! சீ, எனக்கு ஏன் இந்தத் துர்புத்தி! அந்த வெள்ளத்திலே குதித்து......என் கண்மணி தங்கத்தைக் காப்பாற்றினாரே! எவ்வளவு அன்பு குழந்தையின்மேல் அவருக்கு! என் தங்கமாவது! அவருடைய தங்கம்தான். நான்தான் அவருடைய உரிமையை அபகரித்த பாவி. மகா பாவி. அவர் யாரா யிருந்தபோதிலும் குதித்து எடுத்திருப்பார். அவ்வளவு இளகிய மனது அவருக்கு என்றுதான் ஊரே சொல்லுகிறதே! என் ஒருத்தியின் விஷயத்தில்தான் கருணை இல்லாமற் போய்விட்டது. அதற்குக் காரணம் அவரா! அம்மாவும் அப்பாவும் சொன்னால் தானென்ன! நான்தானே அவர்கள் பேச்சைக் கேட்டுக்கொண்டு கூத்தாடினேன். என் அகம் பாவம்தான் குறுக்கே வந்து குடியைக் கெடுத்தது......அவர் மாமனார் மட்டும் குறைந்தவரா! எல்லாம் என் விதி. சக்தத்திற்கு ஏற்றார்போல சமைத்ததாம் கூழ்பானை. பெரியவர்களின் பணத் திமிரும், அகம்பாவமும் கடைசியில் என் குழந்தையின் தலையிலேயா வந்து விடிய வேண்டும்" என்றெல்லாம் ஓடின அவள் சிந்தனைகள்.

இரவு பத்து மணி. ஆஸ்பத்திரி முழுவதும் ஒரே நிசப்தம். நள்ளிரவாகி விட்டது போன்ற ஒரு அமைதியான சூழ்நிலை. சற்று நேரத்துக்கொரு முறை வீதியிலே நாய்கள் ஒன்றுடன் ஒன்று உறுமிச் சண்டை யிடும் சத்தம்.

பெரிய டாக்டர், யாரையோ எதிர் பார்த்தவராய் உள்ளுக்கும் வாசலுக்குமாய் நடந்து கொண்டிருந்தார். குழந்தை விமலா சோர்ந்து வாடித் துவண்டு போட்டபடி கிடந்தாள். கிழவரும், கிழவியும் சற்றே உட்காருவதும் எழுந்து டாக்டரிடம் ஏதோ கேட்பதுமாய்க் கிடை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தனர். அவன் தன் அறையி லிருந்தபடியே, "அம்மா, குழந்தைக்கு எப்படி இருக்கிறது!" என்று மிகவும் மெல்லிய குரலில் கேட்டான்.

"தேவலை!" என்று துயரம் தோய்ந்த குரலில் பதில் சொன்னாள் கிழவி. "பட்டணத்திலிருந்து டாக்டரும் பெனிஸிலினும் வந்து விட்டதா!" என்றான் முனகும் குரலில். அவன் தொண்டை கரகரத்தது.

"மெயில் ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்டாச்சு, ஊதியுமாச்சு. இன்னும் காரைக் காணோம்."

"மருந்தை எடுத்துக்கொண்டு வரேன்னு டெலிபோனிலே சொன்னாரே" என்றான் அவன்.

"என்னமோப்பா, பகவான் காப்பாற்றணும்!" என்று பெருமூச்செறிந்தாள் கிழவி. மறு விநாடி கார் வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து தோல் பையும், கையுமாய் இறங்கினார் பெரிய டாக்டர்.

* * *

ஆயிற்று. நாட்கள் பத்தும் பதினைந்தும் ஆகிவிட்டன. அகிலாவுக்கு இன்னும் ஆஸ்பத்திரியில்தான் வாசம். அவன் மெல்ல மெல்ல நடந்து வந்து குழந்தையின் கட்டிலின் அருகில் நிற்பான்.

அன்றுதான் குழந்தை விமலா கண் திறந்து பார்த்துப் பேசத் தொடங்கினாள். அவன் கட்டிலின் அருகே வந்து நின்ற சமயமும் அவள், "அம்மா" வென்று கூப்பிட்டு ஆச்சரியத்துடன் கண்களை மலர விழித்த தருணமும் ஒன்றா யிருந்தது. அவள் ஆச்சரியத்துடன் அவனை ஏறிட்டுப் பார்த்தவளாய், "அம்மா, அம்மா! இந்த மாமாதான் பாதாம் பப்ரமிட்டு....." அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை.

அகிலாவின் கண்கள் நீரைப் பொழிந்தன. "அகிலா" என்ற வார்த்தைகள் அவன் வாயினின்றும் வந்தன. அந்தக் குரலின் பரிவிலே துவண்டுபோனாள் அவள். புக்ககம் போன பொழுது, எப்பொழுதாவது உற்சாகம் மேலிட்டபொழுது அவனுடைய குரல் அவ்வாறு இருக்கும். அந்த இன்ப நினைவு அவள் நெஞ்சை உருக்கியது. மேலும் விம்மி விம்மி அழலானாள்.

"இதென்ன அசட்டுத்தனம்! இனிமேல் பயமில்லையென்று டாக்டர் சொல்லிவிட்டார். என்ன கவலை! எதற்காக அழுவது!" என்று முகவாயைப் பற்றி நிமிர்த்தினான் அவன். அவனுக்குத் துக்கம் பீறிட்டு எழுந்தது.

"டக் டக் டக்" என்று பூட்ஸ் ஓசை. "ஹலோ, ராமசப்பு! இனிமேல் குழந்தையை வீட்டுக்கு அழைத்துப் போகலாம். நாளையோ நாளை மறுநாளோ அழைத்துப் போகலாம்" என்றார் டாக்டர். அவனை ஏறிட்டுப் பார்த்தாள் அகிலா. "எந்த வீட்டுக்கு!" என்று கேட்பதுபோல் இருந்தது அந்தப் பார்வை.

* * *

"ஓ ஜகத்ஜனனி!" என்று ரேடியோவில் பாடும் குரல் கேட்டு என் கனவு கலைந்தது. "அப்பா! இன்று குரலிசையிலே அகிலா மாமி வீட்டு விமலா பாடுகிறாள்" என்றாள் எங்கள் கமலா.




## 6

பிஜியிலுள்ள இந்தியரின் வாழ்க்கை கிட்டத்தட்ட தாய் நாட்டின் நிலைமையை ஒட்டியே அமைந்திருக்கின்றது. ஜாதி வித்தியாசம், மத வித்தியாசம் போன்ற வேறுபாடுகள் சமூக வாழ்க்கையில் இல்லை. இந்தியருக்குள் கலப்பு விவாகம், விதவா விவாகம் முதலியன நடந்து வருகின்றன. கோயில்கள், திருவிழாக்கள், பஜனைகள் முதலியன நடந்து வருவதால் புராதன வழக்கங்களை ஒட்டி நடந்து செல்கிறார்கள். இந்தியர்கள் அதிக எண்ணிக்கையில் இருப்பதால் பிஜி இந்திய மயமாகிவிடும் என்று அஞ்சுவாரும் உண்டு. ஒரு அமெரிக்க ஆசிரியர் பிஜியைப் பற்றி ஒரு புத்தகம் எழுதி அதற்கு (The Litt e India of the Pacific) 'பசிபிக் மகா சமுத்திரத்திலுள்ள சிறிய இந்தியா' என்ற பெயரைக் கொடுத்திருக்கிறார்.

இந்தியருக்கும் கைவித்தியருக்கும் மிடையில் ஒற்றுமை வளராதபடி விரோதப் பான்மை உண்டாகச் செய்ய முயற்சி செய்வாரும் உண்டு. ஆயினும் இதுகாறும் பிஜியில் எல்லா வகுப்பாரும் கலகமின்றி ஒத்து வாழ்ந்து வந்திருக்கிறார்கள். சமீபத்தின் நகரங்களிலும் இன்னும் சில பட்டணங்களிலும் குடியிருப்புக்குப் புதிய இடங்கள் வகுத்தபோது, வகுப்பு பேதங்களைக் கையாண்டு ஐரோப்பியருக்கென்றும், இந்தியருக்கென்றும், கைவித்தியருக்கென்றும் தனித் தனி இடங்கள் அமைத்திருக்கிறார்கள்.

இந்தியர் தங்கள் கல்வி அறிவைப் பெருக்குவதற்கும், தாய் பாஷைகளைக் கற்றுக் கொள்வதற்கும், தங்கள் பிள்ளைகளை முன்னுக்குக் கொண்டு வருவதற்கும் பகீரதப் பிரயத்தனம் செய்து வருகிறார்கள். அக்காரியத்தில் அவர்களுக்குத் தாய் நாட்டிலிருந்து உதவி கிடைத்தல் மிகவும் அவசியம்.

இந்தியர்கள் பெரும்பாலும் விவசாயிகளே. தாய் நாட்டைப்போல அவர்கள் ஒன்று சேர்ந்து வரிசையாக வீடு கட்டிக் கொண்டு கிராமங்களையும், பட்டணங்களையும் ஏற்படுத்திக்கொண்டு இருக்கவில்லை. பெரும்பாலும் தனித் தனி வீடாய் அவரவர்கள் தோட்டங்களில் கட்டிக் கொண்டு வசிக்கிறார்கள். பொதுவாகவே பிஜியில் பெரிய பட்டணங்கள் கிடையாது. இருக்கும் சில பட்டணங்களும் மிகச் சிறியவை. ஆனால் மின்சார விளக்குகள், தண்ணீர்க் குழாய்கள், கோர்ட்டுகள், போலீஸ், தபாலாபீஸ், தந்தி ஆபீஸ் முதலிய வசதிகள் இச் சிறிய பட்டணங்களிலும் உண்டு. தபாலாபீஸ்கள் இருந்தாலும் கடிதங்கள் முதலியன வீடு வீடாய்ப் போய்ப் பட்டுவாடாச் செய்யப்படுவதில்லை. ஜனங்கள் அடிக்கடி தபாலாபீஸுக்குப் போய், 'கடிதங்கள் வந்திருக்கின்றனவா?' என்று கேட்டு வாங்கிக் கொள்ள வேண்டும். 'போஸ்ட் பாக்ஸ்' வைத்துக் கொள்ளும் முறை போஸ்டாபீஸுக்கு வெளியில் உண்டு.

இந்தியாவிலிருந்து விதைகளை வரவழைத்து மாமரம், புளியமரம், வேப்பமரம், கருவேப்பிலை மரம், முருங்கை மரம் முதலிய மரங்களையும் கத்திரி, வெண்டை, புடலை, பீர்க்கை முதலான பலவகைக் காய்கறிச் செடிகளையும்

பயிர் செய்திருக்கிறார்கள். இதில் அதிகமாய்த் தென்னிந்தியரே கைக்கொண்டு செய்திருக்கின்றனர். இன்னும் பிறநாட்டு மரங்களான பெரட் புருட், பப்பிட்டாவும், பலவிதமான ஆரஞ்சுச் செடிகளும் இன்னும் மரவள்ளி, சர்க்கரைக் கிழங்கு முதலிய பலவகைக் கிழங்குகளும் ஏராளமாகக் கைவித்தியரால் பயிரிடப் படுகின்றன.

உலகத்திலேயே எங்கும் இல்லாத அதிசயம் பீஜியில் உண்டு. அது என்னவென்றால் பணச் செலவில்லாமல் செய்யப்படும் ரயில்வே பிரயாணம். ஸி. எஸ். ஆர். கம்பெனியார் தங்கள் ஆலைகளுக்காகப் போட்டிருக்கும் ரயில்வேத் தொடரில் முன் காலத்தில் ஆட்களைக் கொண்டு சேர்ப்பதற்காகச் சில ரயில் வண்டிகளை நடத்தினார்கள். அவ் வழக்கத்தை யொட்டியே இப்பொழுதும் இனாமாக ரயில் வண்டித் தொடர் நடந்து கொண்டிருக்கின்றது. யார் வேண்டுமானாலும், எங்கே இடம் கிடைக்கிறதோ அங்கே ஏறிக் கொள்ளலாம். இஷ்டமான இடத்தில் இறங்கிக் கொள்ளலாம். சுமார் 150 மைல் தூரம் இம்மாதிரிப் பிரயாணம் செய்யக்கூடிய பாதைகள் உண்டு. சில பாகங்களில் வாரத்துக்கு இருமுறையும், சில பாகங்களில் வாரத்துக்கு ஒரு முறையுமாக இந்த ரயில் ஓடும். இன்னும் சில பாகங்களில் இரண்டு வாரத்துக்கு ஒரு முறையும் ஓடுகின்றது.



முதல்வர் :—ஏதோ சிக்கனத்தைப் பற்றிப் பிரமாதமாகப் பேசிக் கொண்டிருந்தாயே, அதை உன் மனைவியிடம் சொல்லுவது தானே?

இரண்டாமவர் :—சொன்னேனே!

முதல்வர் :—ஏதாவது பயன் விளைந்ததா?

இரண்டாமவர் :—அவளிடம் சிக்கனத்தைப் பற்றிப் பிரசாரம் செய்யப் போய் நான் சிகரெட்டை விட வேண்டியதாயிற்று!

கைவித்தியர் தங்கள் சொந்த அரசாங்கத்தின் மூலம் (Provincial Government) வரி விதித்துத் தங்கள் பிள்ளைகளுக்குக் கட்டாய ஆரம்பக் கல்வி புகட்டுதல் முதலிய காரியங்களை நடத்திக் கொள்ளுகிறார்கள். ஆனால் இந்த வசதி இந்தியர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. வெள்ளைக்காரர், ஐரோப்பியர் இவர்களைப் போலவே இந்தியர்களும் வெளிநாட்டினராகக் கருதப்படுகின்றனர். ஆகவே இந்தியர்களுக்குத் தலைவரி விதிக்கப்பட்டிருக்கிறது. (இன்கம் டாக்ஸ்) வருமான வரி கொடுப்பவர்களுக்குத் தலைவரி கிடையாது. இதை வைத்துப் பார்க்கும் பொழுது ஐரோப்பியர் எல்லாரும் அநேகமாய் வருமான வரி கொடுப்பவர்களாக இருப்பார்கள். ஆகவே, ஐரோப்பியர்கள் Residential Tax என்று சொல்லப்படும் இந்தத் தலைவரி கொடுக்க மாட்டார்கள். இந்தியர்கள் அநேகமாய் எல்லோருமே கொடுப்பார்கள். வரிகள் எல்லாம் பெரும்பாலும் ஏற்றுமதி இறக்குமதி வரியாகவே வசூலிக்கப்படுகின்றது.

பிரிட்டிஷ் சர்க்காரால் நியமிக்கப்படும் கவர்னர் ஆட்சி செய்கிறார். ஆலோசனை சொல்லும் ஒரு 'எக்ஸிகியூட்டிவ் கௌன்சில்' உண்டு. அதில் உள்ள ஏழு மெம்பர்களும் நாமினேஷன் மெம்பர்கள். சட்டசபை ஒன்று உண்டு. அதில் பாதிக்கு மேற்பட்ட அங்கத்தினர் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள். மற்ற மெம்பர்களிலும் அதிகப்படியான மெம்பர்கள் நாமினேஷன் மெம்பர்கள். மூன்று இந்தியரும் மூன்று ஐரோப்பியரும் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். கைவித்தியர் 'வோட்' சுதந்திரத்தை உபயோகிக்கத் தெரியாதவர்கள் என்றும் அவர்களுக்கு நாமினேஷன் மாத்திரமே போதும் என்றும் தங்கள் கூட்டத் தலைவர்களின் மூலமாய்ப் பெயர்களைப் பொறுக்கிக் கவர்னரிடம் கொடுத்து, அதிலிருந்து தக்கவர்களை நாமினேஷன் செய்யும்படி கவர்னரைக் கேட்டுக் கொள்ளும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

பீஜியில் மேல்படிப்பு இல்லவே இல்லை. 'ஸீனியர் கேம்பிரிட்ஜ்' பாஸ் செய்த சில மாணவர்கள் மட்டும் தங்கள் பெற்றோரின் பண உதவி கிடைத்தால் ஆஸ்திரேலியா கண்டத்துக்கு அருகிலுள்ள நியூஸிலண்டுக்கோ, அல்லது இங்கிலாந்துக்கோ சென்று, இந்தி ராவிலும், கைவித்தியராயிலும் படித்து வர வேண்டிய நிலைமையிலிருக்கிறார்கள். அப்படிச் சில பேர் படித்து வந்திருக்கிறார்கள். ஆனால் அப்படி அதிகம் பேர் போய்ப் படித்து வருவது இப்பொழுதுள்ள கல்வி இலாகா அதிகாரிகளுக்குப் பிடிக்கவில்லை போலும்! இல்லா

விட்டால் கல்வி இலாகா அதிகாரிகள் எவ்வித உதவியும் அளிக்க மறுப்பார்களா?

பிள்ளைகள் தாங்களே தகுந்த கியாரண்டி முதலியவைகளைப் பாங்கு மூலமோ அல்லது வேறு வழியாகவோ செய்து கொள்ள வேண்டியிருக்கிறது. ஆரம்பப் படிப்பிலும் பீஜியில் மற்றப் பிள்ளைகளுக்குரிய சௌகரியங்கள் இந்தியப் பிள்ளைகளுக்கு இல்லை. ஐரோப்பியப் பிள்ளைகளுக்கோ பிரத்தியேகமாகவும், விசேஷமாகவும் ஏற்பாடுகள் இருக்கின்றன.

இந்தியரின் அவமதிப்புக்குரிய சில அம்சங்களையும் அங்கே காணலாம். சமூகக் கட்டுப்பாடுகள் இல்லாதபோது எல்லோரும் ஒற்றுமையாயிருப்பார்கள் என்று எதிர்பார்க்கலாம். ஆனால் அவ்வாறில்லை. எத்தனையோ கட்சிகளும், பிரதிகட்சிகளும் ஏற்பட்டு ஒற்றுமை இல்லாது இருக்கிறார்கள். இரண்டாவதாக இந்தியர் என்றால் உண்மை பேச மாட்டார்கள் என்ற கெட்ட பெயர் எடுத்திருக்கிறார்கள். இது முற்றிலும் சரியில்லை என்றாலும் ஓரளவு வெட்கத்துடன் ஒப்புக் கொள்ள வேண்டியதாகவே யிருக்கிறது.

கோர்ட்டு வழக்குகளில் கோர்ட்டார் இந்தியரின் சாட்சியத்தை விடச் சாதாரணமாய் மற்றவர்களின் சாட்சியத்தையே நிஜமென்று நம்புவார்கள்.

தாய் நாட்டிலுள்ள இந்தியரின் இப்போதைய மனப்பான்மையை நோக்கினால் வெளிநாட்டு இந்தியரின் விபரீத நிலைமை ஆச்சரியப்படத் தக்கதாய் இல்லை. நம் மக்கள் சீர்குலைந்திருப்பதால் எங்கும் தைரியமாகப் பொய் பேசுகிறார்கள். பீஜியில் லஞ்சம் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. இந்தியாவிலோ எங்கும் லஞ்சம் என்ற பேச்சே இருக்கிறது. திருட்டும், மோசமும் அதிகமாகி விட்டன. உணவுப் பொருள்களில் கூடக் கலப்படம் செய்து விற்று லாபம் சம்பாதிக்க நம்மவர் பின் வாங்கவில்லை. பிற நாடுகளில் பிற பொருள்களில் ஒரு வேளை கலப்படம் செய்தாலும் உணவுப் பொருள்களில் செய்ய மாட்டார்கள் என்பதை உறுதியாக நம்பலாம். சாப்பிடும் பொருளில் கலப்படம் செய்வது நம்மை நாமே கொல்வதற்குச் சமானம்.

வெளிநாடுகளில் வீடுகளுக்குத் தெருப் பக்கங்களில் கூட ஜன்னல்களுக்கு இரும்புக் கம்பிகள் போடக் காணோம். அப்படித் திறந்த ஜன்னல் வழியாகச் சென்று ஒருவன் எதையாவது திருடிவிட்டால் அவனைப் பெரிய திருடன் என்று சொல்லுகிறார்கள். பெரிய திருட்டு ஏற்பட்டதாகப் பத்திரிகைகளில் எழுதுகிறார்கள். நான் பல நாடுகளைச் சுற்றிப் பார்த்து வந்தேன். நம்முடைய நாட்டைப் போல வீடுகளுக்கெல்லாம் இரும்புக் கம்பிகள் அந்நாடுகளில் போடப்படவில்லை. மேனாட்டு ஜனங்கள் செல்வத்தில் வாழ்வதால் திருட வேண்டுமென்ற எண்ணம் அவர்களுக்கு இல்லை. அது மாத்திரமின்றி அவர்கள் பிள்ளைகளையே அவ்வாறு வளர்க்கின்றார்கள். தவிர நம்முடைய நாட்டில் திருட்டும் மோசமும் ஏழைகளே செய்கிறார்கள் என்பதில்லை. நாமெல்லோரும் வீடு தப்பாமல் இரும்புக் கம்பி ஜன்னல் வைத்து உள்ளே வாழ்கிறோம். வெளிநாடுகளில் பணம் சேர்த்து வைக்கும் பாங்கிகள், பைத்தியக்காரர்களை வைத்திருக்கும் பைத்திய ஆஸ்பத்திரிகள், மிருகங்களை அடைத்து வைத்திருக்கும் மிருகக் காட்சிச்சாலைகள் ஆகிய மூன்றுக்கு மாத்திரமே எங்கும் பலமான இரும்புக் கம்

## நில்லுங்கோ, மாப்பிள்ளே!



பிகள் போட்டு வைத்திருக்கிறார்கள். நம்முடைய நிலைமை இந்த நூற்றில் எந்தக் கட்சியில் சேர்ந்தது என்பதை நாம் யோசித்துப் பார்க்க வேண்டும்.

வியாபார நாணயம், சமூக வாழ்க்கையில் ஒழுங்கு முறை நம்முடைய நாட்டில் இப்பொழுது இல்லவே இல்லை. நாணயத்தால் வியாபாரம் அதிகமாகும் என்ற படிப்பினையைப் பிறநாட்டு மக்கள் நன்றாக அறிந்திருக்கிறார்கள். நம்முடைய ஜனங்களோ மற்ற எல்லாரையும் விட முந்திக் கொள்ளவேண்டும் என்று ஒழுங்கு தப்பி நடக்க இச்சைப்படுகிறார்கள். பிற தேசங்களில் ஒருவருக் கொருவர் உதவியளித்து, நொடிந்து போனவனுக்கு ஒரு கை கொடுத்துத் தூக்கிவிட முற்படுகிறார்கள். அதனால் அவரவர் தேசத்து மக்களெல்லாம் சேர்ந்து முன்னேறுகின்றனர். நம்முடைய தேசத்தில் அடுத்தவர்களைக் கீழே தள்ளிப் பிரித்துவிட்டு முன்னால் செல்ல முயற்சிக்கின்றனர். அதனால் பரஸ்பரம் எல்லோருமே கீழ் நோக்கிச் செல்ல நேர்கின்றது.

லண்டன் முதலிய நகரங்களில் ஆளில்லாமல்கூட வியாபாரம் நடப்பதைப் பார்க்க ஆச்சரியமாயிருக்கின்றது. தானே இயங்கும் ஆட்டோமட்டிக் மிஷின்கள் மூலம் பணத்தைப் போட்டுச் சாமானைப் பெறும் வியாபாரத்தில் ஆச்சரியமில்லை. மிஷினுமில்லாமல், ஆளுமில்லாமல் சாமான்களை அடுக்கடுக்காய் வைத்துவிட்டு ஆளில்லாமல் விற்பனை செய்யப்படுவதைப் பார்த்தால் அதி ஆச்சரியமாயிருக்கிறது. தினப் பத்திரிகைகள், புத்தகங்கள், காய்கறிகள் மற்றும் அநேகச் சில்லறைச் சாமான்கள் இம்மாதிரி விற்கப்படுகின்றன. சாமான் வாங்க வந்தவர் யாரும், கடைக்காரர் இல்லையே, விற்பனையாளர் இல்லையே என்பதற்காகப் பணம் போடாமல் சாமானை எடுத்துக்கொண்டு போக மாட்டார்கள். யாரும் பார்க்கவில்லையே என்று பணத்தைக் கொண்டு போக மாட்டார்கள். தெருவில் விளையாடிச் செல்லும் பிள்ளைகள் கூடப் பணத்தையோ, அச்சாமான்களையோ தொடாமலிருப்பதைப் பார்க்க ஆச்சர்யம் உண்டாகிறது. பொது இடங்களிலும், ஆபீஸ்களிலும் எங்கே போனாலும் யாருக்கு என்ன உதவி வேண்டுமென்று கவலைப்பட்டுக் கேட்டு உதவி செய்வதிலும் ஒருவருக்கொருவர் மரியாதை காட்டுவதிலும் நம்மவர் வெளி நாட்டினரிடமிருந்து அநேக விஷயங்களைக் கற்றுக் கொள்ளலாம். அஹிம்சா தர்மத்தைப் பற்றி நாம் அதிகம் பேசுகிறோம். ஆனால் நம்மவர் வளர்க்கும் நாய், பூனை, மாடு, குதிரை முதலான மிருகங்களை எவ்வளவு கேவலமாக நடத்துகிறோம் என்பது வெளியூர்களில் சுற்றிப் பார்த்தால்தான் தெரிந்துகொள்ள முடியும். இன்னும் வீடு வாசல்களையும் ஊர் தெருக்களையும் வெளிநாட்டினர் எவ்வளவு சுத்தமாகவும் அழகழகாகவும் வைத்துக் கொள்கிறார்கள் என்பதைப் பார்த்துக் கற்றுக்கொள்ள வேண்டியவர்களாய் இருக்கிறோம்.

நாம் பிறநாடுகளிடமிருந்து விரைவில் கற்றுத் தெரிந்து கொள்ளுவது நமக்கு மேன்மையைக் கொடுப்பதாகும். கற்றுத் தெரிவதற்கும் வாழ்க்கையில் அநுஷ்டிப்பதற்கும் நம்மவர் ஜீவாதார சக்தியைத் திரும்பப் பெற்று ஆக வேண்டும். ஆன்ம ஞானப் பெருக்கெடுத்து அது தேசமெங்கும் பரவி எல்லோர் உள்ளத்தையும் புனிதப்படுத்தி உண்மையையும், வாழ்க்கையின் நோக்கத்தையும் விளக்கப்படுத்தல் வேண்டும். ஆன்ம சக்தியால் அறிவு கூர்மையாகும். ஆன்ம வலிமையால் மனோவலி பிறக்கும். மனவலி மிருந்தால் உடல் நலம் மேலோங்கும். இவ்விதத் தூய்மையும் வலிமையும் கொண்ட மக்கள் நாட்டுக்காக உழைத்தால் நாடு நல்ல நிலைமையை அடையும் என்பதில் என்ன தடை? முக்கியமாகச் சுதந்திரமுற்ற இக் காலத்தில் நாட்டை முன்னின்று நடத்துவோர், உத்தியோகத்திலிருப்போர், பொது வாழ்வில் ஈடுபடுவோர் ஆகியோர் வாய்மையும் தூய்மையும் உடையவர்களாய்த் தாமும் வாழ்ந்து மற்றவர்களையும் வாழ்விக்க வேண்டும்.

இது இங்ஙனமாக, உலகில் பிறநாட்டார் இந்தியாவின் பண்டைப் பெருமையை நினைந்து உணர்ந்து அவர்கள் இந்நாட்டின் மேலான உண்மைத் தத்துவங்களை அறிந்து கொள்ள ஆசைப்படுகின்றனர். ஆனால் அவர்கள், தங்கள் நாடு, தங்கள் மக்கள், தங்கள் நலம் என்றே கருதுகின்றனர். பிறநாட்டினரை மதிப்பதில்லை. பிறநாடுகளை 'விரோதி' நாடுகளாகவும் பாவிக்கின்றனர். இப்படிப்பட்ட குறுகிய மனப்பான்மை நீங்கவும், உலகமே ஓர் குலமாய்ப் பாவித்து உணரவும் மேலே சொன்ன ஆன்ம ஞானத் தெளிவு அவசியம் வேண்டப்படுவதாகும்.

எல்லா மக்களையும் எல்லாப் பொருள்களையும் இறைவனின் வடிவங்களாகவே காணும் பெருநோக்கு இந்திய மக்களுக்கே உரியது. இதற்காகவே இந்தியா ஜீவித்திருக்கின்றது. இந்த உண்மையைத் தானும் உணர்ந்து இத்தரணிக்கும் உணர்த்தி இந்நாடு தூய்மைப் பெருமையை மீண்டும் பெற்று உய்வதாக! உத்தமன் கருணை எங்கும் நிறைவதாக! ஓம் தத்ஸத்.

Regd. No. M. 4393